# பதினெட்டு கதைகள்

[illegible]

சுஜாதா

குமரிப் பதிப்பகம்
8, நீலா தெற்கு வீதி
நாகப்பட்டினம்-611 001

உள்ளே ● ● ● ●



விலை ரூ. 30-00

ஜே. கே. வெளியீடு

□ முதற் பதிப்பு : 1984 டிசம்பர்
□ இரண்டாம் பதிப்பு : 1995 மார்ச்

□ பதிப்பாளர் : புத்தகப்பித்தன்
□ அச்சிட்டோர் : துர்காதேவி பிரிண்டர்ஸ்,
13, குமரன் காலனி, சைதை,
சென்னை-600 015

# முன்னுரை

சுஜாதா
பங்களூர்

பலர் என்னிடம் கேட்டிருக்கிறார்கள் "உங்கள் சிறுகதைகள் எல்லாம் வெவ்வேறு புத்தகங்களில் சிதறியிருக்கின்றன, அவைகளில் சிறந்தவற்றை ஒரு தொகுப்பாக வெளியிடுங்களேன்"—நல்ல யோசனைதான். இருந்தாலும் ஒரு சிக்கல்! சிறந்த சிறுகதை என்றால் என்ன? அதற்கு பதில் கிடைத்து விட்டதென்றால் நான் இனி கதைகள் எழுத வேண்டியதில்லை. "இன்றைக்கு 9-05க்கு நான் ஒரு 'சிறந்த சிறுகதை' எழுதினேன்" என்று எந்த எழுத்துக்காரனாலும் சொல்ல முடியாது. தன் எழுத்தில் உள்ள குறைகளையும் பாசாங்குகளையும் அடையாளம் கண்டு கொள்ளாதவன் நன்றாக எழுத முடியாது.

'சிறந்த' சிறுகதையை விட்டுவிடுங்கள். 'சிறுகதை' என்பதே என்ன என்று தீர்மானமாகச் சொல்ல முடியாதபடி இந்த இயல் அத்தனை விரிந்திருக்கிறது. இன்றைக்கு எல்லாரும் ஒப்புக்கொள்ளும்படியாக சிறுகதையை அறுதியிட்டால் "சின்னதாக சொல்லப்பட்ட கதை" அவ்வளவுதான்! வேறு எந்த விதிகளும் இருந்து அதன் வீச்சைக் கட்டுப்படுத்துவதாகத் தெரியவில்லை. "சின்னதாக" என்பதும் ஒரு அளவுக்குத்தான். பெரும்பாலான கதைகள் மூவாயிரத்திலிருந்து ஏழாயிரம் வார்த்தைகளுக்குள் அடங்கி விடுவதால்தான்.

நான் பார்ப்பதையும் உணர்வதையும் என்னால் இயன்ற அளவுக்கு எளிதாகவும் சிறப்பாகவும் சொல்வது தான் என் குறிக்கோள்! என்று எர்னஸ்ட் ஹெமிங்வே (Ernest Hemingway) சொன்னதுடன் எனக்கு சம்மதம். "ஒரு எழுத்தாளன் கடவுள், அவநம்பிக்கை போன்ற பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முயலக்கூடாது. அவன் தொழில் கடவுளைப்பற்றியும் அவநம்பிக்கைகளைப்பற்றி யும் நினைப்பவர்களை வருணிப்பது என்று செக்காவ் (Chekov) ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறார். அவரே மற்றொரு கடிதத்தில் பிரச்சனைக்கு தீர்வு காணுவதையும் பிரச்சனை என்ன என்று சொல்வதையும் குழப்பாதே: ஒரு கலைஞனுக்குப் பின்னதுதான் கட்டாயமானது" என்கிறார்.

இந்த பதினெட்டுக் கதைகள் எவற்றிலும் நான் பிரச்சனைகளுக்கு முடிவு காண முயலவில்லை. பிரச்சனை களை ஒழுங்காக விவரிப்பதில்தான்—சொல்லுவதில்தான் அக்கறை காட்டியுள்ளேன். இயன்ற அளவுக்கு எளிதாக வும் சிறப்பாகவும் என்னால் கவனிக்க முடிகிறது. காட்சி களை வித்தியாசமாகப் பார்க்க முடிகிறது. அதைத் தமிழில் எழுத முடிகிறது. இந்த மூன்று தகுதிகளையுமே நான் முழுமையாகப் பெற்றிருக்கிறேன் என்று சொல்லிக் கொள்ள மாட்டேன். பெற்றுவிட்டால் எழுதுவது எல்லாமே சிறந்ததாக இருக்கவேண்டும். இல்லை இவை சிறந்த கதைகள் இல்லை. சிறந்த கதைகளை நோக்கிய என் யோக்கியமான முயற்சிகளின் அத்தாட்சிகள்.

நூற்றுக்கு மேற்பட்ட கதைகளிலிருந்து இந்த பதினெட்டு கதைகளை மட்டும் தேர்ந்தெடுத்ததற்குக்

காரணம் வாசகர்கள். பத்திரிகைகளில் வெளிவந்தபோது அதிகமான வாசகர்களை அதிகமாக பாதித்த கதைகள் இவை. இருபது வருஷத்துக்கு முன்பு எழுதிய கதைகள் சிலவும் இந்த தொகுப்பில் இருக்கின்றன. இருந்தும் வாசகர்களைப் பல்வேறு சந்தர்ப்பங்களில் சந்திக்கும் போது இந்தக் கதைகளை நினைவு வைத்துக்கொண்டு என்னை சிலாகிக்கிறார்கள். சில சமயம் திட்டுகிறார்கள். எப்படியோ ஒரு விதத்தில் பத்திரிகை அவசரங்களைக் கடந்துவிட்டன இக்கதைகள். என்னைச் சந்தித்தால் ஞாபகம் வைத்துக்கொண்டு விமரிசிக்க வைத்திருக்கின்றன அவர்களை இக்கதைகள். அதனால்தான் இவைகளை நான் இந்த தொகுப்புக்குத் தேர்ந்தெடுக்கிறேன்.

என் எழுத்தைப்பற்றி நீங்கள் ஏதாவது தீர்மானிக்கும் முன் இவைகளைப் படித்துவிட்டுத் தீர்மானியுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். 1971-ல் நான் பங்களூருக்கு வந்த புதிதில் நான் பிரபலம் என்னும் மாயவெளிச்சத்தின் ஓரத்தில் இருந்தபோது என் வீட்டுக்கு வந்து என் சிறு கதைகளை தொகுப்பாக வெளியிட நண்பர் வீரராகவன் சம்மதித்தார். அதன்பின், இந்த பதினான்கு வருஷங்களில் என்னுடைய ஐம்பது புத்தகங்களை வெளியிட்டபின் அவைகளிலிருந்து பறித்தெடுக்கப்பட்ட இந்த சிறுகதைத் தொகுப்பை அவரே வெளியிடுவது பொருத்தமே

—சுஜாதா

# பரிசாக வழங்கலாம்

தமிழ் நாட்டில் சிறு கதைகள் வாரா வாரம் ஏராளமாக பத்திரிகைகளில் அச்சாகிக் குவிக்கப் படுவதால் சிறுகதைத் தொகுதி புத்தகங்களைக் காசு கொடுத்து வாங்கிப் படிப்பதில்லை. நான் சுஜாதாவின் புத்தகங்களை வெளியிடும்போது அவருடைய சிறுகதைகளின் சிறப்பிலே மிக ஆர்வம் கொண்டு நாவல்களின் கடைசியில் இரண்டொரு கதைகளைச் சேர்த்துப் பிரசுரித் தேன். இந்த நாவல்களைப் படித்த வாசகர்கள் சிறுகதைகளையும் படித்து ரசித்தார்கள். அதன் பிறகு சில சிறுகதைத் தொகுதிகளையும் ''சில வித்தியாசங்கள்'' என்ற முழு சிறுகதைத் தொகுதி ஒன்றையும் வெளியிட்டேன். வாசகர்களுடைய ஆர்வம் பெருகியது. 'என்னைக் கவர்ந்த சுஜாதா வின் சிறுகதைகள்' என்ற விமர்சனப் போட்டி வைத்து அந்த விமர்சனங்களையும் புத்தகமாக வெளியிட்டேன்.

நண்பர் சுஜாதாவும் நல்ல கதைகளைத் தேர்ந்தெடுத்து ஒரு புத்தகமாக வெளியிட வேண்டுமென்று என்னிடம் கூறினார்.

அதன்விளைவாக இந்த பதினெட்டு கதை களை அவரே தேர்ந்தெடுத்துக்கொடுத்துள்ளார்.

சுஜாதாவின் ரசிகர்கள் நண்பர்களுக்கு இந்த நூலை வாங்கிப் பரிசாக வழங்கலாம். பல முறை படித்து மகிழலாம்.

உங்கள்,

—புத்தகப்பித்தன்

# 1

# தனிமைகொண்டு

இந்தக் கதை ஆர அமரத்தான் செல்லும். ரயில் தப்புகிற அவசரத்திலோ, அல்லது ஒரு பிரயாணப் பொழுதுபோக்காகவோ இதைப் படிக்க வேண்டாம். தனிமையில் படித்தால் நல்லது. ரேடியோவை அணைத்து விடுங்கள். குழந்தைகள் எல்லாம் தூங்கட்டும். இரவி இறங்கி இரவு வந்ததும், மௌனம் வந்ததும், தின வாழ்க்கையின் அவசரங்கள் செத்ததும், சமாதானமான நிலையில் உங்கள் மனதில் இரக்கம், பச்சாதாபம், வெறுப்பு, அதிதீவிரமான அன்பு—இந்த உணர்ச்சிகளுக்கு எல்லாம் வரவேற்பு இருக்கும்போது படியுங்கள். சாப்பிட்டுவிட்டுப் படியுங்கள். நிதானமாகப் படியுங்கள். தயவு செய்து வரிகளைத் தப்பவிடாதீர்கள் அந்த அலட்சியத்தை என்னால் தாங்க முடியாது இதன் ஒவ்வொரு வரிக்கும் எனக்கு இருக்கும் தனிப்பட்ட முக்கியத்துவம் உங்களுக்கு இருக்காது. இது உண்மை. சில வரிகள் அனாவசியமாகப்படும். பக்கத்தை நிரப்பும் சாதனங்களாகப்படும். நான் கதை சொல்லும் அமைப்பில் உள்ள குறை அது. அதை மாற்ற, என்னை மாற்றிக் கொள்ள வேண்டும் அந்த உத்தேசம் எனக்கில்லை.

இந்தக் கதையில் பாதிக்குமேல் என் தங்கை மாலாவின் டயரியிலிருந்து எடுக்கப்பட்ட வரிகள். என் தங்கை மாலா தற்போது இல்லை. இறந்துவிட்டாள். சென்ற மாதம் பதினெட்டாம் தேதி நல்ல நீலமான வானின்கீழ் மத்தியான வேளையில் எரிந்தாள். பதினேழரை வயதில் மாலா மாலா மாலா மாலா என்று இந்தப் பக்கத்தை நிரப்பி வழிய வைக்க எனக்கு இருக்கும் ஆவலின் தீவிரம் உங்களுக்குத் தென்படுவது அரிது. அவளைப் பற்றிய தீர்ப்புக்கு உங்களுக்கு சுதந்திரமளிக்கிறேன்.

அவள் டயரியின் பக்கங்களைப் படியுங்கள். இந்தப் பக்கங்களை நான் படிக்கும் வாய்ப்பு எனக்கு அவள் இறந்ததும்தான் ஏற்பட்டது. இந்தப் பக்கங்கள் என்னைச் சிரிக்க வைத்தன. தேம்பி அழவைத்தன. மற்றும் சில இனம்தெரியாத உணர்ச்சிகளே என் மனதிலும் வயிற்றின் ஆழத்திலும் ஏற்படுத்தின

மாலாவின் டயரியைப் பற்றிய ஒரு முன் குறிப்புத் தேவை. சுதந்திரமாக, தேதி போடாமல் எழுதியிருந்தாள். அதை நான் திருத்தவில்லை. முன் பின்னாகக் கோர்வையாக அமைந்திருக்கிறேன். சில கொச்சைகளை இயற்கையாக விட்டிருக்கிறேன், அவைகளின் வேகத்துக்காக, எழுதியவள் ஒரு பெண். பதினேழு வயது முடிந்தவள். நான் அவள் அண்ணனாக இருந்தாலும் அவள் மனம் வேலை செய்த விதத்தைச் சற்றும் புரியாமல் இருந்திருக்கிறேன். அவளின் சில எண்ணங்களின் பின்னணியும் காரணங்களும் எனக்குப் புலப்படவேயில்லை. அவள் ஏன் சில காரியங்களைச் செய்தாள் என்பது எனக்குச் சரிவரத் தெரியவில்லை. ஆனால் என் தாமதத்தை அவள் இயல்பான ஓட்டத்தில் என் கடமைப் பிரகாரம் குறுக்கிட வேண்டிய—ஆனால் குறுக்கிடாத தாமதத்தை என்னால் மன்னித்துக் கொள்ள முடியவில்லை. இது என் உள்ளே இருக்கும் பெரிய—பெரிய மரு, குறை, தழும்பு, தப்பு. தழும்பில்லை, புண்; ஆறாத புண்.

சத்தியமாக என் மாலா புத்திசாலிப்பெண். படியுங்கள் புலப்படும். கடைசி ஆறு மாதங்களில் அவள் எழுதின விஷயங்கள் இவை. தேதி இல்லாமல் வலப்பக்கம் சாய்ந்த எழுத்து. க், ச் எல்லாவற்றிற்கும் தலைமேல் ஆணி அடித்தாற்போல் புள்ளி, ழ முதலிய எழுத்துக்களில் சில அனாவசிய அலங்காரங்கள். சில பக்கங்களில் ஆர். என். மாலா, ஆர். என். மாலா என்று தினுசு, தினுசாகக் கையெழுத்து.

ஒரு பக்கத்தில் என் பெயருக்குப்பத்தாயிரம்ரூபாய்க்கு செக் வடிவத்தில் எழுதி இடப்பக்க ஓரத்தில், "என் அண்ணாவுக்கு என்மேல் இருக்கும் அன்புக்கு இது ஒரு சிறு பாகம்கூட இல்லை" என்ற வாசகம். அப்புறம் ஒரு நம்பரை அந்த நம்பரால் பெருக்கினால் அந்த நம்பரை அந்த நம்பரோடு கூட்டினால் எந்த நம்பர் வருமோ அந்த நம்பர் என்பது போன்ற கணக்குகள், அப்புறம் வத்ஸலா என்கிற பெண் ஒரு Fool Fool Fool என்று ஒரு பக்கம் பூராக எழுதியிருந்தாள். இவைகளை எல்லாம் நான் வெட்டியிருக்கிறேன். ஆனால் சில சிறிய விஷயங்களை அவைகளின் கவித்வ பாவத்திற்காக அனுமதித்திருக்கிறேன், இனி மாலா.

● ● ●

இந்த டயரியை என் அனுமதி இல்லாம திருட்டுத்தனமா படிக்கறவா 25,000 வருஷம் நரகத்திலே தலை கீழாத் தொங்குவா.

● ● ●

மே மாசம்...... வெய்யில், எத்தனை வெய்யில். என் P......d. ஒரு கணக்கிலும் சேராதது இது. 35 நாள் 40 நாள் 45 நாள் எவ்வளவு அவஸ்தை. ஒரு கணக்கிலேயும் சேராதது. எங்களுக்கு மட்டும் இந்தக் கஷ்டங்கள் எதுக்காகன்னு தெரியவில்லை. கடவுள் 'பண்ணின

அநியாயம். I am sorry God. 100 தடவை ஸ்ரீராம ஜெயம் எழுதி விடுகிறேன்.

● ● ●

எனக்கு திடீர்னு ரெண்டு லட்சம் ரூபாய் கிடைக்கிறதா கனாக் கண்டேன் தோழி நான்!

● ● ●

என் கிட்டே ரெண்டு லட்சம் இருந்தா என்ன செய்வேன்? எனக்கு செலவழிக்கக் கூடத் தெரியாதே? அண்ணாவோட முதல் நாவலை அச்சாக்குவேன். பத்தாயிரம் ரூபாய் செலவழியுமா?

அச்சாக்கி எல்லா பிரதியையும் நானே ரகசியமா வாங்கிக்கணும். அவன் எழுதறது யாருக்கும் புரியாது. (''உங்க மரமண்டைகளுக்கு எல்லாம் புரிய 500 வருஷம் ஆகும்.'')

சில தடவை அவன் எழுதறத்துக்கு அர்த்தமே இருக்காது. நோட்டு புஸ்தகத்திலே நெருக்கி நெருக்கி நெருக்கி எழுபது பக்கம் எழுதியிருக்கானே. Existentialist நாவலாம். சத்தியமா புரியலை. சில வேளைகளிலே புரியறது. புரியற போது நன்னா இருக்கு. அண்ணாவுக்கும் எனக்கும் வயசிலே இத்தனை வித்தியாசம் இருக்கக் கூடாது அவன் கிட்ட போறதே கஷ்டமா இருக்கு. பயமா இருக்கு. நான் இன்னும் ஏனிட்ப்ளைடன் படிச்சிண்டிருக்கேன். அவன் படிக்கிறது முதல்லே கதை கிடையாது. கதை இல்லாம இருந்தாக்கூட இப்படி இருக்கிற வரிகளை எல்லாம் அவன் என்னமோ ஸ்டான்லிகார்ட்னர் படிக்கிறாப்போல படிக்கிறான். ''It has been Perceived that french verse went soggy and leader, and that it temefied when some literary lamp was too dull to figer the lute; too inarticulate in the basic sense of the word. It is not a man's fingers that stop

him playing an instruments but his mind, his inability to grasy mentally the sixty or the twelve or size hundred bits of a whole and to perceive their relations.' அண்ணா நீ ஒரு போலியோன்னு எனக்கு சந்தேகம் வரது இதெல்லாம் உனக்காகப்.படிக்கிறாயா, பிறத்தியாருக்காகவா, என்னை அவமானப் படுத்தறத்துக் காகவா

● ● ●

இந்த டயரியை யாருக்காக எழுதறேன்? இப்படி டயரியே எழுதக்கூடாது. எப்படி? மற்றபேர் பிற்காலத்திலே படிக்கப் போறா என்று நினைச்சுக் கொண்டே எழுதறேன். இது கூடாது. என் மனசிலே நானே என்னை முன்னாலே வெச்சுண்டு சொல்ல நினைக்கிற விஷயங்களைத் தான் எழுதணும், இல்லையா? ஆனா எப்ப எழுத ஆரம்பிச்சாலும் என் அண்ணாவைப்பத்தியே எழுதறேன். அண்ணா, நீ எதற்கு என்கிட்ட அப்படி இருக்கே? என் கிட்ட நினைச்சதை எல்லாம் பேசேன்? என்கிட்ட எந்த விஷயத்தையும் பத்திப் பேசலாமே? வரே, போறே, சாப்பிடறே, படிக்கறே, தூங்கறே...

நீ உத்துப் பார்க்கற பெண்களைப் பத்திப் பேசு. ஆபாசமா பேசு, நான் இன்னும் சின்னக் குழந்தைன்னு நினைச்சுண்டிருக்கே. வாயில் விரல் வைத்தால் கடிக்கத் தெரியும் எனக்கு; (உன்னைக் கடிக்கறதுக்கு) எனக்குப் பிடிக்கும். நான் ஹெரால்ட் ராபின்ஸ் படிச்சிருக்கேன். அந்த சமாசாரங்கள் எல்லாம் படிச்சிருக்கேன். நான் Biology படிக்காதவளா? நீ என் கண்ணா. நீயும் நானும் வேறே வேறே இல்லை நீ எனக்கு ஒரே ஒரே ஒரே ஒரே ஒரு அண்ணா. எனக்கு யார் இருக்கா? அப்பா இல்லை அம்மா இல்லை. தங்கை இல்லை. நான் உன் சரணம் அண்ணா. உன் நிழல். இது ஏன் உனக்கு தெரியமாட்டேன் என்கிறது? நீ பெரிய ஆள், நிறையப் பணம்

சம்பாதிக்கிறே. ஸ்கூட்டர்லே போறே. ப்ரிட்ஜ் ஆடறே. பெரிய பெரிய விஷயங்களைப் பேசறே, எனக்கும் உனக்கும் ஈடு கிடையாது. நான் உன்னோட ஐக்யமாக எவ்வளவு விரும்பறேன். உன் after shave lotion எனக்குப் பிடிச்சிருக்கு - உன்னுடைய மஹா மஹா ஆண்மை, அதன் அலட்சியம், கர்வம் எல்லாம் புடிச்சிருக்கு. என்னை ஏன் ஒதுக்கறே?

அண்ணா நீ ஒரு மடையன்.

● ● ●

தலைகாணி நனைய நனைய அழுதேன். அப்பாவும், அம்மாவும் ஒருத்தர் மாத்தி ஒருத்தர் செத்துப்போனது அஞ்சு வருஷம் ஆனாலும் திடீர் திடீர்னு ஞாபகம் வந்து பயப்படுத்தறது. அடக்க முடியாத பிரவாகமா என் வயிற்றிலே பாய்ந்து பயமா வருத்தமா இல்லை... சந்தோஷமா?

அண்ணாவின் டெரிலினை எல்லாம் தோச்சுப் போட்டேன் அழகா. பச்சை, சேப்பு ப்ளாஸ்டிக் ஹாங்கரிலே தொங்கவிட்டு அந்த ஈரம் என் புடவை மேலை எல்லாம் பட எனக்கு சந்தோஷம் இருக்கு அதைப் பார்த்துட்டு சர்வாதிகாரி என்ன சொன்னார்: நீயேன் மாலா இதையெல்லாம் செய்யறே? கந்தசாமி செய்ய மாட்டானா?

அண்ணா நீ ஒரு முட்டாள். ராத்திரி சில வேளைலே உன் பக்கத்திலே உட்கார்ந்திருக்கிறபோது, ரேடியோ சன்னமா இருக்கிறபோது, மெலிசா வெளிச்சத்திலே நீ படிக்கிறபோது, அப்படியே உன்னை இறுக்க மூச்சு முட்டற வரைக்கும் இறுக்க எனக்கு ஆசையா இருக்கிறதை சொல்ல முடியுமா...?

● ● ●

நீங்கள் எல்லாரும் ப்ரிட்ஜ் ஆடறபோது 4 ஸ்பேட் 5 டைமண்ட் டபிள் ரீடபிள் என்று நாள் பூரா, ஆடிக் கொண்டிருக்கிறப்போ கிருஷ்ணன் மட்டும் தனியா அலமாரியிலிருந்து புஸ்தகம் எடுத்துப் படித்துக் கொண்டிருக்கான் நான் இந்த ரூமிலே தொடர்கதை படிப்பேன். ரேடியோ ஸிலோன் கேட்பேன்.பால்கனியிலே நின்னுண்டு வெளியே போற பெண்களுக்கு மார்க் கொடுத்துண்டு இருப்பேன். ஹாலிலே இருக்கற கண்ணாடி வழியா கிருஷ்ணன் தெரிவான். என்னைப் பார்த்து சிரிப்பான். அந்த சிரிப்பிலே எனக்குப் புரியற அர்த்தம் எனக்குப் பிடிக்கலை. கண்களிலே அர்த்தம் தெரிகிறது.

நான் கல்யாணமே செஞ்சுக்கப் போறதில்லை. செஞ்சுண்டா அண்ணா மாதிரி ஒரு ஒருத்தரைத்தான் பண்ணிப்பேன். வித்தியாசமா ஒன்னும் இல்லை. அண்ணா மாதிரி உயரம் வேணும், அவன் மாதிரி மார்பிலே மயிர் அடர்த்தியா இருக்கணும். அவன்மாதிரி குரல் வேணும். 'ஆனா' அவன் மாதிரி என்னை அலட்சியம் பண்ணக் கூடாது.

நான் கல்யாணம் பண்ணிக்கப் போறதில்லையே, எனக்கு ஏன் இந்த சுயம்வரம்?

● ● ●

கிருஷ்ணனுக்கும் அண்ணாவுக்கும் நிறைய வித்தியாசம். ஆனா நான் கிருஷ்ணனோட பேச, பழக ஆரம்பிச்சுட்டேன். ஏன் இந்த சினேகிதம்? என் அண்ணா என்னை மதிக்காம இருக்கறதுக்கு நான் தெரிவிக்கிற மறுப்பா? எனக்கும் நினைக்கத் தெரியும்; தனியா நினைக்கத் தெரியும், என்று நிரூபிக்கிறதுக்கு அத்தாட்சியா? யாருக்கு இந்த இது தேவை?

● ● ●

கிருஷ்ணனோட உன் பழக்கம் வேறே தினுசு? மாலா பார்! காதல் என்கிற வார்த்தையை உபயோகப்படுத்தலை பார். எனக்கென்னவோ காதல்ங்கறது புஸ்தக வார்த்தையாப் படறது, கிருஷ்ணன் என்னை சுத்தற தோட அர்த்தம் எனக்குப் புரியறது அவன் என்னை விரும்பினான். என்னைன்னா, என் மனசையா? என் குரலையா? என் உடம்பையா? என் மேல் அன்பைப் பொழியறான் சாமர்த்தியமாப் பேசறான்.

நான், அண்ணா, கிருஷ்ணன் மூன்று பேரும் சினிமாப் போனோம். அவன் துளிக்கூட சந்தேகத்துக்கே இடமில்லாம நடந்துக்கறான். என் பக்கத்து சீட்டிலே உட்காரமாட்டேன் என்கிறான். பொதுவா கொஞ்சமா பேசறான். கிருஷ்ணா, நீ புலி...நிழல்லே பதுங்கற புலி. எவ்வளவுநேரமானாலும் நிழலிலேயே காத்திருக்கிற புலி.

● ● ●

கிருஷ்ணன் அப்படிப்பட்ட மோசமான ஆளில்லை. இவனும் நிறையப் படிச்சிருக்கான். பெட்ரோலியம் டெக்னாலஜி படிக்கப் போறானாம். அமெரிக்கா போனாலும் போவானாம். என்கிட்ட சுவாரஸ்யமா பேசறான்.

கிருஷ்ணன் நல்லவன்னு ஏன் சொன்னேன்? அவன் என்னோட முக்கால் மணிநேரம் தனியா இருக்க வாய்ப்பு ஏற்பட்டது பொதுவாகத்தான் பேசிண்டிருந்தான். என் காலேஜ் படிப்பைபத்தி தமிழ் சினிமாபத்தி (வேடிக்கையா) நாங்கள் பார்வையில் பேசிக்கற அந்த ரகசியத்தைப் பத்தி கொஞ்சம் கூடப் பேசலை. கடைசியா ஒரு கேள்வி கேட்டான். மாலா, உன்னை தொடலாமான்னு. நான் அவனை நேராப் பார்க்காம ம்ஹூம் என்றேன். உன் விருப்பமில்லாமல் நான் ஒண்ணும் செய்ய மாட்டேன். மாலா, நீ ரொம்ப தனிமையான பெண். என்னை ஒரு சிநேகிதனா வெச்சுண்டு உன் மனசிலே இருக்கிறதை என்

கிட்டே சொல்லுன்னான். அவன் குரல்லே அழுத்தம் இருந்தது. அவன் குரல் எனக்கும் பிடிக்கிறது. கிருஷ்ணனை எனக்குப் பிடிக்கிறது.

"K-the Great!"

● ● ●

நானும் கிருஷ்ணனும் செஸ் ஆடினோம். மூணு தடவை தோத்தேன். நாலாம் தடவை ஜெயித்தேன். விட்டுக் கொடுத்தீங்க இல்லையான்னு கேட்டேன். ஆமாம் என்றான். எனக்குப் பொய் சொல்லத் தெரியாதுன்னான்...

● ● ●

என் பிறந்த நாள் என்னன்னு கேட்டான். சொன்னேன். ஏன் என்று கேட்டேன். ஞாபகமா எனக்கு ப்ரஸெண்ட் கொடுக்கறதுக்குன்னான்.

● ● ●

முதல் தடவை. முதல் தடவை. என் வாழ்க்கைலே முதல் தடவை—என்னை வேற ஒருத்தன் தொட்ட முதல் தடவை உடம்பு எவ்வளவு Wonderful. நான் என்னை குளிக்கிறபோது எவ்வளவு தடவை தொட்டுக்கறேன்.

அண்ணா மேலே படறபோது ஒண்ணும் தெரியல்லையே. கிருஷ்ணன் இன்னிக்கு என் கன்னத்தைத் தட்டி. கையை முழங்கைக்கு மேலே பிடித்து அழுக்கினான். எவ்வளவு வித்தியாசமா இருந்தது?

● ● ●

எனக்குப் பிடிச்ச வர்ணங்கள் என்ன? நீலம். நீலம். நீலம். மானம் நீலம். ஆழமான ஜலம் நீலம். கிருஷ்ணன் நீலம். நாகப்பழம்கூட நீலம் நடுராத்திரிகூட நீலம் தான்...

● ● ●

டுமாரியர் புஸ்தகத்தை முடிச்சேன். ரெபக்கா போல ஏதும் வராது. மாலா நீ ரொம்பக் கெட்டவள். நீ உருப்படமாட்டே! உனக்கு தைரியம் ஜாஸ்தியாகி விட்டது. உன்க்கு பயமில்லாம போயிடுத்து. இல்லைன்னா இன்னிக்கு நடந்ததுக்கு நீ சம்மதிச்சிருக்கவே மாட்டே! என்ன நடந்தது. மாடிப்படியிலே இருட்டிலே கீழே இறங்கி வந்திண்டிருக்கே...சீ எழுதாதே.

● ● ●

அண்ணா டூர் போகிறான். எனக்கு பயமா இருக்கு. அண்ணா என்னை அழைத்துக் கொண்டு போ. என்னைத் தனியா விடாதேன்னு எத்தனை தடவை சொல்றது. நீ ப்ளேன்லே போனா என்ன? உனக்கு எப்படிப் புரிய வைக்கிறது? என்கிட்டே இப்போ சக்தி இல்லை. என்னை பாதுகாத்துக்க சக்தி இல்லை. நான் இழைஞ்சு கொடுக்கத் தயாரா இருக்கற பஞ்சா இருக்கேன். இப்ப என்னைத் தனியா விடக்கூடாது. நீ போன தடவை நீ தனியா இருந்ததில்லையா? சமையல்காரக் கிழவி இருக்காளே! இப்ப எனக்கு பலமில்லை அண்ணா மடையனே! உனக்கு எப்படி புரிய வைக்கிறது கிருஷ்ணன் என்மேல் புயல் போல வீசிண்டிருக்கான். அவன் என் மனசிலே ஜொலிக்கிறான். என் வயிற்றிலே பயமா பரவறான். என் உடம்பிலே ரத்தமா ஓடறான். இப்ப என்னைத் தனியா விடாதே அண்ணா. என் அன்புள்ள மடையா! விடாதேடா! எனக்கு தயங்க நேரமில்லை. எனக்கு திராணி இல்லை.

● ● ●

வேடிக்கை. ஊருக்குப் போயிருக்கிறப்போ என்னைப் பார்த்துக்க கிருஷ்ணனைச் சொல்லியிருக்கான் அண்ணா!

● ● ●

ஆம் !......
ஆம் !......
ஆம் !......

அன்புள்ள கடவுளுக்கு, உங்களுக்கு என் மஹா மஹா வந்தனங்கள் பல. என்னைப் படைச்சதுக்கு, என்னை இந்த 1967ம் வருஷம் 17 வயசாக்கி எனக்கு மனசைக் கொடுத்து, தனிமையைக் கொடுத்து, கிருஷ்ணனைக் கொடுத்து, அவனோட மஹா தீவிரமான ஆண்மைங்கற வலிமைப்புயல்லே என்னை அலைக்கழிக்கவெச்சு, என்னை நான் மறந்து செந்தீயாய் எரிஞ்ச மூன்று இரவுகளுக்காக வலித்த வலிகளுக்கு, சிந்தின கண்ணீருக்கு, சிரித்த சிரிப்புக்கு, என் இதயத்தின் படபடப்பை எனக்கு கேட்க வெச்சதுக்கு, என் கிட்டேயிருந்து பிரவாகமாகப் பாஞ்ச ஆசைக்கு, அதற்கப்புறம் அழுத அழுகைக்கு, பண்ணின சமாதானத்துக்கு நான் பிறவி எடுத்தத்துக்கு thank you God. நான் செஞ்சது தப்பு, எனக்குப் புரியலையே, பகவானே. பெருமாளே, தப்பிருந்தா என்னை Please மன்னிச்சுடு. தப்பான காரியத்திலே இவ்வளவு பூரண சந்தோஷம் ஏற்படுமான்னு சந்தேகம் வரது.

கிருஷ்ணனின் பொன்மொழிகள் : நம்ம Life ரொம்ப சின்னது. Try anything once. இப்பவோ, நாளைக்கோ நாம் முடியறதுக்குள்ளே. தப்பு வரம்பு என்கிறதெல்லாம், மனுஷன் வகுத்த நியதி. அதுக்கு நாம் கட்டுப்பட வேண்டிய அவசியம் இல்லை. கடவுள் வகுத்த நியதி. ஒண்ணே ஒண்ணு. மற்ற உயிர்களுக்குத் துன்பம் கூடாது. நாம் மூச்சு விடற மிஷின்கள் இல்லை உன் தனிமையும் என் தனிமையும் ஒண்ணுக்கொண்ணு ஆறுதல் தேடறது. அதனாலேதான் இது நேர்ந்தது.

கிருஷ்ணா என்னைத் தவிர நீ...என்னைத் தவிர?...சீ நான் என்ன அந்த கிருஷ்ணனா? மாலா, நான் உனக்கு வரம் தந்தேன். ஒரு புதிய அனுபவத்துக்கு உன்னை அறிமுகப்படுத்தினேன். ஒரு புதிய அக்னிக்கு...கிருஷ்ணா நீ அக்னி!

தீக்குள் விரலை வைத்தால் நின்னைத்
தீண்டு மின்பம் தோன்றுதடா நந்தலாலா!

● ● ●

Fever என்கிற இங்கிலீஷ் பாட்டை பத்துதரம் போட்டுக் கேட்டேன். கடைசி வாக்கியம் என்னஉண் ௭ம

What a lovely way to buru...

● ● ●

எவ்வளவு நாள் கழிச்சு நான் மறுபடி எழுதறேன். கிருஷ்ணன் ஊருக்குப் போனதும் செஞ்ச சத்தியங்களும் நான் ஒருத்தருக்கும் தெரியாம அழுததும் அண்ணா எப்பவும்போலஇருக்கறதும் நான் ஊமையாய் மனசு பாரமாய் நெருப்பை முழுங்கிட்டுப் படுகிற அவஸ்தையும் அது புரியாம அண்ணா எனக்கு BG Phos வாங்கிக் குடுக்கறதும் அண்ணா நீ மரமண்டை!

இந்த நாட்கள்லே நான் எழுதாம இருந்ததுக்கு காரணம், எழுதவேண்டிய விஷயத்திலே உள்ள என் பயம்..

இப்ப என் தீர்மானம் ஏற்பட்டதும் எழுதவேண்டியது அவசியமாகி விட்டது. முதல்லே அண்ணாட்ட சொல்ல வேண்டும். பயப்படக் கூடாது. பயப்பட்டு என்ன பிரயோசனம் ஆனா எப்படிச் சொல்றது? அவனை எப்படி நான் நேராப் பாத்து, அண்ணா நான் மாறி விட்டேன். அந்தத் தப்பை நான் செஞ்சுட்டேன். அதன் பலனை அனுபவிக்கப் போறேன்னு சொல்றதா, எப்படி? எப்படி? தமிழ்லே சொல்றதா? இங்கிலீஷ்லே கொஞ்சம் நாஸுக்கா சொல்லலாம் I am missing my P... அவன் இதை எப்படி எடுத்துப்பான்?

ஏனோ எனக்கு அழுகை வரலையே. இதை நான் எதிர்பார்த்தேனா, விரும்பக்கூட விரும்பினேனா. கிருஷ்ணன் வந்துடுவான். என்னை ஏத்துப்பான்னு நம்பி

னேனோ. அவன்கிட்டேருந்து கடுதாசியே இல்லையே... அவனுக்கு இது எப்படித் தெரிஞ்சிருக்கும்? அதற்குள்ளே கிளம்பிட்டானே. அண்ணா எப்படி எடுத்துக்கப் போறான்? அண்ணா இதுக்கு தயாராகவே இல்லையே! என்னை அடிப்பானா? அடிச்சா என்ன? அழுவானா? நானே அழல்லையே கண்ணாடி டம்ளரை உடைப்பானா? அவ்வளவு கோபத்திலே என்ன செய்வான்? அண்ணா, இது நடந்ததுக்குக்காரணம் என் தனிமை தனிமைதனிமைன்னு நூறு தரம் சொல்லணும். என்னை புறக்கணிச்சுட்டு நீ ஆடின ப்ரிட்ஜ், என்னை விட்டுவிட்டு நீ போன டூர், என் மூளைக்கு எட்டாம நீ பேசின நான்சென்ஸ்கள், நீ வெச்சிருக்கும் புரியாத புஸ்தகங்கள், நீ கேக்கற சயாகாவ்ஸ்கியின் ஸிம்பன், எனக்குப் புரியாம நீ எழுதற எழுத்து. என் தனிமை! தாயாரில்லாம தகப்பனாரில்லாம நான் வாழ்ந்த ஒற்றை வாழ்க்கை. ஆதரவில்லாம அணையில்லாம ஆண்களோட அகங்காரம் சூழ்ந்த வாழ்க்கை, எப்படி சொல்லப் போறேன்?

● ● ●

சொன்னேன்.

ஆச்சரியத்தில் ஆச்சரியம். கேட்ட உடனே, உடனே கன்னத்திலே பளேர்னு அறைஞ்சான். என்னைத் தனியா விட்டுடு, மேலே பேசாதேன்னான்.

நான் இருட்டில், இந்த ரூம்லே உட்கார்ந்து மெதுவா அழுதுண்டிருந்தேன். அரை மணிக்கப்புறம் என்னைக் கூப்பிட்டான். என் தலையைத் தடவிக் கொடுத்தான். கிருஷ்ணன்தான்னு ஷ்யூராத் தெரியுமான்னு கேட்டான். தலையை ஆட்டினேன் கிருஷ்ணனைத் தீரத் திட்டினான் அந்த மாதிரி வார்த்தைகள் நான் கேட்டதே இல்லை. அப்புறம் சொன்னான். மாலா, உனக்கு வயசு 17 இப்ப நாம போய் கிருஷ்ணனைத் தேடிப்பிடிச்சு அவன் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க வெச்சு இதை

ரெகுலரைஸ் பண்ணாலும் கஷ்டப்படப் போறவள் நீ தான். எத்தனை தடவை மிஸ் பண்ணி இருக்கே இது வரை?—சொன்னேன். கிருஷ்ணனை நான் கவனிக்கிற விதத்திலே கவனிச்சுக்கறேன். அது அப்புறம். இப்ப எனக்கு முக்கியம் நீ. உனக்கு விடுதலை தரணும். உன்னோட வாழ்க்கை இப்படி ஆரம்பிக்கக்கூடாது சத்யமா! போய் ட்ரெஸ் பண்ணிக்கோ. என்கூட வான்னான்.

நான் புரிஞ்சும், புரியாமலும் அவன்கூட ட்ரெஸ் பண்ணிண்டுபோனேன். சந்துவழியா அழைச்சிண்டுஅந்தஇடத்துக்குப்போனோம். வெள்ளைத் திரையும் கண்ணாடியுமா அழகா இருந்தது, அந்த இடம். டாக்டர் இருக்கார். please waitன்னு போர்டு மாட்டி இருந்தது. ஜெர்மனிலே படிச்சதுக்கு அத்தாட்சியா சர்டிபிகேட் ப்ரேம் பண்ணி மாட்டியிருந்தது புஸ்தகங்கள் பெரிசு, பெரிசா அலங்காரமா அடுக்கியிருந்தது. அந்த டாக்டர் வந்தார். அவருக்கு 45வயசு இருக்கும். கவனத்தோட அக்கறையோட அண்ணா மழுப்பி மழுப்பி சொன்னதை கேட்டார் ஒவ்வொரு தடவையும் I Understandன்னார். அப்புறம் என்னைப் பார்த்து நீ பயப்படக்கூடாது. I am not going to hurt you நான் உன்னை Examine பண்ணப் போறேன். நீ என்கிட்ட பயப்படவே வேண்டாம். நான் உனக்கு அப்பா போலே. என்னுடன் உள்ளே வான்னார். உள்ளே சில சேதிகள்ளாம் கேட்டார். Gloves போட்டுண்டார். பார்த்தார்.

வெளியே வந்ததும் அண்ணாகிட்ட சன்னமாக சொன்னது கொஞ்சம்தான் கேட்டுது. she is too young ஸர்ஜிகல் இண்டர்வென்ஷன். திங்கள் கிழமை வெச்சுக்கலாம். கார்த்தாலை ஏழு மணிக்கு வந்துடட்டும். ஒண்ணும் சாப்பிட வேண்டாம். முதல் நாள் மாத்திரை எழுதித் தரேன். அதை சாப்பிடட்டும் பயப்படவே வேண்டாம் ஒரு அரைமணி அனஸ்தீஸியா மயக்கத்தில் இருப்பா. அவ்வளவுதான்...நான் செக் வாங்கிக்கற

இல்லை. எனக்கு Cash தான் வேணும். 7 மணி ஞாபகமிருக்கட்டும்.

● ● ●

எனக்கு பயமா இருக்கு.
எனக்கு பயமா இருக்கு.
எனக்கு பயமா இருக்கு.

● ● ●

மாலாவின் டயரி இத்துடன் முடிகிறது. திங்கள் கிழமை அது நடந்தது. செவ்வாய், புதன் இருந்தாள். வியாழக் கிழமை செத்துப் போனாள். இன்டர்னல் ஹெமர்ரேஜ், முதலிலேயே தப்பாக ஏதோ நடந்திருக்கிறது. மூன்று தினங்கள் பாதி மயக்கம் பாதி விழிப்பில் அவஸ்தைப்பட்டுப் பேசாமலேயே இறந்தாள். நான் அந்த தினங்கள் ஓடின ஓட்டமும், என்னைச் சில டாக்டர்கள் திட்டின திட்டும், பிடித்த டாக்ஸிகளும், குடித்த சிகரெட்டுகளும் கணக்கில் அகப்படாதவை.

## 2

# நிலம்

சாப்பிடும்போது டெலிபோன் வந்தது.

டெலிவிஷனில் எட்டுப் பெண்கள் ராஸக்ரீடை நடனம் ஆடிக்கொண்டு இருந்தார்கள். இடக் கையால் ஆடியோவைத் தழைத்துவிட்டு போனை எடுத்து, ''கிருஷ்ணசாமி'' என்றார்.

''கிச்சாமி! நாந்தாம்பா கோபாலன் பேசறேன்.''

''சொல்லுங்கோ. சௌக்கியமா. ரொம்ப நாளாச்சு''

''ஆமாப்பா. பட்ஜெட் சமயம். மேஜையை விட்டு எழுந்திருக்க முடியலை. கிச்சாமி உன்னோட உதவி ரொம்ப அர்ஜெண்டா தேவையாயிருக்கு.''

''செஞ்சாப் போச்சு. இன்விடேஷன்லாம் வந்துதே''

''அது விஷயமாத்தான் போன் பண்ணேன். எல்லாம் இப்ப தொங்கறது. டி. டி. ஏ. க்காரன் பெரிசா கல்லைத் தூக்கிப் போட்டுட்டான். ஸர்வே நம்பர் தப்பாம். ப்ளாட் ரெண்டு ஃபர்லாங் தள்ளி வேறு இருக்காம்?''

''சரிதான், என்ன இப்படி திடீர்னு.''

''எல்லா ஏற்பாடும் பண்ணியாச்சு. இந்த சமயத்திலே இப்படி ஒரு அதிர்ச்சின்னா? என்ன செய்யறது? யாரை பார்க்கறதுன்னு தெரியாம கிடந்து முழிக்கிறோம்.''

''கொட்டு வாயிலதான் கிச்சாமி ஞாபகம் வரும் உங்களுக்கு.''

''இப்ப உன் ஒருத்தனாலதான் காரியம் நடக்கும். ஆத்துக்கு வரட்டுமா?''

''இருங்கோ. லட்டர்ல என்ன எழுதியிருக்கு?''

''நிலம் நம்முது இல்லியாம். நமக்கு அலாட் ஆகி யிருக்கிற ப்ளாட் நம்பர் வேறயாம். உடனே வெக்கேட் பண்ணணுமாம்.''

' யார் கையெழுத்து போட்டிருக்கா?''

''பேர் சரியாத் தெரியலை. கார்ப்பரேஷன் அதிகாரி போல. கன்ஷியாம்னுதான் தெரியறது. அவன் குறிப்பிட் டிருக்கிற வேற ஸைட்டையும் போய்ப் பார்த்தோம். கந்தா நல்லாவுக்குப் பக்கத்திலே ஒரே எருமை மாடாக் கட்டியிருக்கு. பால்கரரங்களை எவிக்ட் பண்றதுக்கு ரெண்டு வருஷம் ஆயிடும் என்ன செய்யறது, எங்க போறது, எல்லா ஏற்பாடும் பண்ணியாச்சு. கிராதகங்க. ராட்சசங்க. நபும்சகங்க. இப்ப போய் நம்பர் தப்புன்னா? கிச்சாமி. நாளைக்கு ஒரு நா பூரா இருக்கு. எப்படி யாவது நீதான் மீட்டுக் கொடுக்கணும்.''

''சீசீசீ எனக்கு டி.டி.ஏ.லே யாரையும் தெரியாது. ஒரு நாள்ல டில்லில எந்தக் காரியமும் ஆகாது.''

''அப்படிச் சொல்லாதேப்பா. உன்னைத்தான் மலை போல நம்பிண்டு இருக்கேன். நம்ம மூர்த்தி இருக்காரே ஜே எஸ். அவர் வழியா கேட்டுப் பார்த்தோம். யாரையும்

தெரியாது. ஒண்ணும் பேராதுன்னுட்டார். கிச்சாமி தான் இதுக்கு சரியான ஆசாமி. அவனால முடியல் லேன்னா கை கழுவிடுங்கோன்னுட்டார். பிரிகேடியர்கூட அதைத்தான் சொன்னார்.''

''என்ன தலைவலி கோபாலன் ஸார், எனக்கு முதல்ல லெட்டர் வேணும். ஆபீசர் யாருன்னு தெரியணும்.'

''கார்த்தால கொண்டு வந்து கொடுக்கட்டுமா?''

''கார்த்தாலயா இந்த க்ஷணமே வேணும். ப்ராமிஸ் ஏதும் பண்ண முடியாது. முயற்சி பண்ணிப்பார்க்கறேன். கார்ப்பரேஷன்லயோ, டிடிஏயிலோ ஒர்க் பண்ணி எனக்குப் பழக்கமே இல்லை. நம்ம வேலை பூரா உங்க மினிஸ்ட்ரி, காமர்ஸ் இண்டஸ்ட்ரி எஸ். டி. ஸி...இப்படித் தான். இருந்தும் ட்ரை பண்ணிப் பார்க்கறேன்.''

''என்ன செலவானாலும் சரி, அதை ஏத்துக்கறோம்.''

''அதெல்லாம் அப்புறம். முதல்ல லெட்டரை அனுப்புங்கோ.''

''பையனை ஸ்கூட்டர்ல இப்பவே அனுப்பறேன்.''

டெலிபோனை வைத்துவிட்டு, ''முதல்ல ராத்திரி வேளையிலே இதைக் கட் பண்ணிரணும்'' என்றாள் மாலதி. டெலிவிஷன் சப்தத்தைப் பெரிதாக்கினாள்.

''எப்ப பார்த்தாலும் என்ன டி.வி.?போய்ப் படுத்துக்கோ.''

''டேக் இட் ஈஸி டாட்.''

''ராத்திரி வேளை என்ன இங்கிலீஷ்!''

''மிரண்டாலே டமில் பேசவே ஆப்பர்சூனிட்டி இல்லை டாட். இந்தி மே போலும்.''

''அய்யோ வேண்டாம்மா கண்ணு.'' பஞ்சாபி டிரஸ் போட்டுக்கொண்டு ஸல்வார் இல்லாமல் வாட்ட சாட்ட மாக இருந்தாள். கோபாலனின் மகன் வந்து சேர்ந்த ஸ்கூட்டர் சத்தம் கேட்டது. உள்ளே நுழைந்ததும் சிகரெட் நெடி பரவியது. மாலதியைப் பார்த்து,

''ஹாய்'' என்றான். ''கிவ் இட் டு யுவர் டாட்.'' கோபாலன் அனுப்பியிருந்த கடிதத்துடன் சில காஸெட்டு களும் கொண்டு வந்திருந்தான். இரண்டு பேரும் ஆங்கிலத் தில் ஹிந்தி கலந்து பேசிக் கொண்டிருக்க கிருஷ்ணசாமி அந்தக் கடிதத்தைப் பிரித்துக் கொண்டே,

''நீ போப்பா. காலைல போன் பண்றதா சொல்லு, உங்கப்பா கிட்ட'' என்றார்.

''மாலத்தியோட கொஞ்சம் பேஷிட்டுப் போறேன் அங்கிள்.''

''லேட்டாயிடுத்தில்லே?''

''ஸ்கூட்டர் மே ஆயா ஹூம்.''

''டோன்ட் ஒர்ரி டாட்'' என்று மாலதி அவரைப் பார்த்துச் சிரித்தாள்.

''அந்த மாதிரி சிரிக்காதே. திடுதிப்புன்னு உங்கம்மா ஞாபகம் வரது'' என்றார். அடுத்த அறைக்குச் செல்லும் போது கண்ணில் கண்ணீர் முட்டியது அவருக்கு. கடிதத்தை நிதானமாகப் படித்துப் பார்த்தார்.

டெலிபோன் எக்ஸ்டென்ஷன் இணைத்துக் கொள் ளும்போது மகளும் அந்தப் பையனும் அருகருகே உட்கார்ந்துகொண்டு புஸ்தகம் பார்ப்பதைக் கவனித்தார்.

மறுபடி தன் அறைக்கு வந்து டெலிபோனைச் சுற்றி னார்.

''பார்த்தசாரதி! கிச்சாமி பேசறேன். உனக்கு டிடி ஏல யாரையாவது தெரியுமா?''

''என்னது அர்த்த ராத்திரியில?''

''தெரியுமா சொல்லேன். ரொம்ப அர்ஜென்ட்,''

''மல்ஹோத்ரான்னு ஒருத்தனை தெரியும். கன்கஷ்யாம்னு ஒருத்தனை தெரியுமா?''

''மல்ஹோத்ரா மூலமா தெரிஞ்சுக்கலாம். என்ன விஷயம் சொல்லு.''

''அல்லாட் பண்ண ப்ளாட்டை ஸர்வே நம்பர் மாத்தி வேற ஒருத்தனுக்குக் கொடுத்துட்டான்.''

''சரி...அதுக்கு வேற ப்ளாட் அல்லாட் பண்ணியிருப்பானே?''

''பண்ணியிருக்கான், சாக்கடைல!''

சிரித்து, ''அப்படியா? சிக்கல்தான்?''

''இவங்கள்ளாம் பணம் வாங்குவாங்களா?''

''ஐ ஏ.எஸ். ஆபீசரா?''

''இல்லைன்னு தோணறது.''

''டிசிஷன் அவன்தான் எடுத்திருக்கானா. யாருக்காவது ஃபார் கையெழுத்துப் போட்டிருக்கானா?''

''அவன்தான் போட்டிருக்கான்.''

''ஒண்ணு பண்ணு. மல்ஹோத்ராவைத் தெரியுமில்லே.''

''தெரியாதுப்பா. நீ கொஞ்சம் வாயேன்.''

''நான் வர வேண்டாம். சாரதி அனுப்பிச்சான்னு சொல்லு. ஜனாப் ஜனாப்ன்னு ஓட்டிண்டுடுவான். ஒரு கார்ட்டன் சிகரெட்டும், ஜானிவாக்கரும் எடுத்துண்டு போ.''

''தனியாப் பார்க்கணுமா?''

''பக்கத்திலே க்ளார்க்கு இருந்தாப் பரவாயில்லை. மல்ஹோத்ரா மூலமா என் பேர் சொன்னா, அந்த கன்ஷியாமை பார்த்துரலாம். நான் அவனுக்கு போன் பண்ணி வெக்கறேன். எப்ப போறே?''

''கார்த்தால ஒன்பது மணிக்கு.''

''சரி நம்ம கேஸ் என்ன ஆச்சு?''

''முடிஞ்சுடுத்தே. ஒரு ஐட்டம் மட்டும் ஒப்புக்கு டெலிட் பண்ணியிருக்கான். ஓ ஜி.எல்ல. வாங்கிக்க சொல்லலாம் இல்லையாஸ்பர் போட்டு கஸ்டம்ல க்ளியர் பண்ணிக்க சொன்னான்.''

''அப்படியா, தாங்க்ஸ்! எவ்வளவு ஆச்சு?''

''அப்றம் சொல்றேன். எனக்கு இந்தக் காரியம் அவசியமா முடிஞ்சாகணும். கோபாலன் சொல்லியிருக்கார். கோபாலனுக்கு செய்யலைன்னா நான் காலி.''

''கோபாலன் கிட்ட எனக்கு ஒரு பெரிய காரியம் ஆகணும்பா. வாங்குவாரான்னு தெரியணும்.''

''சேச்சே வாங்கமாட்டார். 'ரொம்ப பக்தி சுத்தம்' இந்த மாதிரி காரியங்கள்ளாம் அப்பப்ப செய்து கொடுத்துட்டாப்போறும். நைஸ் மேன்! பரமாச்சாரியாள்ட்ட ரொம்ப ஈடுபாடு.''

திரும்பி ஹாலுக்குச் சென்றபோது ''ராகேஷ், உனக்கு நேரமாகலை?'' என்றார்.

''பரவாயில்லை அங்க்கிள். அப்பா ஏதும் சொல்ல மாட்டார்.''

''மாலதி போய்ப் படுத்துக்கோ லேட்டாரது பாரு.''

மாலதி அவரை ஒரு மாதிரி பார்த்துக் ''குட் பை ராக்ஸ்'' என்றாள்.

''பை பால்ஸ்.''

அவன்போனதும் ''டாட், ஒய் ஆர் யூ சேஸிங் ஹிம்?''

''அதில்லைம்மா லேட்டாயிடுத்தேன்னு'' அவள் புருவங்கள் சுருங்கின. ''வில் டு ஸம்திங் ராங் டாட்? ஸம் ஹெறரா ஃபெரி? நான் எவ்வளவு ஸ்காட்ச் பாட்டில் அல்மாரில பாக்றேன். எவ்வளவோ சிகரெட், பர்ஃப்யூம், ப்ளேபாய் பெண்ட் ஹவுஸ். நீ அதையெலலாம் யூஸ் பண்றேன்னு நினைப்பேனா? நோ டாட்! யூ மஸ்ட் ஹாவ் ஃபேய்த்'' என்றாள்.

கிருஷ்ணசாமி அவளருகில் வந்து, தலையைத் தடவிக் கொடுத்து இத பாரும்மா, உம்மேல எனக்குப் பூர்ண நம்பிக்கை. ஆனா நான் உன்னைவிட வயசானவன், அனுபவப்பட்டவன். நான் பார்க்கிறதெல்லாம் நீ பார்க் கறதில்லை. பார்க்க முடியாது...!''

''புரியலை'' என்றாள்.

''குட் நைட் மை எஞ்சல்!'' அவள் கோபக் கன்னத்தைக் கவனித்து கொஞ்சம் சிரித்துக் கொண்டார்.

............

காலை மல்ஹோத்ராவைப் பார்த்தார்,

''ஆயியே ஆயியே ரங்நாத்தன் ஸாப்!''

''கிருஷ்ணசாமி.''

' சாரதி ஸாப்னே போன்கியா.ஜனாப் வாட் கன் ஐ டு ஃபர் யூ?''

கிருஷ்ணசாமி மேசைமேல் வைத்த ஸ்காட்ச் பாட்டிலையும் சிகரெட் பெட்டியையும் காத்ரெஜ்அலமாரியைத்திறந்து அதனுள்வைத்துவிட்டு, ''கஹியே'' என்றான். பஞ்சாபி நல்ல சிவப்பாக இருந்தான். பான் போட்டதில் உதடுகள் இன்னும் சிவப்பாகியிருக்க, சட்டை உடம்பைப்

பிடிக்க கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தது. குண்டூசியை எடுத்து பல்குத்தி வெளிப்பட்டதை ஆராயும்போது கிருஷ்ணசாமி வேறு பக்கம் திரும்பிக் கொண்டார்.

'மல்ஹோத்ரா ஸாப்! கன்ஷியாம் என்று ஒரு ஆபீஸரைப் பார்க்க வேண்டும். கடிதத்தை அவனிடம் கொடுத்தார் அவன் அதைப் படித்துவிட்டு, ''ஸாலா எ நயே லோக் ஜோ ஆயேனா'' என்று பட்டனைத் தட்ட சப்ராஸி சுறுசுறுப்பாக உள்ளே வர அந்த ஆபீசில் எல்லாரும் புத்தம்புது மெட்ரிகாட் அணிந்திருந்தார்கள். 'கன்ஷ்யாம் ஸாப்கே ஸலாம் தோ' என்றான்.

''ரங்நாத்தன் ஸாகப் ஸாரி கிஷண் ஸாப்? எனக்கு அதிகம் நம்பிக்கை இல்லை. என்னுடைய பிரிவில் இருந்தால் ஃபட்டா ஃபட் காரியம் முடிந்திருக்கும். கன்ஷ்யாம் அப்படி இல்லை. ஒரு மாதிரி கோபக்காரன். ஜாக்கிரதையாக இருங்கள்.''

''ஸ்காட்ச்?''

''ம்ஹூம். சுத்த விஜிட்டேரியன். ஹ்ம் எனிதிங் கோபித்துக் கொள்வான்.''

''வேறு ஏதும்? கார்ட்லஸ் டெலிபோன் வீடியோ?''

''பச். அதெல்லாம் ப்ராப்யராது.''

''விடியோ வைத்திருக்கிறீர்களா?''

''ம். வேண்டுமா?''

''என்ன விலை?''

''மல்ஹோத்ராவுக்கு விலையாவது! காட்டலாக் அனுப்புகிறேன். தேர்ந்தெடுத்து சொல்லுங்கள். பதினைந்து நாள் விட்டுப் போன் செய்யுங்கள்.''

''சுதேசியா விதேசியா.''

''மல்ஹோத்ரா ஸாப் நான் சுதேசியைத் தொடுவேனா?''

மல்ஹோத்ரா அட்டகாசமாக சிரித்து ''ஸலா காமினை கர்த்தி ' என்றான்.

சப்ராஸி திரும்பி வந்து, ''புலாரஹேன்'' என்றான்·

மல்ஹோத்ரா கிருஷ்ணசாமியுடன் கூட கன்ஷியாமின் அறைக்குள் வந்து அறிமுகப்படுத்திவிட்டு விலகிக் கொள்ள, கிருஷ்ணசாமி நாற்காலியில் உட்கார்ந்தார். ஃபைலைப் பார்த்துக் கொண்டே கன்ஷியாம் ''எஸ்'' என்றான். நெற்றி சுருங்கியிருந்தது.

''வாட் இஸ் இட்?''

கிருஷ்ணசாமி, ''நத்திங் ஸார் சின்ன விஷயம்'' என்று கடிதத்தைக் காட்டினான். கன்ஷியாம் கண்ணாடி மாற்றிக் கொண்டு அதை நிதானமாகப் படிக்கையில் கிருஷ்ணசாமி பார்த்தார். மேசை ஒழுங்காக இருந்தது. கண்ணாடிக்குக் கீழ் பூக்களின் படம் இருந்தது. தலை மயிரைப் படிய வார விட்டிருந்தான். வெள்ளைச் சட்டையில் குத்தியிருந்த பால்பாயின்ட் பேனா எட்டணா இருக்கும்.

''என்ன செய்யவேண்டும்?'' என்றான் நிமிர்ந்து.

''புதிதாக அலாட் ஆகியிருக்கும் ஸைட் கந்தா நல்லாவின் அருகில் இருக்கிறது எருமை மாடு கட்டியிருக்கிறார்கள். நாங்கள் எல்லா ஏற்பாடும் செய்துவிட்ட பிறகு ஸர்வே நம்பரை ஓவர் நைட் மாற்றியிருக்கிறார்கள். இதில் ஏதோ தவறு நேர்ந்திருக்க வேண்டும் அதைத் திருத்திக் கொள்ளத்தான்...''

''நோ ஐ காண்ட் டு எனிதிங்! முதலிலிருந்தே ஸர்வே நம்பர் தப்பு நான் சரியாகப் பார்த்துவிட்டேன். நான் தான் இந்த ஆர்டர் கொடுத்தது. வேண்டுமானால் இன்னும் ஒரு வாரம் அவகாசம் கொடுக்கிறோம்.''

' எதற்கு?''

''காலி பண்ணுவதற்கு. நீங்கள் புதிய நிலத்தைத் தான் எடுத்துக்கொள்ள வேண்டும்.''

''அந்த இடத்தில் மாட்டுத் தொழுவம் இருக்கிறது என்று சொன்னேனே.''

''அதற்கு நான் என்ன செய்ய முடியும்? இந்த கடிதத்தைக் காட்டி மாஜிஸ்ட்ரேட் உத்தரவு வாங்கி எவிக்ட் பண்ணிக் கொள்வது உங்கள் பொறுப்பு. என்னால் ஆர்டரை மாற்ற முடியாது'' என்று அவர்பால் காகிதத்தை வீசி எறிந்து, ''எனிதிங் எல்ஸ்?'' என்றான்.

''தயவு செய்து கொஞ்சம் பாருங்கள். எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டோம்.''

''கான்ஸல் செய்துவிடுங்கள்.'' புன்னகைத்தான்.

''கேன் கிவ்மி த்ரிமினிட்ஸ் டு எக்ஸ்ப்ளெயின் தி ப்ரெடிகமெண்ட் வி ஆர் இன்?''

''யூ கம் லேட்டர் ஐம் பிஸி!''

''எப்போது வரவேண்டும்?''

''ஆஸ்க் மை பி ஏ.''

கிருஷ்ணசாமி சிரித்துக்கொண்டு, ''தாங்க்ஸ்'' என்று எழுந்தார். பி ஏ.யின் அறைக்கு சோர்வுடன் வந்தார்.

''குச் ஹுவா...''

''காத்திருக்கச் சொல்லியிருக்கிறார் மறுபடி கூப்பிடுகிறேன் என்று சொல்லியிருக்கிறார். இங்கே உட்கார்ந்திருக்கட்டுமா?''

''தாராளமாக. உங்கள் கேஸ் பிழைக்காது. நானும் தான் பார்த்தேனே. ஸர்வே நம்பர் முதலிலேயே தப்பு.''

''என்ன கருமமோ, நீங்கள் வைத்ததுதான் சட்டமாக இருக்கிறது ஒருநாள் சர்வே நம்பர் சரி, ஒருநாள்

தப்பு? முன்னமே சொல்லக்கூடாதா! கடைசி நிமிஷத்திலா சொல்ல வேண்டும்?''

' கன்ஷியாம் ஸாப் இப்போதுதான் புதுசாக வந்திருக்கிறார்.''

''என்னமோ உங்களுடன் ரொம்ப தகராறப்பா! டெலிபோனை உபயோகப்படுத்திக்கொள்ளவா?''

''தாராளமாக. இது என்ன, பால்பாயிண்ட் ஃபாரினா?''

' ஃபாரின்தான்! இந்தா வைத்துக்கொள்'' என்றான்.

''கோபாலன் ஸார் கிச்சாமி பேசறேன்!''

''என்னப்பா எனி குட் நியூஸ்?''

''ஒப்புத்துக்கமாட்டேங்கறான், ரொம்ப ஸ்ட்ரிக்டா இருக்கான்.''

''அய்யய்யோ என்னப்பாது இப்படிச் சொல்றே!''

''நீங்க எதுக்கும் கான்ஸலேஷனுக்கு தயாரா இருங்கோ! இன்னொரு தடவை போய்ப் பார்க்கலாம்னு இருக்கேன். ஆனா ஹோப் இல்லே!''

''என்னப்பா?''

''என்னப்பாதுன்னா? ஒரு நாள்ல ஆற காரியமா சொல்லுங்கோ. பாக்கறேன்! மறுபடி போன்பண்றேன்.'' பி. ஏ. மறுபடி மறுபடி அந்த பால்பாயிண்ட் நங்கையைத் துன்புறுத்திக் கொண்டிருந்தான். கிருஷ்ணசாமி தன் பையிலிருந்து மற்றொரு பென் செட்டை எடுத்து வைத்தான். ''இம்போர்ட்டட்'' என்றான். ''ரீஃபில் வேணுமானால் சொல்லுங்கள்'' என்றான். பி. ஏ அதை டிராயருக்குள் வைத்துக் கொண்டான். ''கன் யு கீப் எ ஸீக்ரட்'' என்றான்.

''ஒய் நாட்!''

''இந்தக் காரியம் நடந்தே தீரவேண்டுமா?''

''ஆம்.''

கிருஷ்ணசாமி கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொள்ள பி. ஏ. கையில்லாத நாற்காலியில் இருந்த அழுக்கான காகிதக் குப்பைகளை ஒதுக்கி அருகில் வந்து உட்கார்ந்து கொண்டு...'' என்றான்.

''ஒய் நாட்? இதை முன்பே சொல்லியிருந்தால்!''

''இதைப் பற்றி பேசவே கூடாது. யாருக்கும் தெரியக் கூடாது. ஏற்பாடு செய்த மறுகணமே மறந்துவிட வேண்டும். எந்த விதமான சந்தேகமும் கூடாது. வெளிப்படையாக ஒரு வார்த்தை பேசக் கூடாது. உன் சாமர்த்தியம்!''

''காரியம் முடிந்து விடுமா?''

''ஹண்ரட் பர்ஸண்ட். வேறு பேச்சே வேண்டாம். மால் சுத்தமாக இருக்க வேண்டும்.''

''பார்த்துக் கொள்கிறேன். தாங்ஸ்.''

''எப்படிச் செய்வாய்?''

''என்னிடம் விட்டுவிடு. கவலையே வேண்டாம் இந்த ஆபீஸ் வாசலைத் திறந்தவுடன் நானும் அதை மறந்து விடுவேன்.''

''சபாஷ். கொஞ்சம் இருங்கள்'' என்று உள்ளே போனான் கிருஷ்ணசாமி. டெலிபோன் எடுத்துச் சுழற்றி,

''கோபாலன், கொஞ்சம் இருங்கோ. காரியம் ஆகும் போல இருக்கு. அவசரப்பட்டு எதையும் பண்ணிடாதிங்கோ!'' பி. ஏ. வெளியே வந்தான். ''கூப்பிடறார்'' என்றான்.

உள்ளே சென்றபோது கன்ஷியாம் எழுதிக்கொண்டே ''ஸிட் டவுன்,'' என்றான். கிருஷ்ணசாமி காத்திருந்தார்

''உங்க கேஸை மறுபரிசீலனை பண்ணிப் பார்த்தேன் யூல் கெட் தி கரெக்ஷன் டுமாரோ!''

''ரொம்ப தாங்க்ஸ் ஸார். ஆர்டரை இருந்து வாங்கிக் கொண்டு போகவா?''

''உங்கள் இஷ்டம்'' என்றான். கிருஷ்ணசாமி தன் பையிலிருந்து எடுத்து,''ஒரு சிறிய அன்பளிப்பு''என்றான். சாவிக்கொத்தில் சாவியும் இருந்தது. மேசை மேலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து கிருஷ்ணசாமி அதில் ஒரு விலாசத்தை எழுதி ''ரொம்ப சுலபம், ஞாபகம் வைத்துக் கொள்வது. அமைதியான இடம் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றார். கன்ஷியாம் அதை ஒரு முறை கவனமாகப் பார்த்துக் கொள்ள, ''சரியாகப் பார்த்துக் கொள்ளுங்கள். மறந்து போனால் என் போன் நம்பர் பி. ஏ.யிடம் இருக்கிறது. டைரக்டரியில் இருக்கிறது.''

''மறக்கமாட்டேன்'' என்று முதல் முறையாகப் புன்னகைத்தான் கன்ஷியாம்.

''வரட்டுமா?''

''ஹேவ் ஸம் டீ.''

● ● ●

''''ஹலோ! கிச்!'' என்றாள் ராதா. அப்போதுதான் தூங்கி எழுந்திருந்தாள். ''என்ன வீட்டுக்கே வந்து விட்டாய்?''

''உன் போன் என்ன ஆச்சு?''

''டிஸ்கனெக்ட் பண்ணிவிட்டார்கள். பில் கட்டவில்லை. கிச் ஏதாவது நல்ல செய்தியா?''

''ஆம்! ராதா, இன்றைக்கு சாயங்காலம் கே. ரோடு ஃப்ளாட்டில் ஒரு பார்ட்டி வருகிறது சாவி கொடுத்திருக்கிறேன்!''

''பேர் சொல்லு.''

''கன்ஷியாம்.''

''பி அண்ட் டியா?''

''இல்லை, டி.டி.ஏ.''

''பி அண்ட் டியாக இருந்தால் டெலிபோன் கனெக்‌ஷனைப் பற்றி சொல்லலாம் என்று. டெலிபோன் இல்லையென்றால் பிழைப்பு போய்விடுகிறது?''

''கவலைப்படாதே. நான் ஏற்பாடு செய்கிறேன்.'' கிருஷ்ணசாமி பையிலிருந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து எண்ணினார்.

''யூ ஆர் எ டார்லிங்'' என்றாள்.

''காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகிறாயா?''

''வேண்டாம்மா இப்போதுதான் டீ சாப்பிட்டேன். டாக்டரைப் பார்த்தாயா?''

''பார்த்தேன் அலமாரியில் பார், எத்தனை மருந்து!'' ராதாவை நிறுத்தி நிதானமாகப் பார்த்தார்.

''யூ ஆர் ஆல்ரைட் ராதா'' என்று அவள் கரிய கூந்தலை வாத்சல்யத்துடன் தடவிக் கொடுத்தார்.

''ஆல்ரைட்'' என்று சிரித்தாள், கண்களில் லேசாகக் கண்ணீருடன்.

''அந்த மந்திரி முட்டாள்தனமாக மறுபடி ஏதும் செய்யமாட்டாயே?''

''இல்லை. இனிமேல் இல்லை. நோ மோர். வீட்டில் ப்ளேடே கிடையாது'' என்று சிரித்தாள்.

''நீ என் பெண்ணைப் போல. அவள் வயசுதான் உனக்கும். வரட்டுமா?''

ஷாமியானா பந்தலில் ''தட்சிணபாரத் ஆஸ்திக் ஸமாஜ் ஃபவுண்டேஷன் ஃபார் கிருஷ்ணா டெம்பிள் பை ஹிஸ் ஹோலினஸ்'' அதற்குமேல் காற்று எழுத்துக்களை மறைத்துவிட பந்தலுக்குள் நுழைந்தபோது கோபாலன் சந்தோஷத்தோடு, ''வாப்பா கிச்சாமி'' என்று ஏறக்குறையக் கட்டிக்கொண்டார்.

''எப்படிப்பா முடிஞ்சுது?''

''எப்படியோ ஆயிடுத்து. லெட்டர் கிடைச்சுது இல்லை?''

''கிடைச்சாச்சு. உன்னை அடிச்சுக்க இந்த பூலோகத்தில் ஆளில்லை. போய் உக்காரு. சாப்பிட்டுட்டுப் போகலாம். எல்லாம் முடிஞ்சப்புறம் ஸ்வாமிஜியை பார்த்து நமஸ்காரம் பண்ணிட்டு வா! சகல அனுக்ரகங்களும் உண்டாகும்.''

கிருஷ்ணசாமி செருப்பை உதறிவிட்டு ஜமக்காளத்தில் உட்கார்ந்தார். சுமார் நூறு பேர் உட்கார்ந்திருந்தார்கள் நெருக்கமாக இருந்தது. நடுவே மேடை போட்டு அந்தத் துறவி மைக்கில் பேசிக்கொண்டிருந்தார். கோபாலன் அங்கிருந்து நன்றியுடன் பார்த்தபோது அவர் கண்களிலும் கண்ணீர் பளிச்சிட்டது.

''நம்ம கோபாலன்தான் சொன்னார். டில்லி நகர சபைக்காரா திடீர்னு இந்த ஆஸ்திக சமாஜத்துக்கு கொடுத்த ப்ளாட்டை ரத்து செஞ்சு வேற இடத்துக்குப் போன்னு சொல்லிப்பிட்டாளாம். கோபாலன் அப்படியே வெலவெலத்துப் போய்ட்டார். சுவாமி! என்ன பண்றதுன்னே தெரியலைன்னார். இன்னம் ஒரு நாள்தான் இருக்கு. ஏற்பாடு எல்லாம் பண்ணியாயிடுத்து!

''பூமி பூஜையின்போது இப்படி ஒரு அச்சானியமான்னு கண்ல தண்ணி வந்துடுத்து கோபாலனுக்கு! பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் இப்படித்தான் உண்மையான பக்தாளை

சோதிப்பார்! கவலையே படக்கூடாது. அவருக்கு எல்லாம் தெரியும், எதெதை யார்யாரை வச்சுண்டு எப்படி எப்படி முடிக்கணும்னு தெரியும், அவன் அந்தர்யாமி! சர்வ வியாபி? அவன் மேல பாரத்தைப் போட்டுட்டு பேசாம இருங்கோன்னேன், அவனுக்கு இந்த இடம் தேவைன்னா அவனே எடுத்துப்பான்னேன். என்ன ஆச்சு?

"சாயங்காலம் நகரசபைக்காராள்ட்டே இருந்து கடுதாசி வந்துடுத்து! நாங்க கொடுத்த சர்வே நம்பர் தப்பு. மன்னிச்சுக்குங்கோ, உங்களுக்கு முன்னாடி கொடுத்த இடத்திலேயே கிருஷ்ணன் கோவில் கட்டிக் கலாம்னுட்டு. கோபாலன் ஆச்சர்யத்திலே. பிரமிப்பிலே அப்படியே அசந்து போயிட்டார். இந்த கலியுகத்திலேயும் எல்லாத்தையும் அந்த கிருஷ்ணன்தான் நடத்தி வெக்கிறான். அவன்தான் அந்த அதிகாரி மனசில பூந்துண்டு ஆர்டர் கொடுக்கறான் மாத்தறான். எல்லாம் கிருஷ்ணன் தான்! 'அர்ஜுனா பார்! மூன்று லோகங்கள்ளயும் நான் செய்ய வேண்டிய காரியம்னு ஏதும் இல்லை! நான் அடையாததும் அடைய வேண்டியதும் ஏதும் இல்லை! அப்படியிருந்தாலும் ஓயாம கர்மத்தை செஞ்சுண்டே இருப்பேன்".

"நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம்
- த்ரிஷு லோகேஷு கிஞ்சன..."

கிருஷ்ணசாமி லேசாக சிரித்துக் கொண்டார்.



# 3

# காற்று

ஏர் ஹார்ன் அலற தீப்பிடித்தாற்போலப் பறந்து செல்லும் பஸ்களிலிருந்து ஒதுங்கி நடந்து வந்து பட்டை கோவில் எதிரே ஐஸ் டிப்போ இருக்கிறதல்லவா அதன் அருகில் வாழைக்காய்கள் மொத்த வியாபாரத்துக்கு மலையாகக் குவிந்திருக்கிறதே. அந்த மண்டியை அடுத்து உற்றுப் பார்த்தால் ஒரு வீட்டு வாசல் தெரியும். குறுகலாக இடைவழியைக் கடந்து உள்ளே வந்தால் தாழ்வாரம். நான்கு பக்கங்களிலும் ஓடு வேய்ந்த அறைகள். நடுவே பைப்பில் இப்போது காற்றுதான் வருகிறது. மேற்கு ஓரத்தில் இருக்கும் அறைக்கு வாசல் கதவு திறந்தவாக்கில் உள்ளே எட்டிப் பார்த்தால் சுமார் பதினைந்து இருபது இருக்கும் அறை. ஒரு மானசீகமான கோட்டில் அந்த அறை ஹால், கிச்சன் என்று பிரிக்கப்பட்டிருக்கிறது. ஓரத்தில் கிரசின் டப்பாவும் தரையில் வரிசையாக அடுக்கியிருக்கும் பாத்திரங்களும் அந்தப் பகுதியை சமையலறை என்று காட்டிக் கொடுக்கின்றன முன் பக்கத்தில் டில்லி மோடா போட்டிருக்கிறதே அதுதான் வரவேற்பறை. அதில் சீனிவாச ராவின் சட்டைகள் தொங்குவதை ஒதுக்கிவிட்டால் உட்கார இயலும். பக்கத்தில் தூளி. தற்போது தொய்ந்து போயிருப்பதை மேல் விட்டத்தில் குறுக்குக் கட்டையில் செருகிவிட்டால்

மாளிகை முழுவதும் காட்சியளிக்கிறது. சாவித்திரி சமையற்கட்டில் பிஸியாக இருப்பதும் தெரிகிறது. சமையலின் வாசனையில் வரவேற்பு இருக்கிறது ராகவேந்திராசுவாமி படத்துக்கு ஊதுபத்தி முயற்சி பண்ணிக் கொண்டிருக்க அதன் புகை காற்றே இல்லாததால் மேற்கூரை வரை செங்குத்தாக நின்று கொண்டு அவ்வப்போது புதுக்கவிதை போல சலனிக்கிறது. அழுக்கான, அம்மணமான, சிவப்பான, அழகான குழந்தை சாக்கடையை சின்ன விரல்களால் ஆராய்ந்து கொண்டிருப்பதை சாவித்திரி கவனிக்கவில்லை. மற்றொரு குழந்தை அவள் புடவைத்தலைப்பைப் பிடித்துக் கொண்டு விரல்போட்டுக் கொண்டு அவளுடனேயே சதா சிணுங்கிக்கொண்டு அலறுகிறது. மூன்றாவது குழந்தையை அடுத்த போர்ஷன் மல்லிகா அப்பா அம்மா விளையாட்டுக்கு பாப்பா வேண்டும் என்று எடுத்துப் போயிருக்கிறாள். சாவித்திரிக்கு அந்த விதத்தில் மூன்றில் ஒரு பங்கு நிம்மதி. குழந்தைகளின் அழுகையையோ அழுகையோ கவனிக்கக்கூடிய நிலையில் இல்லாமல் கைக்காரியத்தில் கவனமாக இருக்கிறாள்.

செருப்பு சத்தம் கேட்டு கம்மென்ற செண்டு வாசனை வீசத் திரும்பிப் பார்த்தாள். ''அடே! யமுனா! எப்ப வந்தே?''

''இப்பதான். அப்பாடா! உன் வீட்டைக் கண்டு பிடிக்கிறதுக்குள்ள உயிர் போயிடுத்து!'' என்றுமோடாவை சந்தேகத்துடன் பரிசோதித்துப் பார்த்து உட்கார்ந்தவளுக்கு சாவித்திரியைவிட எட்டு வயது அதிகமாக இருந்தாலும் டீக்காக பளபளப்பாக புதிதாகத் திறக்கப்பட்ட பரிசுப் பொருள்போல இருந்தாள். ''ஸ்ஸ்ஸ்! என்ன புழுக்கம். ..பேனைப் போடேன்'' என்றாள்.

மின் விசிறி இல்லாததால் சாவித்திரி விழிக்க யமுனா சுற்றிலும் பார்த்து ''சாவி, இதான் உன் வீடா?'' என்றாள்.

''ஆமாம்''

''வேற ரூம் இருக்கா?''

''இது ஒண்ணுதான்''

யமுனா சாவித்திரியை நிறுத்தி நிதானமாகப் பார்த்தாள் சாவித்திரி நெற்றி வியர்வையை தலைப்பால் ஒற்றிக்கொள்ள ''நீ நிஜமாகவே சாவித்திரிதானா? என்னடி இது! கல்யாணம் ஆயி நாலு வருஷத்துக்குள்ள இப்படி டொங்கு விழுந்து போயி...எத்தனை குழந்தை?''

''மூணு! ஒண்ணு விளையாடப் போயிருக்கு.''

''ச்ச்ச் ஐஸ்கூல்ல த்ரோபால் காப்டனா அத்லெட்டிக்ஸ்ல பதக்கம் வாங்கின சாவித்திரியா?''

''என்ன பண்றது'' என்று புடவைத் தலைப்பைத் திருகினாள் சாவித்திரி.

''கல்யாணம் ஆயி இப்படியா சீரழியணும்? நாங்கள்ளாம் கல்யாணம் பண்ணிக்கிலியா? இப்படியா குழந்தை பெத்துக்கறது? இந்த மூக்கோட்டையிலயா வாழறது?''

''பெரிய வீடாகப் பார்க்க வசதியில்லையே அக்கா.''

''உன் புருஷன் சம்பாதிக்கலையா?''

''சம்பாதிக்கிறார், அன்னன்னைக்கு போர்றது. அவ்வளவுதான்.''

''எத்தனை சம்பளம் சீனிவாச ராவுக்கு?''

''சம்பளம் ஸ்திரமா இல்லை. அன்னன்னைக்கு பீஸ் ஒர்க் பண்றார். பண்டிகை சமயத்தில் நிறைய வரும். காப்பி சாப்பிடறியா'' என்று நெருப்புப் பெட்டியை எடுத்தாள். யமுனா சாவித்திரியின் இரண்டாவது குழந்தையை உற்றுப்பார்த்து ''இந்தா''என்று தன் கைப்பையைத் திறந்து சாக்லட் பட்டையை எடுத்துக் காட்டினாள். குழந்தை பதறிக்கொண்டு அவளிடம் ஓடிவந்தது. அதை எடுத்து தன் மடியில் உட்கார வைத்து யமுனா அலசி ஆராய்ந்தாள்.

''மூணும் பொண்ணா?''

''ஆமாக்கா. எப்ப சேலம் வந்தீங்க?''

''நேத்திக்கு அவருக்கு கான்ப்ரன்ஸ், நேஷனல்ல, தங்கி யிருக்கோம். எனக்கு ஏஸி ரூம் இல்லைன்னா உடம்பெல் லாம் அலர்ஜி ஆயிடறது.''

''எங்கேயோ வெளிநாட்டுக்கு போயிருக்கிறதா சொன் னாங்களே?''

''ஆமா, வோர்ல்ட் டூர் போய் வந்தாச்சு; இன்கம் டாக்ஸ்காரனுக்கு கொடுக்கறதுக்கு பதில்.''

யமுனா குழந்தையின் முகத்தில் இருந்த சிவப்புப் புள்ளிகளை ஆராய்ந்து ''என்னது கொசுக்கடியா வேர்க் கூரா?'' என்றாள்.

''யாரு கண்டா.''

''ச்ச்ச் கல்கண்டாட்டம் இருக்கு. எப்படி வாடிப் போயி ஏங்கிப்போயி சோனிப்பிச்சானா இருக்கு. குழந்தையைக் கவனிக்க மாட்டியோ?''

''அதுக்கெல்லாம் எங்கக்கா வசதி? முதலதைத்தான் கொஞ்சம் கொஞ்சினோம். அடுத்து அடுத்து ஒண்ணுன்னு ஆயிடுத்தா. இடையில அபார்ஷன் வேற. காப்பிக்கு சர்க்கரை போடட்டா.''

''ஒரு ஸ்பூன் போடு போரும், உம்பேர் என்ன செல்லம்?''

''தி...ரி...வே...ணி'' என்றது குழந்தை.

''பேர் எல்லாம் பெத்த பேராத்தான் இருக்கு. ஊட்டமே இல்லையே! சாவி! ஆப்பரேஷன் பண்ணிண் டியா இல்லையா?''

''இல்லைக்கா. அழைச்சுண்டு போறேன்னு சொல்லி யிருக்கார்.''

''எப்ப? இன்னம் ரெண்டு பெத்துண்டதுக்கப்புறமா? எப்படி இழைஞ்சுக்கிறது பாரு. வேத்து முகமே தெரியலை.''

''அவ கெட்டிக்காரி. வீடுவீடாப் போயி முறுக்கும் பிஸ்கட்டும் வாங்கிண்டு வந்துருவா.''

''ஒரு ஃபேன் வாங்கிப் போடக் கூடாதா? காத்து இல்லாம மூச்சுத் திணர்றதே!''

''ஃபேன் என்ன விலை இருக்கும்?''

யமுனா சற்று நேரம் யோசித்துத் தீர்மானித்தவள் போல் ''இத பாரு சாவி, ஒண்ணு சொல்றேன், அதை நிதானமா கேட்டு யோசிச்சுப் பாரு. உக்காரு.''

சாவித்திரி தரையில் அவளருகில் உட்கார்ந்தாள்.

''பாரு, எனக்கு வசதி இருக்கு. உனக்கு வசதியில்ல. ஏதோ பகவான் நம்ம தலைல எழுதி வெச்சிர்றான். என் அதிர்ஷ்டம் செயலாருக்கேன். உனக்கு மூணு குழந்தை. எனக்குக் குழந்தை இல்லே. இதோ இருக்கே இதை எடுத்துண்டு போயி நான் வளர்க்கறேன். என்னடி திரிவேணி, என்கூட வரயா. ரெயில்ல, ஏரோப்ளேன்ல எல்லாம் போகலாம்?''

''ஊம்'' என்று மடியில் தவழ்ந்து கட்டிக்கொண்டது. சாக்லட்டை எப்போதோ சாப்பிட்டாகி விட்டது.

''எப்படி ஒட்டிக்கிறது பாரு. ஒரே ரத்தமோல்லியோ?'' யமுனா சாவித்திரியை நிமிர்ந்து பார்த்து,

''என்ன சொல்றே?'' என்றாள்.

''ம், வந்து அவரைக் கேக்கணும்.''

''கேட்டு சொல்லு. எப்ப வருவார்?''

''ராத்திரி பத்து ஆகும். தீபாவளித் துணி ஜாஸ்தி எடுத்துண்டிருக்கார்.''

''ஊம், தையக்காரன் பெண்டாட்டின்னு' சின்ன வயசில நாம ரைம் சொல்லுவோம் ஞாபகமிருக்கா. கைல காதுல ஒரு குந்துமணியில்லை. என்ன வயசு உனக்கு இப்ப? இருபத்தஞ்சா? இப்பவே நாப்பது வயசாயிட்ட மாதிரி இருக்கே. கண்ணெல்லாம் குளுப்பை விழுந்துப் போச்சு. சாணிச் சுருணை மாதிரி—புடைவையா இது?'' சாவித்திரி அழத் துவங்கினாள்.

''அழாதடா கண்ணு. என் ராஜா. நீ என்ன செய்வே உன் தலையெழுத்து அப்படி! இப்ப ஒண்ணும் குடி முழுகிப் போயிடலை. முதல்ல ஒரு ஆப்பரேஷனைப் பண்ணிக்கோ. போதும் குழந்தைகள்! இந்த சின்னதை என் கூட அனுப்பிச்சுடு. பூ மாதிரி வெச்சுக்கறேன். நல்லா படிக்க வைக்கிறேன். மாசா மாசம் பணம் அனுப்பறேன் உனக்கு. மொத்தமாகவும் கொடுக்கறேன். எதுக்கும் உன் புருஷன் கிட்ட கேட்டுட்டு எனக்குத் தகவல் சொல்லு. நாளன்னை வரைக்கும் இருக்கேன். அவரோட பேசணும்னாலும் ஏற்பாடு பண்ணலாம். நாளைக்கே வரேன். இந்தா வெச்சுக்கோ'' பையைத் திறந்தபோது வாசனை அதிகரித்தது. இரண்டு நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்துக் கொடுத்தாள்.

''வேண்டாங்கா. அவர் வந்து...''

''என்னது. அக்கா தங்கைக்குக் கொடுக்கக்கூடாதோ? நல்லாருக்கே. பேசாம வாங்கிக்கோ.''

''வேண்டாம், நாளைக்கு வாங்கிக்கிறேன்.''

''சரி, கண்ணைத் துடைச்சுக்கோ. ஃபாரின் பவுடர், செண்டு, அப்புறம் இதுக்கு நல்ல கவுனா ரெண்டு மூணு செட்டு தெச்சுரு. நாளைக்கு வந்து அழைச்சுண்டு போறேன். என்ன, வரட்டுமா?''

யமுனா போனதும் சாவித்திரி கொஞ்ச நேரம் அந்த வாசனை வாசலையும், தன் பெண்ணையும் மாறி மாறிப்

பார்த்துக் கொண்டிருந்தாள். மல்லிகா வந்து, மாமி, உங்க கிருஷ்ணா வந்து எங்காத்து ரேடியோமேல சூச்சு போயிடுத்து. அம்மா வந்து துடைக்கச் சொன்னா?'' என்றாள்.

கிருஷ்ணாவை இடுப்பில் தொற்ற வைத்துக்கொண்டு திரும்பி வந்ததும் அதை ஒரு நெத்து நெத்தினாள்.

''கடங்காரி, ஏண்டி இப்படி மானத்தை வாங்கறே?''

கிருஷ்ணா உதட்டைப் பலவிதமாக சுருக்கி அழுகைக்கு ஆயத்தம் செய்து ''பே'' என்று நிதானமாக அலறுவதை மதிக்காமல் சாவித்திரி யமுனா கொண்டு வந்த செண்டைத் திறந்து முகர்ந்து பார்த்தாள்.

ராத்திரி பத்தரைக்கு சீனிவாசராவ் கத்தை கத்தையாய் துணித்துண்டங்களுடன் வந்தான். ''எல்லாத்தையும் தனியா எடுத்து வெச்சுரு சாவித்திரி கட்டிங்கே இன்னும் முடியலை. என்னிக்கு தீபாவளி?''

தட்டில் வைத்திருந்த மோர் சோற்றைக் கவளம் கவளமாக விழுங்கிக் கொண்டிருக்கையில் ''யமுனா வந்திருந்தா'' என்றாள்.

''யாரு உங்க ஒன்றுவிட்ட அக்காவா. அமெரிக்காவெல்லாம் போய் வந்தாங்களே...?''

''ஆமாம்.''

''அதான் வீடு பூரா செண்டு வாசனை? ஊறுகா இல்லையா? கடைக்கு சொல்லியனுப்பிச்சிருக்கக் கூடாதோ. நான் வந்து பார்த்திருப்பேனில்லை.'' கையலம்பும்போது சாவித்திரியை அருகில் வந்து முகர்ந்து பார்த்து கன்னத்தில் முத்தம் கொடுத்தான்.

''யமுனா வந்து ஒண்ணு கேட்டா.''

ஈரத்தைத் துடைத்துக் கொண்டதும் கீழே திசைக் கொன்றாய்ப் படுத்திருந்த தன் குழந்தைகளின் அருகில் ஆதங்கமாக உட்கார்ந்து கொண்டு, அவைகளின் சின்னக் கால்களை எடுத்து எடுத்துத் தடவினான்.

''கொசுக்கடி, பூச்சிக்கடி! என்னமா தன்னிப் போயிருக்கு. இதுக்குத்தான் பாய்கிட்ட அட்வான்ஸா அம்பது ரூபா கேட்டிருக்கேன். வரதராஜு கடையில் ஓவர் ஆல் பண்ண செகண்ட் ஹாண்ட் ஃபேன் ஒண்ணும் இருநூறு ரூபாய்க்கு வர்றது. தவணையிலே கேட்டிருக்கேன். கொடுக்கிறதா சொல்லியிருக்கான்...''

தன் குழந்தைகள் தூக்கத்தில் சிணுங்குவதை மதிக்காமல் மாறி மாறி முத்தமிட்டுக் கொண்டிருந்த கணவனை சாவித்திரி கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''யமுனா என்னவோ கேட்டான்னியே?''

''ஒண்ணுமில்லை...'' என்றாள்.

● ●

# 4

# ரேணுகா

ஐந்தரை மணிக்குக் குழந்தை எழுந்து படுக்கை நடுவில் சம்பிரமமாக உட்கார்ந்துகொண்டு அழுதது. தூக்கம் கலைந்த கணவன், ''சனியனைத் தூக்கிண்டு எங்க யாவது ஒழி'' என்றான். பசி அழுகை அது. ஆறு மணிக்குப் பால் வரும் வரை நிறுத்தாமல் முதல் கிண்டி உள்ளே சென்றால்தான் அடங்கும். என்னதான் தட்டினாலும் 'ஜோ ஜோ' கொட்டினாலும் 'கண்ணோல்லியோ' சொன்னாலும் சரிப்படாது

குழந்தையைப் பொறுக்கிக் கொண்டாள். அறைக் கதவை மூடிவிட்டு அழுகிறகுழந்தையுடன, பால் பாத்திரத் துடன் வாசலுக்கு வந்து நின்றாள். எதிரே குடிசை களுக்குப் பின்னால் வானம் காயம் பட்டிருந்தது 'சரக் சரக்' என்று ஊசி நிரடும் சப்தம் கேட்டு 'நாங்க புதுசா' ஆஆ...என்று தொடங்கியது ஒலிபெருக்கி தூக்கம் கண்ணில் கனத்தது காதருகில் குழந்தை ராகம் பாடிக் கொண்டு அலுப்பு இல்லாமல் அழுதது. அப்படியே குழந்தையையும் பால் பாத்திரத்தையும் போட்டுவிட்டு ஓட வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

சைக்கிள் பால் அரை லிட்டர் வாங்கிக்கொண்டு உள்ளே வந்தாள். குழந்தையை இடுப்பைவிட்டு இறக்கா மல் ஸ்டவ் பற்றவைத்தாள். சிமெண்ணெய் இல்லாது 'பக் பக்' என்றது. வாசற்பக்கம் வந்து அடுத்த வீட்டுக்கதவைத்

தட்டினாள். நேரம் கழித்துக் கதவு திறந்து அந்தப் பெண் டிரஸ்ஸிங் கவுனில் நின்று, ''என்ன?'' என்றாள்.

''கொஞ்சம் மண்ணெண்ணெய் வேணும் சுகி!''

''என்னங்க! தூக்கத்தைக் கெடுத்துட்டிங்களே! சாயங்காலமே வாங்கிக்கக் கூடாதா?''

''மன்னிச்சுக்க!''

''தினம் கடன்.''

''சேத்து வெச்சு கணக்குப் பார்த்துக் குடுத்துடறேன்.''

''ஆமா, குடுத்தீங்க!''

ப்ளாஸ்டிக் குவளை நிறைய மண்ணெண்ணெய் கொண்டு வந்து. ஸ்டவ் நிரப்பிப் பற்ற வைத்து, பால் பொங்கக் காய்ச்சி ஆற வைத்துப் புகட்டும்வரை விடாது அழுதுகொண்டிருந்த குழந்தை ஸ்விட்ச் போட்டாற் போல் நிறுத்தி அரை லிட்டரையும் குடித்துவிடும் அளவுக்கு 'ங்கா ங்கா' என்றது.

வாயைத் துடைத்து ஒரு ஸ்பூனைக் கையில் கொடுத்துக் கீழே விட்டாள். அதைக் குழந்தை தரையில் தட்டித் தட்டி விளையாட ஆரம்பிக்க, கிடைத்த தற்காலிக நிம்மதித் தீவில் டீ போட்டாள். பாத்ரூமுக்கு வந்து விறகடுப்பில் வென்னீர் வைத்தாள். முன் அறைக்கு வந்து கணவனை எழுப்பாமல் சட்டை பாண்ட் துவைத்திருந்ததைச் சேகரித்துக்கொண்டு இஸ்திரிப் பெட்டியைத் தட்டிவிட்டு குக்கர் பாத்திரம் தேய்த்து வைத்துக் கொண்டாள்.

கணவனது ஆடைகளுக்கும் மூத்த மகன் சீருடைக்கும் இஸ்திரி தேய்த்துவிட்டு மணி பார்த்தாள். 6-30 அரை மணியில் பஸ் வந்துவிடும். இன்னும் அவர் எழுந்திருக்கவில்லையே!

போர்வையை விலக்கி, ''எழுந்திருங்க நாழி ஆய்டுத்து'' என்று லேசாக அவனை அசக்கினாள். திரும்பிப்

படுத்துக்கொண்டு, "விடு. நான் இன்னிக்கு ஆபீஸ் போகலை!" என்றான்.

"ஏன் லீவா?"

"இல்லை. எனக்கு லீவ் நிறைய இருக்கு. நான் போகலை" என்று மறுபடி போர்த்திக் கொண்டான்.

அவன் ஆபீஸ் போகவில்லை என்றால் வீட்டு வேலைகள் எல்லாம் தலைகீழாகிவிடும். எழுந்திருப்பதற்குள் ஒரு பாதி துணியாவது தோய்த்துவிடலாம் என்று ஆணியில் மாட்டியிருந்த சட்டை, பனியன், பைஜாமா எல்லாவற்றையும் சேகரித்துக் கொண்டு பாத்ரூமுக்குள் வந்தாள்.

கணவனின் சட்டைப் பையில் ஒரு கடிதம் இருந்தது. ஆபீஸ் கடிதம் போலிருந்தது. பிரித்துப் பார்த்தாள். 'மெமோ' என்று போட்டு, அடிக்கோடிட்டு, கணவன் பெயர், வீட்டு விலாசம் எழுதி புரியாத முத்திரைகள் எண்களுக்கு அப்புறம்—

"நிர்வாகம் உங்களை வேலையிலிருந்து நீக்குவதற்கு உத்தேசித்திருக்கும் காரணங்கள் வருமாறு:

1. ஆபீஸ் பணம் ரூ. 5, 360-க்கு போலி ரசீதுகளும் வவுச்சர்களும் சமர்ப்பித்தது.

2. ஆபீஸ் வண்டியைச் சொந்த உபயோகத்திற்குப் பயன்படுத்தியது.

3. உயர் அதிகாரிகளுடன் சென்ற மாதம் 3, 18, 19 23 தேதிகளில் தரக்குறைவாகப் பேசி அவர்கள் நியமித்த நியாயமான பணிகளை மறுத்தது.

மேலே படிக்கப் பயமாக இருந்தது. இரண்டு பயம். வேலை போய்விட்டதா, இனி சம்பளம் வருமா என்கிற பயம் ஒன்று; இரண்டு, தான் இதைப் படித்துவிட்டதைத் தெரிந்துகொண்டதும் கணவன் என்ன செய்வான்என்கிற பயம். உடம்புப் பதறிப்போய் ஒருமுறை கணவனை வந்து

பார்த்தாள். நெற்றியைச் சுருக்கிக்கொண்டு படுத்திருந்தான்.

வேலை ஓடவில்லை. குழந்தை மறுபடி அழ, அதை இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டாள். "ஐயாயிரமா? என்ன செய்தார்! சகவாசம் சரியில்லை. ஒரு நாள் வாசனை அடித்ததே! ஆபீஸ் வண்டியில் எங்கே போனார்?"

எழுந்து வந்தான். டீ சாப்பிட்ட பிறகு கேட்கலாம். கேட்டுத்தான் ஆகவேண்டும். இப்போது வேண்டாம்.

ஒரே திசையில் பார்த்துக் கொண்டு பல் தேய்த்தவனைச் சூரிய வெளிச்சம் நெற்றிக் கோடுகளையும் முன் மண்டை நரையையும் ஸ்பஷ்டமாகக் காட்டியது. மௌனமாக டீ சாப்பிட்டான். குழந்தை அவனைப் பார்த்துச் சிரித்து "ப்பா" என்றது. கவனிக்கவில்லை. சிகரெட் பற்ற வைத்துக்கொண்டு புறக்கடைப் பக்கம் போனான். சுரேஷை எழுப்பி, நடத்தி முகம் கழுவச்செய்தாள். தூங்கி வழிந்தவனைத் தலையைத்தட்டி, "பள்ளிக்கூடம் போகணும்" என்றாள்.

கணவன் திரும்பி வந்து தரையில் உட்கார்ந்தான். சற்று நேரம் அவனையே பார்த்தாள். முதல் முறையாக நிமிர்ந்து "என்ன பாக்கறே? வீட்ல வேலை ஏதுமில்லையா?" என்றான்.

"உங்களை வேலைல இருந்து எடுத்துட்டாளா?"

"யார் சொன்னது?" என்றான் திடுக்கிட்டு.

"பையில கடுதாசி பார்த்தேன். அதில ஏதோ சஸ்பெண்டு அதுஇதுன்னு எழுதியிருந்தது. சரியாப்புரியலை."

அவன் முகத்து அத்தனை தசைகளும் உக்கிரத்துக்கு ஒத்துழைத்தன. "எப்பவும் என் பையை நோண்டறது தான் உனக்கு வேலையா?"

''துணி தோய்க்கறதுக்கு எடுத்தேன்.''

''என்ன புரிஞ்சுண்டே?''

''உங்களை வேலைல இருந்து...?''

''ஆமாம். என்னை சஸ்பெண்ட் பண்ணியிருக்கா.''

''திருப்பி எடுத்துண்டுடுவாளோல்லியோ?''

''திருப்பி எடுத்துக்கறான்? அறிவு கெட்டவளே. வேலை போகப் போறதடி! அவ்வளவுதான். க்ளோஸ்! நித்தம் என்க்வைரி நடத்தப்போறா!''

''என்ன ஒரு அநியாயம் பாத்தாங்களா? குடுக்கற சம்பளத்துக்கு மாடா உழைக்கிறவாளை இப்படி அபாண்டமா பழி சொல்லி...''

இந்த வாக்கியம் அவனைச் சற்று நிதானப்படுத்தியது போல். ''என்ன பண்றது? நல்லவனுக்கு இப்ப கால மில்லையே. அதிலே எழுதியிருக்கிறதெல்லாம் நிஜம்னு நினைச்சுண்டிருக்கியா?''

''இல்லவே இல்லை. உங்களை எனக்குத்தெரியாதா!''

''எல்லாம் பச்சைப் பொய்! நான் விட்டுடுவேனா ஏண்டா டேய்! சஸ்பெண்டா பண்றிங்க? திரும்ப அதே மானேஜ்மெண்ட் என்கிட்ட நாலு காலாலயும் தவழ்ந்து வந்து 'தெரியாம மெமோ கொடுத்துட்டம், திரும்பி வா வேலைக்கு'ன்னு கெக்கற வரைக்கும் இதை விடுவேனா? என்னன்னு நினைச்சுண்டிருக்காங்க பச்சை...ராஸ்கல்ஸ்? ஒண்ணாம் நம்பர் பொறுக்கிப் பசங்க!''

''சம்பளம் வராதா?''

''சஸ்பென்ஷன்ல இருக்கிறவரைக்கும் பாதி வரும் நமக்கு ஜெயிச்சவுடன் எல்லாம் சேர்த்து வெச்சு வந்துடும.''

இன்னொரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டான். ''நான் போய் ஒரு யூனியன் ஆசாமியையும் வக்கீலையும் பார்த்துட்டு வரணும். வென்னீர் போட்டிருக்கியா?''

''போட்டிருக்கேன், உப்புமா கிளறித் தரேன்?''

''எவ்வளவு சப்போர்ட் இருக்கு தெரியுமா எனக்கு? நினைச்சா ஆபீசையே ஸ்ட்ரைக் பண்ண வெக்க முடியும் என்னால..!' அவன், மடியில் சாய்ந்த சுரேஷை ''கொஞ்ச நாழி சும்மா விடுடா என்னை!'' என்று உதறித் தள்ளினான்.

உப்பமா சாப்பிட்டு விட்டு அவசரமாய் பேண்ட் மாட்டிக்கொண்டு கிளம்பும் சமயம், ''பணம் பத்து ரூபா வேணும், இருக்கா?'' என்றான்.

தயக்கத்துடன் ''இல்லை?'' என்றாள்.
''முந்தாநாதான் முப்பது ரூபா கொடுத்தேன்'',
''செலவழிஞ்சு போச்சு!''

சமையலறைக்கு வந்து சாமி படத்தின் அருகில், அலமாரி, பிளாஸ்டிக் பெட்டியில் என்று குடைந்து அவள் ஒளித்து வைத்திருந்த பதினைந்து ரூபாயைத் தோண்டி எடுத்தான் ''இதுக்குப் பேரு என்ன?''

'குழந்தைக்கு ஹார்லிக்ஸ் வாங்கணும்னு...'' என்று முடிப்பதற்குள், தேனீ கொட்டியதுபோல் அவள் தாடையில் அடித்தான், அடி வெடித்து மண்டைக்குள் வீண் என்று சற்று நேரம் ஒலித்தது. ''ஆளு கெடந்து செத்துண்டிருக்கான்- ஹார்லிக்ஸ் வாங்கறாளாம்! பொய் சொல்லாதே பொய் சொன்னா எனக்குப் பிடிக்காது' என்று விருட்டென்று புறப்பட்டுச் சென்றான்.

வலித்தது. தரையில் உட்கார்ந்தாள். குழந்தை அருகே வந்து வசீகரமாகச் சிரித்தது ''சுரேஷ், காணும், சுரேஷ் காணும்' என்று சுரேஷ், அம்மாவின் பின்னா

லிருந்து எட்டி எட்டிப் பார்த்து குழந்தையை இன்னும் சிரிக்க வைத்தான். கொஞ்ச நேரம் பிரமித்து உட்கார்ந் திருந்தாள்.

' அம்மா! இன்னிக்கு ஸ்கூல் லீவா?'' என்றான் சுரேஷ் ''யார் சொன்னா?'' என்று அவனை இழுத்துச் சென்று குளிப்பாட்டி, சட்டை, நிஜார் அணிவித்து? ஹார்லிக்ஸ் கொடுத்து, தலை வாரி, புத்தகங்களைச் சேகரித்தாள். குழந்தை சுவர்க்காரையைச் சின்ன நகங்களால் பெயர்த்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தது.

''மூதேவி! கண்டதைத் திங்கறியா?'' என்று அதன் முதுகில் வலிக்காமல் மொத்திவிட்டு எடுத்துக்கொண் டாள்.

வீட்டுக் கதவைப்பூட்டிவிட்டு இடுப்பில் குழந்தை யுடன் விரலில் சுரேஷுடன் நடந்தாள். சுரேஷைப் பள்ளிக்கூடத்தில் விட்டு விட்டு நாகநாதன் வீட்டிற்குச் சென்றாள்.

நாகநாதன் பூஜையிலிருநது வெளிவந்து சட்டை அணிந்து கொண்டிருந்தார்.

' இந்தாம்மா குங்குமம்...என்ன விஷயம். ஆபீஸ் கிளம்பற சமயம் வரே? பார்வதிக்குட்டி! '

''மாமா! இவருக்கு வேலை போய்டுத்தா?''

''அப்படியா சொன்னான்?''

''ஏதோ சஸ்பெண்டு சொன்னார். கேட்டா கோவிச்சுக்கறார் உங்க டிபார்ட்மெண்டுதானே? என்ன நடந்தது? எனக்குப் புரியும்படியா சொல்லுங்கோ!''

நாகநாதன் வாட்சைப் பார்த்தார். மூக்கைச் சொறிந்து விட்டு சற்று யோசித்தார். ''உண்மையைச் சொல்லிடவா? உன் புருஷன் ஆபீஸ் பணத்தை நிறைய கையாடிட்டு கையும்களவுமா மாட்டிண்டிருக்கான். பொய்க் கையெழுத்து போட்டிருக்கான் உடனே டிஸ்மிஸ் பண்ண ரூல்ஸ் இல்லாம சஸ்பெண்ட் பண்ணியிருக்கா,

என்க்வைரில் எல்லாம் வெளில வந்துடும். அவனை ஒத்தராலும் காப்பாத்த முடியாது. நிச்சயம் வேலை போய்டும். உன்கிட்ட சொல்ல வருத்தமாத்தான் இருக்கு. ஆனா உண்மையை நீ தெரிஞ்சுக்கணும். அவன் என்ன சொன்னான்?''

''எல்லாம் பொய். ஜோடனை, திருப்பி எடுத்துண்டு வாங்கறா.''

அவர் புன்னகைத்து, ''நடக்காது. நானே கண்கூடாப் பார்த்திருக்கேன். பைத்தியக்காரத்தனம். கோர்ட்டு கீர்ட்டுக்குன்னு போகச் சொல்லாதே!''

''நான் சொன்னா அவர் கேக்கமாட்டார்''

''கோர்ட்டுக்குப் போனா கிரிமினல் கேஸாப் போயி ஜெயிலுக்குப் போக வேண்டி வரும். ஏதோ டிபார்ட் மெண்டலா. என்க்வைரி நடத்தி டிஸ்மிஸ் பண்ணிட்டு அவன் கிராச்சுட்டி பணத்தில் கழிச்சுண்டு அதோட விட்டுடுவா! கன்னத்தில் என்ன சிவந்திருக்கு?''

''ஒண்ணுமில்லை மாமா. ஒரு பக்கமா அழுத்திப் படுத்துண்டது...இதில யாரும் ஏதும் செய்ய முடியாதா மாமா? நீங்க பார்த்து ஏதாவது சொல்லி...''

''என் வேலை போய்டும்...ஒண்ணும் முடியாதும்மா''

''இவர் தான் செஞ்சதெல்லாம் தப்புன்னு ஒப்புத் துண்டாக்கூட...''

''அப்படி ஒப்புத்துண்டாத்தான் போலீஸ் புகார் கொடுக்காம காதும் காதும் வெச்சாப்பல டிஸ்மிஸ் மட்டும் பண்ணி அனுப்புவா!''

''மாமா! நான் என்ன பண்றது? என்ன பண்ணுவேன்?''

''உன்னால ஒண்ணும் பண்ண முடியாதம்மா... விதி உன்புருஷனுக்குப் புத்தி வந்து வேறவேலை தேடிக்கணும். அதுக்கு என் அப்பன் முருகன் உங்களுக்கு அருள் புரியணும்...வேண்டிக்கோ!''

''வர சம்பளமே பத்து நாளைக்குப் போர்றதில்லை மாமா.''

''என்ன பண்றது? ஊர்ல ஒரு வீடு இருக்கில்லே?''

'அதை அப்பவே வித்துட்டார்.''

''வேற ஒரு மார்க்கமும் எனக்கு சொல்லத் தெரியல. குழந்தை! ஒருவேளை...''

''என்ன மாமா?''

''எங்க மானேஜிங் டைரக்டர் தேவய்யான்னு இருக்கார். அவர் மனசு வெச்சார்னா டிஸ்மிஸ் பண்ணாம ஏதோ ஒண்ணு ரெண்டு இன்க்ரிமெண்டை கட் பண்ணிட்டு பனிஷ்மெண்ட்டோட விட்டுறலாம்.''

''அவரை உங்களுக்குத் தெரியுமா?''

''சரியாப் போச்சு! அவரை என்னால் பார்க்கவே முடியாது...''

''அவர் வீடு எங்க இருக்கு?''

''ஏ. வி. ரோடில பெரிய பங்களா... நான் வரட்டுமா? பர்ஸ்ட் பஸ் போயிருக்கும் மனசைக் கெட்டியா வெச்சுக்கம்மா. முருகன் ஒருவழி காட்டிடுவார்.''

வீடு திரும்பியபோது கணவனும் இரண்டு பேரும். வாசலில் சிகரெட் பிடித்துக் கொண்டு காத்திருந்தார்கள்.

''எங்க போய்த் தொலைஞ்சே?''

''சுரேஷைப் பள்ளிக்கூடத்தில விட்டுட்டு வந்தேன்..

''இத்தனை நாழியா? சீக்கிரம் திற.''

உள்ளே நுழைந்தவுடன் ''மூணு கப் காப்பி போட்டுக் கொடு'' என்றான். குழந்தையைத் தரையில் விட்டுவிட்டு பக்கத்து வீட்டுக்கு ஓடினாள். சுகந்தி பளீச்சென்று வெளியே கிளம்பிக் கொண்டிருந்தாள். ''கொஞ்சம் காப்பிப்பொடி!''

''பேசாம நான் இங்க ஒரு பலசரக்கு கடை ஆரம்பிச்சுட்டன்னா ரெண்டு பேருக்கும் சௌகரியமா இருக்கும்!''

அவமானங்கள் மரத்துப்போன நிலையில் சிரித்தாள்.

காப்பி கொண்டு வைக்கும்போது அந்த ஆசாமி ''எப்படி இருக்கிங்க சிஸ்டர்?'' என்றான். குழந்தை தரையிலிருந்து சிகரெட் துண்டைப் பொறுக்கி வாயில் போட்டுக்கொண்டு 'கக் கக்' என்று இரும, அதை வாரிக் கொண்டு போய் வாயில் விரல்விட்டுச் சுத்தம் பண்ணி தண்ணீர் கொடுத்தாள்.

'கவலையே படாதே வாத்தியாரே? உன்னை ஒண்ணும் செய்துற முடியாது. வக்கீலைப் பாத்தியா?''

''வீட்ல இல்லை. மறுபடி போகணும்.''

''என்க்வைரில நான் உன் கட்சி எடுத்துப் பேசறேன்.''

''எல்லாம் அந்த ஆடிட்டர்—மகன் செஞ்ச வேலைப்பா. அவனுக்கு நூறு ரூபா அழுத்தியிருந்தா நடந்திருக்கவே நடந்திருக்காது.''

''நிச்சயமா சொல்லு. நீ அதெல்லாம் செய்யலை தானே?''

சற்றுத் தயக்கத்துக்குப் பின் ''இல்லை'' என்றான்.

''அப்ப உண்மை உன் பக்கம் இருக்கறப்ப எதுக்கு அஞ்சணும்? எதுக்கும் பார்க்கலாம்ப்பா! பணம் இருக்கா...?''

''ம்...இருக்கு...''

''சும்மா சொல்லாதே. இந்தா! இருபது ரூபா வைச்சுக்க. அப்புறம் வெற்றிக்கப்புறம் குடு...சிஸ்டர், வாங்கிக்கங்க.''

பணம் கொடுக்கும் போது அவன் விரல் பட்டது. 'வரேம்மா! கவலைப்படாதிங்க. நாங்கள்ளாம் இருக்கம்.'' அவன் பார்வை அவள் மார்பு, இடுப்பு, எல்லா இடத்தையும் வருடியது. குழந்தையால் தன்னை மறைத்துக் கொண்டாள்.

அவர்கள் சென்றதும் தனியாக இருந்த கணவன் அருகில் சென்றாள். ''நீங்க இவா பேச்சைக் கேக்காதங்கோ! செஞ்சது தப்புன்னு ஒப்புத்துக்கறதுதான் நல்லது விட்டுடுவா!''

''என்னடி? மறுபடி உதை வேணுமா? நானாவது மன்னிப்பு கேக்கறதாவது? அவன்னா கேக்கணும். கம்பெனிக்காரன்னா கேக்கணும்?''

''அதுக்கில்லை. கோர்ட்டு கீர்ட்டுன்னு போனா போலீஸ் கேஸ் ஆயிடுத்துன்னா!''

''உனக்கு என்னடி தெரியும்? பேசாம உன் வேலையைப் பார்த்துண்டு வீட்டிலே கிட. உன்னைக் கட்டிண்ட நாளில இருந்து வீடே துடைச்சுப் போய்டுத்து. குடுத்த காசிலே குடித்தனம் நடத்த முடியாம 'தாம் தூம்'னு செலவழிச்சு, என் வீட்டை வித்து...நீ தொட்டாலே எல்லாம் பூண்டோட நசிச்சுப் போறது...''

''அபாண்டமா பேசாதங்கோ. நான் என்ன செலவழிச்சுட்டேன்? எனக்குன்னு ஒரு திருஸ்தம் வாங்கிண்டேனா! என் நகையெல்லாம் வித்து...வீட்டு வாடகை, உப்பு, புளி, சாமான்னு...''

''சரி சரி! உன்னோடு வேற சண்டை போட எனக்குத் திராணி இல்லை.''

கேட்கக் கூடாது என்று தீர்மானித்திருந்ததைக் கேட்டு விட்டாள்.

''ஐயாயிரம் ரூபாயை என்ன பண்ணினேள்?''

''என்னடி சொன்னே?''

அவன் ஆக்ரோஷத்துடன், மூர்க்கத்தனத்துடன் மிருகக் கோபத்துடன் அவளை நோக்கி வர, குழந்தையைக் கீழே வைத்துவிட்டாள். ஓடினால் துரத்துவான் ஒரு மூலைக்குச் சென்றுவிட்டாள். முதல் அடி முகத்தில் விழுந்தது, பழக்கத்தில் முழுவதும் குனிந்து கொண்டு கைகளால் தடுத்துக்கொண்டு பெரும்பாலும் தோளிலும் முதுகிலுமே அடிகளை வாங்கிக்கொண்டு அங்குலம் அங்குலமாகச் சரிந்து உட்கார்ந்தாள். தலைமயிரைப் பிடித்து ஒரு முறை உலுக்கி விட்டு, ''ஒழிஞ்சு போறேன். வீட்டை விட்டே ஒழியறேன்!'' என்று வெளியே சென்று விட்டான்.

குழந்தை பயத்தில் வீறிட்டுக்கொண்டு அவளை நோக்கித் தவழ்ந்து வந்தது. வாய் ஓரத்தில் இருந்த ரத்தத்தைப் புடவையில் துடைத்தாள். உதட்டில் சுரீர் என்றது. அவள் அழவில்லை. உட்கார்ந்திருந்தாள்.

அரைமணி கழித்து எழுந்து புடவை மாற்றிக்கொண்டு குழந்தைக்குச் சட்டை மாற்றி, முகம் கழுவிக்கொண்டு கண்ணாடியில் பார்த்தாள். உதடு லேசாக வீங்கியிருந்தது வீட்டைப் பூட்டிக்கொண்டு குழந்தையுடன் வெளியே வந்து நடந்தாள்.

'ஆர். தேவய்யா' என்று அந்த நவீனமான பங்களா வாசலில் கல் சதுரத்தில் வெட்டிப் பதித்திருந்தது. கேட் கதவைத் தொட்டுச் சத்தம் பண்ணினாள். ஒரு வேலைக்காரன் வந்து ''யாரும்மா... ஒண்ணும் இல்லை போங்க!'' என்றான்.

''அம்மாவைப் பார்க்கணும்'' என்றாள்.

''நீங்க யாரு?''

''அம்மாவைப் பார்க்கணும் அய்யா!''

''குளிச்சுக்கிட்டிருக்காங்க. பிறகு வாங்க!''

' காத்திருக்கேனே!''

''கிருஷ்ணா! யாரது?''

''யாருன்னு கேட்டா சொல்ல மாட்டாங்கம்மா உங்களைப் பார்க்கணுமாம்.''

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தவளுக்கு நாற்பது வயதிருக்கும் போலிருந்தது. கையில் பத்திரிகை, கண்ணில் கண்ணாடியுடன் நின்றிருந்தவளை நோக்கி சட்டென்று கேட் கதவைத் திறந்து விருவிருவென்று நடந்து சென்று வாயிற்படியில் குழந்தையை வைத்துவிட்டுக் கீழே குனிந்து அந்த அம்மாளின் காலைப் பிடித்துக்கொண்டு விசித்து விசித்து அழுதாள்.

அவள் அதிர்ந்துபோய், ''சேச்சே! காலைத் தொடாதே! யார் நீ?''

அவளுக்கு மனதில் இருந்த அழுத்தம் எல்லாம் வடிய மூன்று நிமிஷம் அழ வேண்டியிருந்தது. நிறுத்தாமல் அலை அலையாக, கட்டுப்படுத்த முடியாமல் முகம் பூராவும் விகாரமாகி, மார்பில் தொப்பலாகக் கண்ணீர் நனைந்து அழுதாள்.

''இரு இரு! கிருஷ்ணா! என்ன இது பேஜாராப் போச்சு.''

''அதாங்கம்மா யாரோ ரோடில போற பொம்பளை. எந்திரிம்மா...''

''ஏய்! இதபார் பொண்ணு! முதல்ல எழுந்திரு. என்ன இதெல்லாம்...? எழுந்திரு...நீ ஒரு மனுஷி, நான் ஒரு மனுஷி ...எழுந்திரு...உள்ளே வா!''

திருமதி தேவய்யா கொடுத்த காப்பியை சாஸரில் ஊற்றிக் குழந்தைக்குக் கொடுத்துவிட்டு தான் பாதி குடித்துவிட்டுப் பேசினாள்:

''அவர் நல்லவர்னு சொல்ல வரலை நான். அவர் தப்பே செய்யலைன்னு சொல்லலை நான். எனக்கு ரெண்டு குழந்தை இவருக்கு வேலை போயிட்டா நாங்க நடுத்தெருவில நிக்க வேண்டியதுதான் அவர் தப்பு செஞ்சிருந்தா அதுக்காக ரெண்டு மடங்கு நான் மன்னிப்பு கேட்டுக்கறேன். எப்படியாவது உங்க வீட்டுக்காரர் கிட்டச்சொல்லி வேலைல இருந்து நீக்காம பண்ணுங்கோ. ஏதாவது பனிஷ்மெண்ட் கொடுக்கட்டும்; இன்க்ரிமெண்ட் கட்டுனு ஏதோ சொல்றாளே, அது மாதிரி ஏதாவது செய்யச் சொல்லுங்கோ. உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு,''

''என்னவா இருக்கார் உன் ஹஸ்பண்டு?''

''பர்ச்சேஸ் கிளார்க்.''

''இத பாரும்மா, என் புருஷன் ஆபீஸ் விஷயங்களில் நான் தலையிடறதே இல்லை. உதட்டில என்ன?''

''அடிச்சுட்டார்.''

''ஏம்மா இந்த மாதிரி புருஷன்கூட ஏன் குடித்தனம் பண்றே? பேசாம பிறந்த வீட்டுக்குப் போயிடேன்... அப்பா, அம்மா சோறு போடமாட்டாங்களா?''

''அப்பா, அம்மா கிடையாதும்மா. ஒரே ஒரு தங்கை இருக்கா குவாய்த்ல.''

''ச்ச்ச்...குழந்தை எவ்வளவு அழகாஇருக்கு. பேர் என்ன?''

''காவேரி.''

''காவேரி இத பாரு...வா...வா!'' என்று குழந்தையிடம் கையைச் சொடக்கினாள். காவேரி அவள்மேல் பாய்ந்தது. குழந்தையை எடுத்து வைத்துக் கொண்டு

''என் ஹஸ்பெண்டுக்கு இந்த விவகாரம் தெரிஞ்சிருக்குமான்னே சந்தேகம். அதெல்லாம் ஜி எம். ஆபீஸ்ல செய்யறாங்கன்னு நினைக்கிறேன்.''

''ஆனா அவர் சொன்னா நிச்சயம் ஆகும்னு...''

''நிச்சயம் ஆகும். கம்பெனி அவர்துதானே. ஆனா உத்திரவாதமா நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன். அவர் லஞ்சுக்கு வருவார் அப்ப நான் அவர்கிட்ட கேக்கறேன். இந்த மாதிரி விஷயம்; மனைவியைப் பார்த்தா ரொம்ப பரிதாபமா இருக்கு. அவளுக்காகவாவது ஏதாவது செய்ய முடியும்னா செய்யுங்கன்னு கேட்டுப் பார்க்கறேன்... சாதாரணமா ரொம்ப நல்ல மனசு அவருக்கு...நல்ல மூட்ல இருந்தா ஒத்துப்பாரு...''

''உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலை.''

''இந்த மாதிரி மறுபடி மறுபடி காலைப் பிடிக்காம இருந்தா சரி. தைரியமா இரு இந்த சீட்டில உன் ஹஸ்பண்டு பேரு. விவரம் எல்லாம் குறிச்சு வை...''

குறித்துக் கொடுத்தாள்... ''நான் வரேம்மா!''

''அழாதே! அழக்கூடாது. கொஞ்சம் இரு.'' உள்ளே சென்றாள். ஹாலை இவள் முதல்முறை சுற்றிப் பார்த்தாள். பத்து வயசுப் பெண்ணின் படம் பெரிசாக மாலை போட்டு மாட்டியிருந்தது. அதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க...

''என்ன பாக்கறே? அது என் பொண்ணு...செத்துப் போச்சு! அதும்பேரு காவேரிதான்...இந்தா வெச்சுக்க. இதுமாதிரி ஸாரியெல்லாம் நான் இப்ப கட்டறதில்லை... காவேரி! இத பார். சாக்லேட் வாங்கிக்கோ...''

மாலை ஐந்து மணியாகியும் கணவன் வரவில்லை. சற்றுக்கவலையாக இருந்தது ஒருவேளை ஆபீஸுக்குப் போய் ஏதாவது கலாட்டா செய்திருப்பாரோ என்று நாக்நா தன் வீட்டுக்கு மறுபடி போனாள்.

''வாம்மா! வா! சொன்னானா?''

''என்ன மாமா?''

''அவன் சொல்லலை?''

''வீட்டுக்கே வரலையே மாமா இன்னும்?''

''அவன் சஸ்பென்ஷன் ஆர்டரை ரத்து செய்தாச்சு!''

''அப்படியா?''

''எம். டி. கிட்ட இருந்து ஒரு போன் வந்ததாம்... பேசாம இரண்டு டியூணு இன்க்ரிமெண்ட்டை கட் பண்ணிட்டு, ஆளை விட்டுடுங்கோ. டிஸ்மிஸ் பண்ண வேண்டாம்'னு திட்ட வட்டமா சொல்லிட்டாராம் அவனையும் கூப்பிட்டு சொல்றதுக்கு ஆள் போச்சே! இன்னும் வரலையா அவன்?''

''தாங்க்ஸ் மாமா!''

''எனக்கு என்ன தாங்க்ஸ்! நீ போய் எம். டி.யைப் பார்த்தியா? ஏதாவது...''

''இல்லை. அவரைப் பார்க்கலை!''

''முருகன் வழி காட்டுவார்னு சொன்னேனோல்லியோ!''

''அவர் இன்னும் வரலையே!''

''வந்துருவான் வந்துருவான்...தப்பிச்சான்.''

வீட்டுக்குப் போய்க் கவலையுடன் சாப்பிடாமல் காத்திருந்து...

''ராத்திரி ஒன்பதரைக்கு ஒரு ஆட்டோவில் வந்து இறங்கினான்.

''பாக்கியை வெச்சுக்கப்பா!''

சற்றுத் தள்ளாடிக் கொண்டு வந்தான்.

''முழுச்சிண்டிருக்கியா?''

''ஆமாம். ஏதாவது ஆபீஸ்ல தெரிஞ்சுதா...?''

''குழந்தைங்க தூங்கிடுத்தா? இந்தா பொட்டலம்...''

''ஆபீஸ் போயிருந்தீங்களா? ஏதாவது தெரிஞ்சுதா?''

''சொல்றேன்' ரொம்ப இன்ட்ரஸ்டிங்! என்மேல புகாரை வாபஸ் வாங்கிண்டுட்டாங்க...பயந்துட்டாங்க... பசங்க! எல்லாம் கான்ஸல்! எல்ல்...லாம் கான்ஸல்... ஏதோ இன்க்ரிமெண்ட் கட்டுன்னான்...அதையும் விடற தில்லை. அப்புறம் அதையும் பைஃட் பண்ணப்போறேன்! தர்மம்! நியாயம்! இதபார். தர்மம் நியாயத்தின் பக்கத்தில் இருக்கிறவனுக்கு ஒண்ணும் ஒருதீங்கும் வராது. வந்தா பறந்து போயிடும். ஏண்டா டேய்! என்னை சஸ்பெண்ட் பண்ண முடியுமாடா?''

''சாப்பிட வரீங்களா...?''

''நிறைய சாப்பிட்டாச்சு! போய் படுக்க வேண்டியது தான். நாளைக்கு ஆபீஸ் போகணும். நீ சாப்பிட்டுட்டு வா! உன்னை அடிச்சுட்டேன் இல்லே! மன்னிச்சுக்கோ கண்ணு! மன்னிச்சுக்கோ...!''

சமையலறையில் தனியாக உட்கார்ந்து சாப்பிட்டு விட்டு, பத்துப்பாத்திரத்தை ஒழித்துப் போட்டுட்டு, மேடையை அலம்பிக் கோலம் போட்டுவிட்டு,மிச்சமிருந்த சாயங்காலப் பாலைத் தோய்த்துவிட்டு, கதவுகளைத் தாளிட்டுவிட்டு, சுரேஷை எழுப்பி பாத்ரூமுக்கு அழைத்துச் சென்றுவிட்டு, குழந்தைக்குப் போர்த்திவிட்டு, விளக்கணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

கணவன் விழித்துக் கொண்டிருந்தான். அவன் கை அவள் மார்பின்மேல் பட்டது.

''ஏய்! வா! இங்கே வந்து படுத்துக்கோ! ஏய்! வாயேன்!''

குழந்தையை இடம் மாற்றிவிட்டு அவன் அருகில் சென்று படுத்தாள்.

அவன் ஒருவித அவசரத்துடன் சடசடவென்று அவள் உடைகளைக் களைந்தான்.



# 5

# ரஞ்சனி

ஸார்! நான் எஸ். எஸ். எல். ஸி. வரைதான் படிச்சேன். அதற்கப்புறம் படிப்பு ஏறலெ. நான் எங்கப்பாவுக்கு இரண்டாவது பையன். என் அண்ணா நல்ல வேலையில் இருக்கான். அக்கா தங்கை கிடையாது. படிச்சு நெட்டுருப்போட்டு, பரீட்சை எழுதிப் பாஸ் பண்ண எனக்குச் சிரத்தை இல்லை; பொறுமை இல்லை; வரலை. அம்மா அப்பாவுக்குக் கவலையா இருந்தேன். எங்க குடும்பத்திலே சங்கீதம் கிடையாது. ஆரத்தி எடுக்கறதும் போது கூட எங்கம்மா பாடினது கிடையாது. எங்கப்பா நியூஸ் கேக்கறதுக்கு மட்டும்தான் ரேடியோ வைத் திருப்புவார். அப்படி இருக்க எனக்கு எங்கேயிருந்து இந்த வாத்யத்தின்மேலே மோகம்வந்தது? அது ஆச்சர்யம்.

எனக்கு நன்னா ஞாபகம் இருக்கு. நியூஸுக்கு ஒரு நிமிஷம் பாக்கியிருக்கிறபோது ரேடியோவிலே ஒத்தை வீணை மட்டும் வெச்சான். அப்பதான் தெளிவா எனக்கு ஆசை ஏற்பட்டுது; அது ரஞ்சனி ராகம்னு கேள்விப் பட்டிருக்கேன்.

மறுநாள் உள்ளூர் ராமய்யங்காரிடம்போய் ''ஸ்வாமி! இந்த வீணை வாத்யம் கத்துக்கறதுக்கு எத்தனை நாளாகும்?''னு கேட்டேன்.

''யார் கத்துக்கணும்? என்று கேட்டார்.

''நான்தான்'' என்றேன்.

''முதல்லே நீ சிகரெட் குடிக்கிறதை நிறுத்தணும். வேஷ்டி கட்டிக்கொண்டு வரணும். மூலைக் கடையில நீ சிகரெட் பிடிக்கிறதைப் பார்த்திருக்கேன் வீணை ஒரு தெய்விகமான வாத்யம். அதை அணுகறதுக்கு முன்னாலே மனுஷனுக்குச் சுத்தம் வேணும்...'' அப்படி இப்படின்னு சொன்னார். மாசம் நாப்பது ரூபாய் கேட்டார்.

அப்பா கிட்டப்போய், ''அப்பா நான் வீணை கத்துக் கலாம்னு இருக்கேன்'' என்றேன்.

''போடா, போய் மளிகைக்கடையிலே பொட்டலம் மடி. செப்டம்பருக்குப் படிக்கத் துப்பில்லை. வீணை கத்துண்டு என்ன வெங்கடேச பாகவதருக்கு ச்ருதிபோடப் போறயா'' என்றார் அப்பாவுக்கு வீணைக்கும் தம்பூரா வுக்கும் வித்தியாசம் தெரியாது.

என் அண்ணாவுக்கு கடிதம் எழுதினேன். ஐ.ஏ.எஸ். படிச்சுப்புட்டு பீஹாரிலே என்னவோவா இருக்கான். ''உன் சகோதரன்போல நீயும் முன்னுக்கு வரவேண் டாமா? இண்டஸ்ட்ரியல் லய்னிங் இன்ஸ்டிட்யூட்டிலே சேர்ந்து ஏதாவது தொழில் கத்துக்கொள்ளேன். அதுக்கு வேணா பணம் அனுப்பறேன்''னு பதில் எழுதி நிறையப் பொன்மொழிகளும் எழுதி இருந்தான். சரி, தொழில் கத்துக்கறேன்; பணம் அனுப்புன்னு எழுதினேன். பணம் அனுப்பலை. ஒரு அப்ளிகேஷன் ஃபாரம் அனுப்பினான்.

அம்மாகிட்ட கேட்டுப் பார்த்தேன். ''என்கிட்டே ஏதுடா காசு? ஒண்ணு செய்யேன். ஏதாவது வேலை பார்த்துக்கொள். அதிலே வர காசை நீ ஒண்ணும் எங்க கிட்ட கொடுக்க வேண்டாம்'' என்றாள். வேலையாவது கிடைக்கிறதாவது!

டைப்ரைட்டிங் கத்துக்க முயற்சி பண்ணினேன். மூணு ரூபாதானே!

எழுத்துக்களைத் திரும்பத் திரும்பத் தட்டறபோது அதிலே வருகிற தாளம்தான் என்னைக் கவர்ந்தது.

ராமய்யங்காரை மறுபடி போய்ப் பார்த்தேன் ''எதிர் வீணை வேணா நான் தரேன். ஆனா மாசாமாசம் சம்பளம் எப்படிக் கொடுப்பாய்?'' என்றார்.

''ஸ்வாமி! எங்க வீட்டுக்கு வருஷா வருஷம் குத்தகைக் காரன் நெல் கொண்டு வந்து கொடுப்பான். அதிலே ஒரு பாகம் கொடுக்கறேன்.''

''உங்கப்பாவுக்குத் தெரியாமலா?''

''ஆமாம்.''

''போடா!'' என்றார்.

சுந்தரத்தின் வீட்டில் அவன் தங்கை ராமய்யங்காரிடம் வீணை கத்துகிறாள். ரெண்டு வீணை இருக்கு அடுத்த வருஷம் அவளுக்குக் கல்யாணம் பண்ண உத்தேசம். அதுக்கு அவசர அவசரமாகத் தயார் பண்ணறா. அங்கே போய்ச் சந்தர்ப்பம் கிடைக்கற போதெல்லாம் கவனிப் பேன். ஒருநாள் கூடத்திலே ஒருத்தரும் இல்லை. வீணை மரியாதையா மூடியிருந்தது. துணியைத் திறந்து திருட்டுத் தனமா தட்டினேன். கடைசிக் கம்பி கீழே சுரம் அதிர்ந் தது. அப்பவே என் நரம்பும் அதிர்ந்தது; இடது கையை அவா மாதிரி வைத்து அழுத்தி அடித்துப் பார்த்தேன். சத்தம் சரியா வரலை கை விரல் சிவந்தது. பள்ளத்தைப் பார்த்துச் சரியா அழுத்த வரலை. சுதந்திரமா கம்பிகளை மட்டும் தட்டிவிட்டு அவா மாதிரி 'ஸ...ப...ஸா' என்று மனசில் சொல்லிக் கொண்டேன்

என் மனசிலே நான் ஒரு பெரிய சபைக்கு முன்னாலே வாத்யத்தைச் சிதற சிதற வாசிக்கறாப் போலேயும், சபை ஜனங்கள் பிரமிப்பிலே கைதட்ட முடியாம மயங்கி இருக்கிறாற் போலேயும், அவா எனக்கு மாலை போட்டு அமெரிக்காவுக்கு அனுப்பறாப் போலேயும், அந்த

அழகான பெண் வந்து என்கை விரல்களை முத்தமிடறாப் போலேயும் கற்பனை பண்ணிண்டிருந்தேன். அவா வீட்டு வேலு வந்து "என்ன தம்பி! வீட்டுக்குள்ளாறயே வந்துட்டியே"ன்னு கலைச்சான்.

தைரியமா ஒரு காரியம் செஞ்சேன். கோட்டைக்குப் போய் ஒரு காயலான் கடையில எங்க வீட்டுச் சைக்கிளை வித்துட்டேன். திரும்பி வந்து அப்பாகிட்ட மைதானத்திலே சைக்கிள் தொலைந்து போய்விட்டதுன்னு சொன்னபோது அவருக்கு ரொம்பக் கோபம் வந்துட்டது. நான் சொல்றது பொய்னு அவருக்குச் சந்தேகம். "வா, போலீஸ்லே போய்க் கம்ப்ளெய்ண்ட் கொடுக்கலாம்" ஜாஸ்தி பொய் சொல்ல வரலை. இன்ஸ்பெக்டர் கேள்வி கேட்கக் கேட்க எனக்குக் கழண்டு போச்சு.

அப்பா "எங்கேடா காசு?" என்றார். பனியனுக்குள்ளே இருந்து எடுத்துக் கொடுத்தேன்.

"எதுக்குடா வித்தே?" என்றார்.

"வீணை வாங்க" என்றேன்.

அப்பா போலீஸ் ஸ்டேஷனிலே என்னை அடிக்கலை. வீட்டுக்கு வந்ததும் அடிச்சார்: அம்மா தடுத்து "அவனுக்கு வர மாசிக்கு இருபது வயசாகப் போகிறது. அவனை அடிச்சா ஏதாவது ஒண்ணு கிடக்க, ஒண்ணு ஆய்டும். பேசாம விட்டுடுங்களேன். கத்தட்டுமே! அவனுக்குப் புத்தி அதிலேதான் போறதோ என்னவோ" என்றாள்.

"அப்பா, என்னை அடிக்க உங்களுக்கு உரிமை இருக்கு. நான் உங்களுக்கு உபயோகமில்லாம சும்மயா இருக்கேன். ஆனா, நீங்க இந்தக் காசைக் கடன் மாதிரி எனக்குக் கொடுங்க. மாசாமாசம் கணக்கு வெச்சுக் கொள்ளுங்கள். எப்படியாவது பிற்காலத்திலே சம்பாதிச்சு உங்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்" என்றேன்.

அப்பா சிரித்தார். அப்பாவையும் குற்றம் சொல்ல முடியாது. மூத்த பையன் வசதி வந்ததும் அப்பா

அம்மாவை மறந்துட்டான். சௌக்கியமா சௌக்கிய மான்னு கடுதாசி எழுதுகிறானே ஒழிய, காசா·பணமா ம்ஹூம்' நான்தான் இருக்கவே இருக்கேன் நாங்க மூணு பேரும் அப்பா பென்ஷனிலே வாழணும் சொந்த வீடு தான் நிலம்தான். அந்த நிலத்திலே லிடிகேஷன் தகராறு கொஞ்சம் இருக்கு. அதனாலே எப்படியாவது என்னை ஒப்பேத்தி விடணும்னு ஆசைப்படறார். நான் வீணை வாசிக்கணும் என்கிறேன்!

ராமய்யங்கார்கிட்ட அப்பா பேசி, அதட்டி கிதட்டி மாசம் இருபத்தஞ்சு ரூபாய்க்குச் சம்மதிக்க வைத்தார்.

நான் வீணை கத்துக்க ஆரம்பிச்சேன்.

இதுலே பாருங்க ஸார், என்னுள்ளே ஒரு புயல் இருந்து அதற்கு வெளியே வர ஒரு வாய்ப்பு கிடைச்சாப்பலே ஆய்டுத்து. நான் ஆரம்பிச்ச விதமே தப்பு எனக்கு வாத்தியம் கையாளத் தொடங்கின வெள்ளிக் கிழமை ஞாபகம் இருக்கு. வாத்தியத்தை விழுந்து சேவிக்கச் சொன்னார் மாயா மாளவ கௌளாவின் சுரங்களை எல்லாம் புள்ளி வெச்சு மார்க் போட்டிருந்தது. அந்த வீணையில் ராமய்யங்கார் இதுதான் 'ஸ'ன்னு தட்டினார் என் கைவிரலை மடக்கி அழுத்தி நாதம் பண்ணச் சொன்னார். எப்படி அழுத்தறதுன்னு தெரிஞ்சப்புறம், இரண்டு சுரம் பிசிறில்லாமல் சுத்தமாகக் கேட்டப்புறம் எனக்குச் சைக்கிள்லே பாலன்ஸ் கிடைச்சாப்பலே ஆய்டுத்து அதையே 108 தடவை வாசிக்கச் சொல்லி விட்டுப் பின்கட்டுப்பக்கம் போனார். நான் அவர் போன உடனே மற்ற சுரங்களைத் தேட ஆரம்பிச்சேன். அந்தப் பெரிய கம்பியைத் தட்டிப் பார்த்தேன் அதிலே ஒரு ஸ்வரத்தைப் பிடித்துக் கொண்டேன். அது இனிமையா இருந்தது.

திரும்பி வந்த வாத்தியார் கேட்டுண்டே வந்தார். கோபித்துக் சொண்டார். நிதானம் வேணும். சாதகம்ங்

கிறது இந்த மாதிரி கன்னா பின்னா என்று தேடித்தேடி வாசிக்கிறதில்லை. சங்கீதத்திலே இருக்கிற ஆதர சுரங்களைப் பத்திச் சொன்னார். அஸ்திவாரம் கட்டறதைப் பத்திச் சொன்னார். பொறுமை வேணும் என்றார்.

பொறுமையில்லை. அதுதான் என்கிட்டே இருந்த தலறு அந்தச் சரளி ஜண்ட வரிசைகளையும் வர்ணங்களையும் நிதானமா பொம்மனாட்டி மாதிரி ஒவ்வொரு தடவையும் தாளக் கம்பிகளைச் சிதற அடிச்சுண்டு வாசிச்சுப் பழகப் பொறுமையில்லை. ஏதோ நாளன்னிக்குச் செத்துப் போய் விடப் போகிறேன், அதுக்குள்ளே இந்த வாத்யத்தைக் கரை காண வேணுங்கறாப் போல அவசரம்! நோட்டிலே எழுதி நெட்டுருப் போட முடியல்லை. அவரோட சேர்ந்து வாசிக்க முடியல்லை.

இரண்டு மாசம் பார்த்தார். எங்கப்பாவைக் கூப்பிட்டார். சொன்னார்: 'உங்க பையனுக்குக் கட்டுப் பாடு கிடையாது. அவனுக்குச் சங்கீதம் வராது ஸ்வாமி, உங்க பணம் வேஸ்ட்' என்று

எனக்கு அழுகை வந்தது. அப்படி சொன்னதால் இல்லை என்னை வீணை வாத்யத்திலிருந்து பிரிச்சுப் பட்டார். என் விரல் பழகறதுக்கு முன்னாலே, என் மனசிலே வடிவம் வடிவமா இருக்கிற ஆசைகள் எல்லாம் விரல் வழியா ரூபம் பெறுவதற்கு முன்னாலே என்னைப் பிரிச்சு விட்டார், மறுபடி டைப் அடிக்கப் போன்னு சொல்லிட்டார் அப்பா.

அப்பதான் எனக்கு வேலை கிடைச்சுது அதுவும் அப்பாவினாலேதான். உள்ளூர் கோ-ஆபரேட்டிவ் ஸ்டோர் பிரஸிடெண்டைத் தெரியும் அதிலே ஒரு கிளார்க்குக்கு டைபாய்ட் வந்து இரண்டு மாசம் லீவ் போட்டிருந்தான். அந்த லீவ் வாகன்ஸியில் எனக்கு மன்றாடிக் கிடைச்சது கிலோ 4.66 பைசா மேனிக்கு 6 கிலோ 75 கிராம்னு டெஸிமல் கணக்குப் போட ஆரம்பிச்சேன். எழுதறபோது

ஆறு அஞ்சு முப்பது, ஆறு ஏழு நாப்பத்திரண்டுன்னு பெருக்கல் மெதுவா மெதுவா ராகமா மாறும். மாறி மனசில் சஞ்சாரம் பண்ணும் அந்தப் பெயரில்லாத. நம்ப ரில்லாத வடிவங்களைத் தேடுவேன். கணக்கிலே நிறையத் தப்புப் பண்ணி ராத்திரி 9-30 வரைக்கும் கூட்டிக்கழித்தும் சரியா வராது. அவாளுக்குப் பொறுமை இழந்து போய் எனக்கு வேலையும் இழந்து போய், அப்பா. 'ஏண்டா, நான் ரிடயரானப்புறமும் இப்படி என் முதுகிலே உட்கார்ந்திருக்கே 'ன்னு அலுத்துண்டு 'ஸின்பாட் தி ஸெய்ல' ரிலிருந்து ஒரு கதை சொன்னார். எனக்கு அவமானமாக இருந்தது. அப்புறம் நானே சொந்த முயற்சியா முனிஸிபாலிடி சேர்மன்கிட்ட போய்க்கெஞ்சிக் கேட்டு அவர் ஓனராக இருக்கும் பெட்ரோல் பங்கில் கணக்கு எழுதற வேலை கிடைச்சது. மறுபடி பெட்ரோல் டீஸல்லிட்டர் கணக்குத்தான். கொஞ்சம் கவனமா இருந்தேன். அந்த ஏமாற்றத்துக்கப்புறம் ஒரு மாசம் ஆயிடுத்தே. இந்த வேலை கொஞ்சம் நிலைச்சுது அம்மா என் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ண ஆரம்பித்து விட்டாள்.

நான் கல்யாணத்துக்குச் சம்மதிச்சதுக்கு முதல் காரணம் வீணை. அம்மா! எனக்கு சூட் வேண்டாம், ரிஸ்ட்வாட்ச் வேண்டாம். அவாளை ஒரு வீணை வாங்கிக் கொடுத்துடச் சொல்லு. வாத்தியார் காட்டற பொண்ணுக்குத் தாலி கட்டறேன்னு சொல்லிட்டேன். அம்மா சிரிச்சா. எனக்குக் கல்யாணம் நடந்தது. நெருப்பிலே நெய்யை விடறபோது நாதஸ்வர சங்கீதத்திலே ஆழ்ந்து, தவில் கருவி மாதிரி உருளுவதைக் கவனிச்சுண்டு அவ பட்டுப் புடவையெல்லாம் நெய்யாக்கின ஒரே மாப்பிள்ளை நான்தான்னு நினைக்கிறேன். அந்தப்பாவிப்பயல் மலய மாருதத்தை அப்படி வாசிச்சான்.

என் கல்யாணம் நடந்தது. அதுக்குமுன்னாலேயே ஒரு நல்ல தஞ்சாவூர் வீணையா வாங்கியாச்சு. புதிய வீணை. புதிய பெண். இரண்டும் எனக்கு மிகவும் புசுது. இரண்டும்

பெரிய ஸப்ஜெக்ட். வீணையைப் பத்தியாவது பரிச்சயம் உண்டு. பெண்ணைப்பத்தி ஒண்ணுமே தெரியாது. நாங்க ரெண்டு பேரும் அறைக்குள்ளே படுத்துக்கற சந்தர்ப்பம் வந்தபோது அந்த வீணை ஓரத்திலே இருந்தது. மூணுமணி நேரம் அவள் சும்மா உட்கார்ந்திருக்க, நான் ஸ்வரங்களைத் தேடிக்கொண்டிருந்தேன். நிமிர்ந்து பார்த்த போதுதான் அவள் உட்கார்ந்திருந்தது ஞாபகம் வந்தது. அவள் கண்களில் 'என்னை வாசியுங்களேன்' என்று சொன்னதுபோல இருந்தது.

ஒரு வீணைக்காகக் கணவனான என் கல்யாண வாழ்க்கை எப்படி இருக்கும்? கல்யாணம் என்கிறது ரொம்பப் பெரிய பொறுப்பு, ஸார் எனக்கு அது முதல்லே தெரியலை. ஆனா, ஒரு வாரத்துக்குள்ளே, ''நாம எப்ப தனியா குடித்தனம் போகப் போறோம்''னு கேட்டப்போ தெரிஞ்சுது. பெட்ரோல் பங்க் கிளார்க் எப்படி வாடகை கொடுத்துண்டு தனியா இருக்கமுடியும்! அம்மாவுக்கும் அவளுக்கும் கொஞ்சம் சரிப்பட்டு வரல்லை ''என் கையைப் பாருங்கோ, கிணத்திலே தாம்புக் கயிறு இழுத்து இழுத்து எப்படிச் சிவந்திருக்கு'ன்னு காட்டுவா. கம்ப்ளெய்ண்ட் பண்ணுவா. நான் என் கையைக் காட்டுவேன். கம்பிகளை அழுத்தி அழுத்தி எப்படிக்காய்ச்சுப் போயிருக்கிறது என்று. அம்மாவைப் பத்தி அவ புகார் சொல்றது எனக்குப் பிடிக்கலை. என் அம்மா அம்மாதான் சீதா தேவியை மாமியாரா இருந்தாக்கூட ஒரு மருமகள் புகார் தான் சொல்வாள் போலிருக்கு. ஆதிகாலத்திலிருந்தே ரஸ்பா இருக்கிற உறவு போலிருக்கிறது இது. நான் இதையெல்லாம் கவனிக்கிறதில்லை வீணை வீணை வீணைதான் காலையிலே அவசர அவசரமாப்பல்லைத் தேய்த்துவிட்டுக் காப்பி சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்துவிடுவேன். ஒன்றரை மணி நேரம் சாதகம். அப்புறம் பங்குக்குப்போய் வந்த உடனே...எட்டு மணிவரை. ஒரு சினிமா கிடையாது. விளையாட்டுக் கிடையாது. பெண்டாட்டிக்கு எப்படி

இருக்கும்! ஒரு நாள் வீணை வாசித்துக் கொண்டிருந்தேன். எதிரே உட்கார்ந்து என்னையே அரை மணியா பார்த்துண்டிருந்தா. ஒரு தடவை நிமிர்ந்து பார்த்தேன். ''எப்படி இருந்தது?'' என்றேன்..

''உங்களுக்கு லேசா ஒன்றரைக் கண்' என்றாள்.

''அவ்வளவுதான் கவனிச்சியா? என் வாசிப்பைக் கவனிக்கலையா?''

''எனக்கு என்ன தெரியும், சங்கீதத்தைப் பத்தி? ஆனா, இது மட்டும் தெரியும். நீங்க ரெண்டு பெண்டாட்டிக்காரரர். மூத்தாள் நான்; இளையாள் உங்க வீணை'' என்றாள். நான் சிரிச்சேன். அவள் கண்ணீர் விட்டாள். எனக்குப் புரியலை.

''உங்களுக்கு என்ன ஆசை? பெரிய வித்வானாக வேண்டும் என்றா?''

''இல்லை!'' என்றேன்.

''பின் ஏன் ராப்பகலா மடேர் மடேர்னு தட்டறேள்? வேதனையா? இதிலே என்ன பணமா, காசா? எல்லாரும் வாசிக்கிறாப்பலேயே இல்லை, நீங்க வாசிக்கிறது கன்னா பின்னா...''

அடிச்சேன். ''உனக்கு என்ன தெரியும் இதைப்பத்தி?'' என்றேன். அடிச்ச கொஞ்ச நாழிக்கெல்லாம் சமாதானம் ஆகிவிட்டோம்.

என் முதல் பெண்ணுக்கு ரஞ்சனி'ன்னு பேர் வெச்சேன். ரேடியோவிலே ஆடிஷனுக்குப் போய் வந்தேன். மிருதங்கத்துடன் வாசித்துப் பழக்கமே இல்லை. ''முழுசா மூணு நாலு கீர்த்தனம் வாசிக்கக் கத்துட்டு வாங்க''ன்னு சொன்னான், அந்த அதிகாரியோ யாரோ. சரிதான் போய் யா'ன்னு வந்துட்டேன். எனக்கு எதுக்கு இந்த ஆசையெல்லாம்?

ஆனால், என் வாசிப்பிலே நிச்சயம் இம்ப்ரூவ்மெண்ட் இருந்தது

பேசாம கணக்கு எழுதிண்டு இருந்தேனா இல்லையா? இந்தச் சிதம்பரம் வந்து வெறுப்பேத்திட்டுப் போய்ட்டான். சிதம்பரம் என் பழைய பள்ளிக்கூடச் சிநேகிதன். பட்டணத்திலே செயலா இருக்கான். ரொம்ப நாளைக்கப்புறம் தகப்பனாரைப் பார்க்க லீவிலே வந்தான். என்னை வந்து பார்த்தான். ''இப்ப என்ன பண்றே நீ?'' என்றான், பெட்ரோல் பங்க்கிலே கணக்கு எழுதறேன், வீணை வாசிச்சிண்டிருக்கேன்னேன். வாசிச்சுக் காட்டச் சொன்னான். ஒரு பாட்டு வாசிச்சுக் காமிச்சேன். ' என்னடா இது?''ன்னான்.

''என்ன?''

''எங்கேயிருந்து கத்துண்டே?''

''ஐயங்கார் சொல்லித் தர மாட்டேன்னு சொல்லிட்டார். சொந்தமாகத்தான் கத்துண்டேன்.''

''இந்த மாதிரி வாசிப்பை வெச்சுண்டு பெட்ரோல் பங்க்கிலே கிளார்க்கா இருக்கியா? ரேடியோவுக்கு ஆடிஷனுக்குப் போனாயா?''

''போனேன்.''

''செலக்ட் பண்ணினாளா''

''ஒண்ணும் தகவல் தெரியல்லே.''

''டேய்! உன் வாசிப்பு என்ன லெவல் தெரியுமா? இப்ப முன்னணியிலே இருக்கிறவாள்ளாம் (கையைக் கீழே காட்டி) இங்கே இருக்கான்னா நீ (உத்தரத்தைக் காட்டி) அங்கே இருக்கே! மெட்ராசுக்கு வாடா. ஒரு சபையிலே வாசி, போதும். காட்டுத் தீ மாதிரி பரவிடுவே—காசு வரும். புகழ் வரும்...பாவிப் பயலே, என்னமா வாசிக்கறே?'' என்றான்.

அவன் சொன்னதிலே ஒண்ணும் பொய்யோ, முகஸ்துதியே இல்லேங்கறது சுலபமாகத் தெரிஞ்சுது. இயல்பாகவே ஒரு பாட்டிலேயே அசந்து போயிட்டான். கிளம்பறபோது கூட அப்பாகிட்டே என்னைப்பத்தி 'ஓஹோ ஓஹோ'ன்னு சொன்னான். 'உங்க வீட்டிலே இருக்கிறது ஒரு ஜீனியஸ்'னு சொன்னான். அப்பா மெட்ராஸ்லே மல்லாக்கொட்டை என்ன விலை விக்கறதுன்னு விசாரித்தார்.

அவன் போனப்புறம் எனக்குக் கொஞ்சம் ஆசை ஏற்பட்டது போய்த்தான் பார்க்கலாமேன்னு பட்டுது. துணிஞ்சு பெட்ரோல் பம்புக்கும், டீஸல் பம்புக்கும், கம்ப்ரெஸ்ஸருக்கும்,பேரேடு புத்தகத்துக்கும் பிரியாவிடை கொடுத்துட்டு, சம்பளப் பாக்கியை எண்ணி வாங்கிண்டு (87 ரூபாய் சொச்சம்) வடக்கே சூலமில்லாத ஒருநாளிலே பொண்டாட்டி குழந்தை வீணை சகிதமாகக் கிளம்பிட்டேன். சாமான் ஜாஸ்தி எடுத்துக் கொண்டு போகல்லே. ஏராளமான நம்பிக்கையைத்தான் எடுத்துண்டு போனேன்.

பழைய மாம்பலத்திலே ஒரு வீட்டிலே, ஒரு ஓரத்திலே இடம் பார்த்து வெச்சான் சிதம்பரம் சின்னரூம். வீணை வாசிக்கறதுக்கு கராஸா உக்கார்ந்தாத்தான் முடியும். அவனுக்கே தெரிஞ்ச சபா செக்ரட்டரியை அறிமுகப்படுத்தறதுக்காக வரச்சொன்னான் சிதம்பரம்.

ஒண்ணரை ரூபாய் கொடுத்து ஆட்டோ ரிக்ஷாவிலே போனேன், வீணையை எடுத்துண்டு. அந்தச் சபாக் காரியதரிசி சந்தனப்பொட்டு வச்சிண்டு ஜிப்பா புகையிலை சகிதம் என் மனசிலே சபாக் காரியதரிசி எப்படி இருப்பார்னு நெனைச்சேனோ, அப்படி இருந்தார் நிறைய காகலி. நிஷாதம், இந்த காந்தாரம், அந்த காந்தாரம்னு டெக்னிகலா பேசினார். வாசிக்கச்சொன்னார். வரநாராயணா வாசிச்சேன். வராளி மாதிரி இருக்கேன்னார். உமக்கு யார் சங்கீதம் சொல்லித் தந்தான்னு கேட்

டேன். அவருக்கு மூஞ்சி மாறிப் போச்சு. சிதம்பரத்தைப் பார்த்தார். என்னைப் பார்த்தார். ''நின்னுவினா'' வாசிங்க என்றார். நான் பேசாமெ ''நின்னுவினா'' வாசிச்சிருக்கலாம் எனக்கென்னவோ புத்தி அப்படி போச்சு 'நின்னுவினா' வாசிக்கறதுக்குப்பதிலா, ஸ்வாமி. நின்னுவினா, ரகு வம்ச சுதாவெல்லாம் பாமர ஜனங் களுக்கு, ஸ்டூடண்சுக்கு, சங்கீதப் பிரக்ஞையே இல்லாமல் சடசடன்னு மழை வேகத்தைப் பார்த்து மயங்கி கை தட்டறவாளுக்கு வாசிக்கிற பாட்டு உங்களுக்குத் தெரிய வேண்டியது இந்த அனுபல்லவியோட வேகம்தானே?''ன்னு சொல்லிவிட்டு அந்த அனுபல்லவியை சண்டமாருதமா வாசிச்சேன். நிறுத்தினேன். அவர், ''சிதம்பரம், இப்படி வாங்க'' என்று அவனை ரூமுக்கு வெளியே அழைச்சுண்டு போனார். திருப்ப சிதம்பரம் மட்டும்தான் வந்தான்.

''என்ன சொன்னார்?'' என்று கேட்டேன்.

''பையனுக்கு டாலண்டு இருக்கு ஆனா, பெரிய சூரன் மாதிரி பேசறான்னு சொன்னார்'' என்றான்.

''நான் பெரிய சூரன் மாதிரி பேசறதுக்குக் காரணம் நான் பெரிய சூரனாக இருக்கறதினாலேதான்'' என்றேன் மேலே ஆவேசம் வந்ததுபோல ''நான் யார்றா? நான் ஒரு ஜீனியஸ்டா. அதை ஒரு அடியிலே, ஒரு வரியிலே, ஒரு பாகம் வாசிச்சபோதே தெரிஞ்சுக்க வேண்டாம்! நான் இந்த சங்கீதத்தை ஒப்பேத்தறதுக்கு அவதாரம் செஞ்சிருக் கேண்டா'' என்றேன்.

''இதபார். நீ முன்னுக்கு வரணும்னாக்க இப்படிப் பகவான் கீதையிலே பேசற மாதிரி பேசக் கூடாது. ஒருத்தரும் உன்னைச் சீந்தமாட்டா. உங்கிட்ட விஷயம் இருக்கு. அதைப்பிறத்தியார் தெரிஞ்சுக்கறதுக்கு சான்ஸா வது கொடுக்க வேண்டாமா? முதல்லே நீ ரசிகரைத் தேடிண்டு போகணும்...அப்புறம்தான் அவா உன்னைத் தேடிக்கொண்டு வருவா'' என்றான்.

நான் சந்திச்ச இரண்டாவது சபா ஆசாமியோட சண்டை ஏற்படல்லே. நான் பேசவே இல்லே வாசிச்சேன். வாசிக்கச் சொன்ன பாட்டை வாசிச்சேன் கேட்டார்.

''நல்லா வாசிக்கும் இளம் வித்வான்களுக்காக ஒரு சீஸன் வரது, அதிலே சேர்த்துடறோம். ஒன்றே, ஒன்றே கால், ஒன்றரை மணிநேரம் வாசிக்கட்டும் முதல்லே. நிறையப் பேரை அகாமடேட் பண்ண வேண்டியிருக்கு''ன்னு சொல்லிவிட்டுப் போயட்டார்.

எனக்குச் சான்ஸ் வந்து நான் செய்த முதல் கச்சேரியைப் பத்திச் சொல்றேன். என் டர்ன் எப்ப வந்தது தெரியுமா? பஸ்ஸுக்கு நாழியாயிடும்னு எல்லோரும் எழுந்து போனதற்கப்புறம் லேட்டா வந்தது. கொடுத்த ஒண்ணேகால் மணி நேரத்திலே ஒரு பாட்டே பூரணமாக வாசிக்க முடியலே. மிருதங்கக்காரர் வேறு கொஞ்சம் ஸீனியர் ஆசாமி போல இருக்கு. என்னைப் பூச்சியா மதிச்சுத் தட்டிண்டிருந்தார்! முன்வரிசையில் யாரையோ பார்த்து அடிக்கடி சிரிச்சிண்டிருந்தார். நான் என்ன என்னவோ செய்ய இருந்தவன். எப்படி எப்படியோ காட்ட இருந்த திறமைகள் எல்லாம் அந்தச் சோம்பேறித் தனமான காலி நாற்காலி ராத்திரியிலே கரைந்துவிட்டன ஒரு ப்ரஸ் ஆளு வரப் போறார், வரப் போறார்னு எல்லாரும் எதிர் பார்த்திண்டிருந்தா அவர் வேற ஏதோ பரத நாட்டியக் கச்சேரிக்குப் போயிட்டாராம். அங்கேயிருந்தே எழுதிட்டார். கச்சேரி முடிஞ்சதும் ஒரே ஒரு வயசானவர் வந்து என்னைத் தட்டிக்கொடுத்து, ''நானும் எவ்வளவோ கேட்டிருக்கேன். நீ ரொம்ப ரொம்ப பேஷா வாசிக்கறே. இந்த நூற்றாண்டின் மகா மேதை நீ''ன்னு சொன்னார். சொன்னா என்ன? என் கச்சேரி ஏதும் சலனம் உண்டு பண்ணினாப் போலே தெரியல்லே.

என்னவோ பட்டணம் பட்டணம்னு சொல்றாங்க. பிரதானம் வந்துடும் கச்சேரிக்கு. 700, 800 எல்லாம் சாதாரணமா கிடைக்கும். அப்புடி இப்படிங்கறாங்க. நான் ஒரு வருஷம் பூரா முயற்சி பண்ணிப் பார்த்தேன். அலையா அலைஞ்சேன், ப்ரியா வாசிச்சேன். பத்துப் பேருக்கு வாசிச்சேன்' தனியா வாசிச்சுக் காண்பிச்சேன். ஒரே ஒரு தடவை வாரப் பத்திரிகையிலே என் பேர் வந்து என்னைப் பத்திப் புதுவிதமா பாணிகள் எல்லாம் கையாள்றார்னு, ஒரு சினிமா நடிகையைப் பத்தின புது விதமான போட்டோ தகவலுக்குப் பக்கத்திலே,ஓரத்திலே வந்திருந்தது-என்னைப்பத்திப் போட்டிருந்ததை நிறையப் பேர் படிச்சிருப்பாங்களான்னு சந்தேகம். கேட்டா, எல்லோரும், 'புது விதமாத்தான் வாசிக்கிறார். புரியாத ராகங்களிலே தைரியமா விளையாடறார். இருபத்து நாலு வயசுக்கு அற்புதமான வாசிப்பு''ன்னு ஒருமனதாத் தான் சொல்றா எல்லோருக்கும் என் திறமையோட ஆச்சரியம் தெரியறது. என் வித்வத்தைப் பற்றி ஒருத்த ருக்கும் சந்தேகமில்லை. ''இதோ நாளைக்கே சேஷாத்ரிக்கு டெலிபோன் பண்ணி உங்களைப் பத்தி ரெண்டு காலம் போடச் சொல்றேன்''னு சொல்லிவிட்டுத் தான் போறா. குறிப்பிட்ட சேஷாத்திரி வரவே மாட் டார். எங்கே தப்பு?

எவ்வளவு நாள் அவா வருவா வருவான்னு காத் திருக்க முடியும்? எவ்வளவு நாள் பெண்டாட்டியோட தங்க நகைகள் தாங்கும்? என் திறமையைப் பத்தி ஒருத்த ருக்கும் சநதேகமில்லை. முன்னுக்கு வர வேண்டியவர்னு சாமர்த்தியமா பேசறாங்க எப்படி முன்னுக்கு வரது? வேறு என்ன வழி இருக்கு சொல்லுங்கவேன். என் கலையைப் பற்றிச் சந்தேகமிருந்தா வீட்டுக்கு வாங்க. முப்பத்து நாலு ஏ கவரை ஸ்ட்ரீட், புள்ளையார் கோவிலுக்குப் பக்கத்திலே... வாசிச்சுக் காட்டறேன், கேளுங்க.

எங்கே ஸார் தப்பு? திரும்பிப் போயிடட்டுமா?

ஒண்ணு மட்டும் நினைச்சுக்காதீங்க! இவ்வளவு விஸ்தாரமா எழுதறானே. கடைசியிலே உங்ககிட்ட கைமாத்தா அஞ்சு பத்து கேட்கப் போறேன்னு. இல்லை ஸார், பகவான் என்னை அவ்வளவு தூரம் கொண்டு போகலே. கடைசியிலே வழிகாட்டி விட்டான். என்பணக் கஷ்டம் திடீர்னு கலைஞ்சு போச்சு, என் வீணையினாலே. அப்படின்னு சொல்றேன்?

நான் குடியிருக்கிற வீட்டு மாடியில ஒரு 30, 32 வயசுக்காரக் கிறிஸ்துவர் இருக்கார். பேர் பெர்னாண்டஸ் பாச்சுலர், நல்ல மாதிரி. அவர் ஒருநாள் என் ரூமுக்கு வந்து ''சார்! நீங்கதான் தினம்தினம் வாத்யம் வாசிக்கிறீர்களா?'' என்று கேட்டார்; ''ஆமாம்''னேன். ''என்ன வாத்தியம் கித்தாரா?'' என்றார். ''இல்லை, வீணை''ன்னு சொன்னேன் கித்தார் மாதிரியே வாசிக்கிறீர்களே! ரொம்ப வேகமா, இனிமையா இருக்குது ஸார்''என்றார். ''தாங்க்ஸ்'' என்றேன். ''கித்தார் வாசிப்பீங்களா?' ன்னு கேட்டார் அதுவும் கம்பி வாத்தியமா''ன்னேன். ''ஆமாம். மாடிக்கு, வாங்க. என்கிட்ட ஒரு கித்தார் இருக்குது''ன்னு மாடிக்குக் கூட்டிண்டு போனார். அந்த ஆறு கம்பி வாத்யம் வீணையைவிடச் சின்னதா இருந்தது. கம்பி அமைப்பு தலை கீழா இருந்தது. கீழ்க் கம்பி சின்னதா இருந்தது. கீழ்க் கம்பி முன்னாலேயும் மேல்கம்பி கடைசிலேயும், வாசிச்சு வாசிச்சுப் பார்த்தேன். அரை மணிலே, அந்த வாத்தியத்தை அலட்சியமா, வாசிக்க ஆரம்பிச்சேன். அவர் ஆச்சரியப்பட்டார் ''இன்னிக்குத் தான் முதல்லே வாசிக்கிறீர்களா, இதை?'' என்று கேட்டார். ஆமாம்னேன்.

''உங்களுக்கு மேற்கத்தி சங்கீதம் புடிக்குமா?''

''ஜாஸ்தி கேட்டதில்லே.''

''ஸார்! நீங்க எதிலே வேலை செய்யறீங்க?'' என்று கேட்டார்.

''எனக்கு வேலையே கிடையாது'' என்றேன்.

''அப்ப, உடனே என்னோட வாங்க''ன்னார். கூடப் போனேன்.

தி நகர்லே ஒரு வீட்டு மாடியிலே கீத்துக் கொட்டாய் போட்டிருந்தது. அதிலே பத்துப் பதினைஞ்சு பேர் உட்கார்ந்திருந்தாங்க. பெர்னாண்டஸ் அந்த க்ரூப்புக்கு என்னை அறிமுகப்படுத்தினார். ''வாத்தியார்கிட்ட விஷயம் இருக்கு, வீணையிலே பூந்து விளையாடறாரு''ன்னார்

அந்த இடத்திலே வித விதமா வாத்யங்கள்ளாம் இருந்தது. எல்லாம் மேற்கத்தி வாத்தியம், பெரும்பாலும் கம்பி வாத்யம். அந்த வாத்தியங்களோட பேரெல்லாம் எனக்குப் பிற்பாடு அத்துப்படி ஆயிடுத்து. டபிள் பேஸ் எலெக்ட்ரிக் வேலையா மூணு கித்தார். ஸாக்ஸ் (காலுக்கு போட்டுக்கறது இல்லே. ஸாக்ஸ்போன் இதிலே டெனர் ஆல்டோன்னு ரெண்டு ஜாதி), ட்ரம்பெட், லாட்டின் தாள வாத்தியங்கள், அக்கார்ட்டியான், அப்புறம் நம்ம தேசத்து கிதார், ஸரோட், தப்லா, ஒரே சுதம்பம். அந்தக் கோஷ்டி, பிலிம்லே பின்னணி வாசிக்கிறாங்களாம் சில பார்ட்டிகள்லேயும் வாசிக்கறாங்களாம். அட்வர்டைஸ் மெண்ட் வேலைகள் வேற செய்யறாங்களாம். அவங் களுக்கு ஒரு ஆள் தேவைப்பட்டதாம் என்னைக் கேட்டாங்க. ஈக்வலா மாச வரும்படியை பேர் பண்ணிப் போம். 150, 200—க்கு மாசம் தரோம்னாங்க. சம்மதிச்சேன்.

சமீபத்திலே நான் ஒரு ஸோப்லே ரிக்கார்ட் கூடக் கொடுத்திருக்கேன், ஸார். வீணையிலேதான். நீங்ககூட ரேடியோவில கேட்டிருப்பீங்களே... அதிலே முதல்லே டங் டங் டங் டங் டங் டங்ன்னு கீழ்த் தந்தியைத் தட்டறேன். அது முடிஞ்சதும் அந்த ஆள் ''மணி ஐந்தாகி விட்டதே. என் தலைவலி இன்னும் தீரவில்லையே'' என்கிறான்... உடனே அந்தப் பெண், ''கவலைப்படாதீர்கள், ஒரு வில்லை—மாத்திரை சாப்பிடுங்கள்'' என்கிறாள். நான் உடனே படபடவென்று சந்தோஷமாக, கமாஷ் வாசிக்க றேன். அவர்கள் இருவரும் சேர்ந்து ''எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு புட்டி—மாத்திரைகளை வைத்திருங் கள்' என்கிறார்கள், அரை நிமிஷம்கூட இல்லை ஸார். 5 ரூபாய் கொடுத்தான். யார் ஸார் சொன்னது கலை சோறு போடாதுன்னு?

●●

# 6

# ஒரே ஒரு மாலை

இந்தக் கதையை எழுதுகிற எனக்கு, இதைப் படிக்கிற உங்களைவிட அதிகமாக ஆத்மாவையும் இந்து மதியையும் தெரியும். அவர்களைப் பற்றி என்ன சொல்ல வேண்டும், என்ன சொல்லக் கூடாது என்று பாகுபடுத்தும் உரிமை என்னிடம் இருக்கிறது. இது இந்தக் 'கேஸி'ல் கொஞ்சம் சங்கடமான நிலைமையாக இருக்கிறது.

பாருங்கள், இருவரும் புதிதாகக் கல்யாணம் ஆனவர்கள். புதிதாக என்றால் மிகப் புதிதாக கையில் கட்டிய கயிறும், கங்கிலியில் தெரியும் மஞ்சளும், ஒருவரைப் பற்றி ஒருவர் அதிகம் தெரியாத ஆர்வமும் பயமும், ஒருவரை ஒருவர் தொடும்போது ஏற்படும் பிரத்யேகத் துடிப்பும் கலையாத சமயம். இந்தச் சமயத்தில் நடப்பது முழுவதும் சொல்வது கடினமான காரியம். மேலும் சில வேளை அநாகரிகமான காரியம்... அவர்கள் நடந்து கொண்ட புது நிலையை வர்ணிக்கப் புதிதாய்க் கல்யாணம் ஆன ஒருவனால்தான் முழுவதும் இயலும். என் கல்யாணம் முடிந்து விட்டது. அந்த நாட்கள் என் ஞாபகத்தில் ஆறு வருஷம் பின்னால் இருக்கின்றன.

ஆனால், என் சங்கடம் இதில் இல்லை. இந்தக் கதையில் என் பொறுப்பு ஒன்று இருக்கிறது. ஒரு நிகழ்ச்சியைச் சொல்ல வேண்டிய பொறுப்பு அது. அதை எப்படிச் சொல்வது, எங்கே சொல்வது அல்லது சொல்லாமலே

விட்டு விடலாமா என்பதுதான் என் குழப்பம். அதைப் பற்றி நான் இன்னும் தீர்மானிக்கவில்லை.

ஆத்மா, ஹல்வாராவில் விமானபடையில் வேலை பார்க்கும் ஒரு பறக்காத 'பைலட் ஆபீஸர்.' பதினைந்தே நாள் லீவு எடுத்துக்கொண்டு புயலாகச் சென்னைக்கு வந்து, ரயில் மாறி திருச்சி வந்து, சத்திரத்தில் மாடியில் இறங்கி, அவசரமாக க்ஷவரம் செய்து கொண்டு, சட்டை மாற்றி, சூட் அணிந்து கொண்டு, பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தில்' லோகல்' சின்னப்ப நாயனத்துடன் ஒரு பழைய எம். டி. ஓய். காரில் டாப்'பை விலக்கி, ஊர்வலம் போய் உட்கார்ந்து, மந்திரங்களின் மத்தியில் புகைக் கண்ணீரில் பக்கத்தில் இருப்பவளைப் பார்க்கச் சந்தர்ப்பமில்லாமல் மணம் செய்து கொண்டவன்.

இந்துமதி பி. யூ. ஸி.யைப் பாதியில் நிறுத்தி விட்டு ஒரு நாள் திடீரென்று தனக்கு வந்த முக்கியத்துவத்தில், புடைவை சாகரத்தில், எவர்சில்வர் மத்தியில், வைர ஜொலிப்பில், வரிவரியாக ஜரிகைப் பட்டுப் புடைவையின் ஜாதிக்கட்டின் அசௌகரியத்தில், மாலையின் உறுத்தலில், மையின் கரிப்பில், அம்மா அவ்வப்போது தந்த 'ஆர்டர்' களில் மாமாவின் கேலியில் மணம் செய்து கொண்டவள்.

ஆத்மாவை நிமிர்ந்து ஒரு தடவை பார்த்ததில்லை. பார்த்தது போன மாதப் போட்டோ ஒன்று. மார்புவரை எடுத்த, எதிரே பார்க்கும் போட்டோ. அப்பொழுது கல்யாணம் நிச்சயமாகுமா என்பது சரிவரத் தெரியாததால் அம்மா அதை அதிகம் பார்க்க அனுமதிக்கவில்லை பார்த்து என்ன நினைப்பது என்று தெரியாத தவிப்பு அழகான முகமா என்று அலசுவதற்கு உரிமையில்லாத சமயம். நினைவில் தேக்கிக் கொள்ள முடியாத தவிப்பு. கல்யாணம் முடிந்துவிட்டது முடிந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டன. தூரத்து உறவினர் படுக்கைகளைச் சுருட்டிக்கொண்டு, தேங்காய்களைக் கவர்ந்து கொண்டு விலகி விட்டனர்.

ஆத்மா அவளை உடன் அழைத்துச் செல்வதற்கு ஆறு நாட்கள் இருந்தன. பந்தங்கள் பிரிந்தன.

முறையாக அவர்கள் அறையிருட்டில் சந்தித்தாகி விட்டது. இந்துமதிக்கு ஓர் ஆணின் தொடுகை எப்படிப் பட்டது என்று தெரிந்துவிட்டது. அந்த எழுபத்திரண்டு மணி நேரங்களில் விதம் விதமான அனுபவங்கள் இருவருக்கும். ஆத்மாவின் கல்யாணத்துக்கு வர முடியாத பெரியப்பாவை சேவித்துவிட்டு வந்தார்கள். கோயில்களுக்குப்போய் வந்தார்கள். அவனுடன் நடக்கும்போதே, அந்த வெயில் படாத பாதங்களையும், செருப்பையும் ஜரிகைக் கரையின் அறுப்பையும், நிழலையும் பார்த்துக்கொண்டே உடன் நடக்கும்போதே இந்துமதிக்குச் சந்தோஷம் திகட்டியது. எனினும் அவன் ஒவ்வொரு தடவையும் அவளைத்தொடும்போது அவளுக்குபுல்லரிப்பைவிட பயம் தான் தெரிந்தது இதை ஆத்மா உணர்ந்தான். ஸ்பரிசத்தில் உள்ளுக்குள் அவள் உடம்பின் தசைகள் மிக மெலிதாக இறுகுவதை அவன் கவனித்தான். பெண் புதியவள் மிகப் புதியவள் என்று எண்ணிக் கொண்டான். மேலும் மேலும் அவனுள் ஓர் அச்சம் இருந்தது. அடிக்கடி அவளைத் தொடுவதில் தயக்கம் இருந்தது.

'முக்கியமாகப் பெண்ணுக்கு 'செக்ஸில் பயம் ஏற்படுத்தக் கூடாது. மிக ஜாக்கிரதையாக அணுக வேண்டும்.' பசித்த புலி, இரை தேடுவதை ஞாபகப்படுத்தக் கூடாது. மேலும் எனக்கு எவ்வளவு தெரியும்? நான் படித்த புத்தகங்கள் வழங்கும் உபதேசம் சரியா, தப்பா?

'நம் கல்யாண அமைப்பு குரூரமானது. திடீரென்று ஓர் ஆணிடம் ஒரு பெண்ணைக் கொடுத்து, இவள் உன்னுடையவள் என்று வசதிசெய்து கொடுப்பது கொடுமை' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் ஆத்மா.

இருந்தும்—

கவிதையிலோ, உரைநடையிலோ வார்த்தைகளால் சொல்லவே முடியாத மிக அபாரமான தருணங்கள் அவர்களின் புதிய உறவில் இருந்தன. (இந்தத் தருணங்கள் எல்லாக் கல்யாணங்களிலும் இருக்கின்றன'—யோசித்துப் பாருங்கள்—'நீடித்து இருக்கின்றன' என்பதற்கு நான் 'காரண்டி' இல்லை. முதலில்? நிச்சயம்!) அந்தத் தருணங்கள் இவர்களுக்கு ஒரு சிவாஜிகணேசன் படத்தின் இருட்டில் இருந்தன சூப்பர் மார்க்கெட் செல்லும்போது முன் பஸ்ஸின் பின்புறத்தில் 'இரண்டு அல்லது மூன்று போதுமே' என்ற விளம்பரம் துரத்தித் துரத்தி அடித்த போது, ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டபோது இருந்தன.

''பெட்ரூமில் அரசாங்கம் புகுந்துவிட்டது'' என்பான் ஆத்மா.

அப்புறம் மாடியில் இவர்கள் தனிப்படுக்கை சம்பிரதாயத்தில்...?எவ்வளவு பாடு இந்துமதிக்கு! ஆத்மா முதலில் போய் விடுவான். இவள், எல்லோரும் தூங்கிய பிறகு, வாசல் விளக்கை அணைத்து விட்டு அந்தப் பாழாய்ப் போகிற மெட்டி சப்தமிடாமல், திண்ணையில் தூங்குகிறவர்களின் அல்லது தூங்குவது போல் பாசாங்கு செய்பவர்களின் கனமான மௌனத்தைத் தாண்டி, மரப் படியேறி—எவ்வளவு சஸ்பென்ஸ்!

அதன்பின், அதன்பின், அதன்பின்!

தருணங்கள்! அபாரமான தருணங்கள்!

நான் சொல்ல வந்தது ஒரே ஒரு மாலை நேரத்தைப் பற்றி. இரண்டு பேரும் மெதுவாக வீட்டின் சந்தடியிலிருந்து விடுபட்டு நடக்கிறார்கள். தெற்கு வாசல் தாண்டி 'பஸ் ஸ்டாண்ட்' தாண்டி, அம்மாமண்டபம் வந்து தனியான இடம் தேடுகிறார்கள்.

நதிக்கரை காவிரி நதி, ஆடி மாத ஆரம்பம். மேட்டூர் அணை நிரம்பி வழிந்த பழுப்புத் தண்ணீர் இங்கிருந்து அந்தக் கரை வரை நிரம்பி, அவர்கள் புதிய உறவுபோல் உற்சாகமாக நழுவிக்கொண்டிருந்த நதி. இந்துமதிபோல் அந்த நதி சிறிய சிறிய பையன்கள் குதித்துக் குதித்து, எதிர்த்து எதிர்த்து நீந்திக் கரைக்கு மறுபடி வருகிறார்கள் இந்துமதிக்கு அதைப் பார்க்க ஆசை. ஆத்மாவுக்கு மாந்தோப்பின் கரையில் தனியிடம் தேட ஆசை அவளை அணைத்து அழைத்துச் சென்று, தனியாக உட்காரு கிறான். ''உன்னிடம் நிறையப் பேசவேண்டியது இருக் கிறது நாம் இரண்டுபேரும் முழுவதும் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ள வேண்டும் கல்யாணம் என்கிறது ஒரு 'லைஃப் டைம்' சமாசாரம்.''

(அவன் பேச்சில் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். அவர் கள் சம்பாஷணையைப் பின்னால் தொடர உத்தேசம். அதற்குள் நான் முன்பு சொன்ன என் பொறுப்பு குறுக்கிடு கிறது. சொல்வதற்கு இதுதான் சமயம் என்று எனக்குப் படுகிறது. சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்.) அவர்கள் சுமார் அரைமணி நேரம் பேசிக்கொண்டிருந்தனர். அதன் பிறகு இந்துமதி ஆத்மாவைக் கேட்டாள்: ''உங்களுக்கு நீந்தத் தெரியுமா?'' என்று.

''ஓ! நன்றாக நீந்துவேன். உனக்கு?''

''எனக்கும் கொஞ்சம் தெரியும். அப்பா கேரளத்தில் இருந்தபோது கற்றுக்கொண்டேன். சுமாராகத்தெரியும்''

''க்ரேட்! ஹௌ எபவுட் நௌ?''

''இப்பவா? ம்ஹூம்!''

''ஏன்?''

''இந்த நதியில் எல்லாம் எனக்கு நீந்திப்பழக்க மில்லை.''

''பயமா?''

''ஆம்.''

''நான் இருக்கிறேன். ஹரித்வாரில் கங்கையில் நீந்தி இருக்கிறேன். ஹல்வாரா போனதும் உன்னை அழைத்துப் போகிறேன். அந்த நதியின் வேகத்தைவிடவா! சீறும். கங்கை! வா, நீந்தலாம்.''

''நான் மாட்டேன். நீங்களும் வேண்டாம்.''

''கம்-ஆன் டியர்.'' ஆத்மாவுக்குத் தன் மனைவியை நனைந்த உடைகளில பார்க்க வேண்டும் என்கிற இச்சை பிடிவாதமாக மாறியது

''இங்கே ஒருத்தரும் இல்லை.''

''சே, சே! என்ன கஷ்டமாகப் போய் விட்டது; எதற்குப் பேச்சை எடுத்தோம் என்று ஆகிவிட்டது''

''வர மாட்டாய்?''

''ம்ஹூம்! நீங்களும் போகக் கூடாது.''

''அப்படியா?''—என்று தன் டெரிலீனைக்கழற்றினான் ஆத்மா, பனியனைக் கழற்றினான் சிறிய டிராயரில்வந்து கரைக்குச் சென்று குதித்தான் தண்ணீர் ஒருதுளிதெறிக்க வில்லை. அம்புபோலப் பாய்ச்சல். மிக அழகாக நீந்தினான், ஆற்றை எதிர்க்காமல் ஒரு பக்கம்வாங்கி, இருபத்தைந்து அடி தள்ளிக் கரை சேர்ந்து தலையைச்சிலிர்த்துக் கொண்டான். மிகப்புனிதமாக அழகாக இருந்தான். அவன் முடிகளிலிருந்து தங்கமாகச் சொட்டின தண்ணீர்த் துளிகள் (சூரியன் உபயம்), இந்துமதிக்கு அவன் உடம்பின் தசைகளையும், அவன் சிரித்துக் கொண்டே நடந்து வருவதையும் பார்க்க மிகப்பெருமையாக இருந்தது. ஆனால் முதல் தடவையாகத் தெரிந்த அவன் பிடிவாதம் அவளைப் பயப்படுத்தியது.

''போதும், சளி பிடித்துக்கொள்ளும்'' என்றாள்.

''நீ வர மாட்டாய்?''

''நான் வரமாட்டேன். போதுமே நீந்தினது.''

''இன்னும் ஒரு தடவை, அவ்வளவுதான்.''

குதித்தான். மறுபடி அழகான குதிப்பு. நீந்தினான். மறுபடி அழகான நீச்சு. கரையிலிருந்து முப்பதடி போயிருப்பான். ஆழமான, இதமான சற்றுக்குளிர்ந்த தண்ணீர், அப்போதுதான் அவனுக்கு 'க்ராம்ப்ஸ்' ஏற்பட்டது. காலின் தசைகள் பிடித்துக்கொண்டன. காலை அசைக்க முடியவில்லை.

'க்ராம்ப்ஸ்' வருவது அவனுக்கு முதல் தடவை நண்பர்கள் எச்சரித்திருக்கிறார்கள்: "வந்தால் கலவரப் படாதே, மித." கலவரப்படாமல் இருக்கமுடியவில்லை. ஆற்றின் வேகம் அவனைத் தள்ளிக்கொண்டு சென்றது. காலை அசைக்க முடியவில்லை. மேலும் மேலும் கைகளை அடித்துக் கொள்ள முயன்றான். ஒருதடவை முழுகிக் தண்ணீர் ஏகப்பட்டது உள்ளேஇறங்கியது. நதி அவனைக் கடத்திக் கொண்டிருந்தது. இந்துமதியைக் கூப்பிட முயன்றான். பயம் அவனை நிரப்பியது.

தூர தூரமாகத் தன் கணவன் செல்வதையும், சீராக அவன் நீந்தாமல் பதற்றமாக அடித்துக்கொள்வதையும் பார்த்த இந்துமதி, திகைக்காமல் யோசிக்காமல் ஒரே பாய்ச்சலாகப் பட்டுப் புடவையுடன் நகைகளுடன் குதித்தாள்.

(இரண்டு நாள் கழித்து அவர்கள் இருவரும் கொள்ளிடம் சேரும் கல்லணையில் கண்டெடுக்கப் பட்டனர்.)

குறுக்கிட்டதற்கு மன்னிக்கவும். அவர்கள் அரை மணிக்குமுன் பேசிக்கொண்டே பேச்சைத்தொடர்வோம்.

"ஆத்மா, "கல்யாணம் என்பது லைஃப்டைம் சமாசாரம். நாம் ஒருவரை ஒருவர் மெதுவாகத் தெரிந்து கொள்வோம். நிறைய 'டயம்' இருக்கிறது. ஒரு விதத்திலே அது ஒரு 'சாம்பிள்'. நம் சுதந்திரம் கொஞ்சம் பறி போகிறது. இனிமேல் நமக்கு ஒரு பொறுப்பு. அதுவும்

எனக்கு ஒரு பொறுப்பு. உன்னைத் தனியாக அழைத்துக் கொண்டுபோய் பாஷை தெரியாத காட்டில் ஒரு வீட்டில் அடைக்கப்போகிறேன். அங்கே நாம் இரண்டு பேரும் தான். சந்தோஷமாக இருக்கமுயலவேண்டும்; சந்தோஷ மாக இருக்க வேண்டும். 'கன்னா பின்னா' என்று குழந் தைகளைப் பெற்றுக் கொள்ளக்கூடாது. இரண்டு வருஷம் 'இடைவெளி', என்ன?''

இந்துமதி சிரித்தாள், தலைகுனிந்து. கன்னங்கள் நிறம் மாறின.

''அப்புறம் சில புத்தகங்கள் தருகிறேன். படிக்கணும். இந்தி கற்றுக் கொள்ளவேண்டும். அப்புறம் என்கிட்டெ என்ன பிடிக்கிறது, என்ன பிடிக்கவில்லை என்று சொல்லு ''

''மௌனம்

''ம்...சொல்லு.''

''உங்களை எனக்கு நாலு நாளாகத்தானே தெரியும்!''

''நாலு நாளிலே என்ன என்ன பிடிக்கவில்லை சொல் லேன். என்னிடம் நீ '.'.ப்ரீ'யாக இருக்க வேண்டும்.''

''......''

'',டாமிட்!' சொல்லேன், ஏதாவது இருக்குமே!''

''டாமிட் டாமிட் என்று நீங்கள் அடிக்கடி சொல் கிறது பிடிக்கலை'' என்றாள் தயக்கமாக.

''வெரிகுட், அப்புறம்?''

''ம், யோசிக்கறேன்.''

''யோசி.''

''தலையை இப்படிப்படியாமல் வாரிக் கொள்வது...''

''ஓ மை காட்!'' என்று தலையைக் கோதிக் கொண் டான்.

''என்கிட்ட என்ன பிடிக்கலை உங்களுக்கு?''

''ஒன்றே ஒன்றுதான் பிடிக்கவில்லை'' என்றான்.

''என்ன?'' என்றாள் ஆவலுடன்.

''என்னை நீ இரண்டு மூன்று தடவை 'அத்தான்' என்று கூப்பிட்டது. அத்தான் என்பது என் அகராதியில் ஆபாச வார்த்தை சினிமா எக்ஸ்ட்ராக்களை ஞாபகப் படுத்தும் வார்த்தை.''

''எப்படி உங்களைக் கூப்பிடுவது என்று எனக்குத் தெரியவில்லையே!''

''ஆத்மா என்று.''

''முடியாது. செத்தாலும் முடியாது.''

''சொல்லு, ஆ...''

''ஆ''

''த்''

''மா''

''மா''

''ஆத்மா!''

சிரித்தாள் ''ஹூம்'' என்று தலையாட்டினாள். அவன் அவளை மார்பில் தொட்டான். பனிபோல் உறைந்தாள்.

' நான் தொட்டால் பயமாக இருக்கிறதா?''

''இல்லை, வெட்கமாக.''

''உன்னைத் தொடுவதற்கு எனக்கு லைசென்ஸ் இருக்கிறதே.''

''இப்படி லைசென்ஸ் கிய்சென்ஸ் என்று சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை. என்னை உங்களுக்குப் பிடிக்கிறதா?''

''இது என்ன கேள்வி?''

''என்னை உங்களுக்குப் பிடிக்கிறதா?''

''பாதாதிகேசம். ஒவ்வொரு சதுர மில்லி மீட்டரும் பிடிக்கிறது.''

''நான் உங்களுக்குத் தகுதியானவளா?''

''எல்லா விதத்திலும்''

''அதிகம் படிக்கவில்லையே?''

''ஸோ வாட்?''

''எனக்கு முன்னால் எத்தனை பெண்களைப் பார்த்தீர்கள்?''

''36,621.''

''வேடிக்கை வேண்டாம். நிஜமாகச் சொல்லுங்கள்.''

''நான் பார்த்து ஆமோதித்த ஒரே முதல் பெண். நீ''

''என்னைப் பார்த்தபோது, முதலில் பார்த்தபோது என்ன தோன்றியது உங்களுக்கு?''

''உன்னைப் பார்க்கவே இல்லையே. நீதான் குனிந்த தலை நிமிரவில்லையே!''

''பின் எதற்காகக் கல்யாணம் செய்து கொண்டீர்களாம்?''

''இதற்காக'' என்று சொல்லிவிட்டு அவன் அவளைக் ...தனை அவள் விருப்பவில்லை. கோபித்துக் கொண்டாள். பொய்க் கோபம்.

''உங்களுக்கு எவ்வளவு சம்பளம்?''

''டேக் ஹோம் பே' 621. அதில் முந்நூறு ரூபாய் உனக்கு வீட்டுச் செலவுக்குக் கொடுத்து விடுவேன். போதுமா?''

''நான் முந்நூறு ரூபாய் நோட்டுக்களைச் சேர்த்தாற் போல் பார்த்ததில்லை இதுவரை.''

''பார்க்கப் போகிறாய்?''

''உங்களுக்கு ஆக்ட்டர்ஸ் யாரார் பிடிக்கும்?''

''சிவாஜிகணேசன், பால் நியூமன்.''

''அப்புறம்?''

''கே. ஆர். விஜயா.''

இந்துமதிக்கு கே. ஆர். விஜயாவின்மேல் பொறாமை ஏற்பட்டது.

''உனக்கு என்ன புத்தகம் பிடிக்கும்?''

''எனிட் பிளைட்டன்.''

''பதினைந்து வயதுப் பெண்கள் படிக்கிற புத்தகம் அது.''

''எனக்கு என்ன வயசு?''

''பதினைந்தா?''

''என்னைப் பார்த்தால் என்ன வயசு மதிப்பிடு வார்கள்?''

''நான்கு ''

கோபித்துக் கொண்டாள். ''நான் சத்தியமாக உங்க ளுடன் பேசவே போகிறதில்லை.''

ஆத்மா சிரித்தான். அதில் உண்மையான சந்தோஷம் நிலவியது. அதன் பின் அவர்களிடையே பிரமாதமான, பூராவும் ஒருவரை ஒருவர் உணர்ந்த பேச்சுக்கு அவசிய மில்லாத கொஞ்ச நேர அற்புத மௌனம் நிலவியது. அவர்களும், அந்தச் சூரியனும் அந்த இடத்து மூன்று பெரிய உண்மைகளாக...அதன் பிறகு இந்துமதி ஆத்மா வைக் கேட்டாள் :

''உங்களுக்கு நீந்தத் தெரியுமா?''



# 7

# நிபந்தனை

ஒன்பது மணிக்கே வெயில் கொளுத்திற்று. கசகச வென்று வியர்வை முதுகுக்குள், மார்பில் எல்லாம் சின்னச் சின்ன ஊசிகளாகக் குத்தியது. ஈஸ்வரிக்குப் பட்டுப்புடவை ஏன் உடுத்திக் கொண்டு வந்தோம் என்றிருந்தது.

பெரிய யானை ஒன்று முனிசிபாலிட்டி குழாயில் சமர்த்தாகத் தண்ணீர் பிடித்து முதுகில் ஆரவாரமாக வாரி இறைத்துக் கொண்டிருந்தது. யானைப்பாகன் பீடி குடித்துக் கொண்டிருந்தான், எதிரே கட்டை குட்டை யாகக் கோபுரம் தெரிந்தது. அருகே தெப்பக்குளம் அதற்கு எதிர்ப்புறத்தில் பழங்காலத்து மரக் கட்டிடத்தின் உச்சாணியில் இருந்த வினோத கடிகாரத்தையே பார்த்துக் கொண்டு பத்துப் பதினைந்து பேர் ஒன்பது அடிக்கக் காத்திருந்தார்கள். மணியடிக்கும் போது இரண்டு பொம்மை ஆடுகள் ஒன்றைஒன்று முட்டிக் கொள்ளுமாம். மஹாராஜா செயலாக இருந்தபோது வாங்கிப் போட்ட கடிகாரம். இப்போது மஹாராஜவே அந்தப் பதினைந்து பேரில் ஒருவராக இருந்தால் ஆச்சரியப்படக் கூடாது என்று சோமசுந்தரம் எண்ணினான்.

' கோயிலுக்குப் போயிரலாமே முதல்லே,'' என்றாள் ஈஸ்வரி.

''இத பார். எனக்குப் பசிக்குது. காலைல எழுந்து ஒரு காப்பி சாப்ட்டது. ஒண்ணு ரெண்டு ப்ளேட் இட்லி தின்னாத்தான் வண்டி ஓடும்.''

''எங்க வந்தாலும் சாப்பாடுதான் உங்களுக்கு ''

''என்ன செய்யறது. வேளைக்கு வேளை செய்து போட்டு என்னைக் கெடுத்து வெச்சுருக்க.''

சோமசுந்தரம் காரை அந்தக் கட்டிட நிழலில் நிறுத்தினான். மூஞ்சியைப் பார்த்து சுமார் என்று சொல்லக் கூடிய ஓர் ஓட்டலில் நுழைந்தார்கள். கல்லாவில் ஊது பத்திப்பட்டைகள் அடுக்கியிருநதன. பத்திரிகைகளின் இந்த வார அட்டைப்படத்துப் பெண்மணி கேரளத்துத் தேங்காய்களை நினைவு படுத்தினாள். குலை குலையாகச் செக்கச் சிவந்த வாழைப்பழங்கள் தொங்கின மரவள்ளியும் பலாவும் வறுவலாகப் பாலிதீன் பைகளில் அடங்கியிருந்தன. கமலஹாசனுக்குக் கீழே மலையாளத்தில் நண்டு நண்டாக ஏதோ எழுதியிருந்தது.

''எத்தா வேண்ட'' என்றான். காதில் பென்சில்.

''எனக்கு மலையாளம் தெரியாது. தமிழ்தான்.''

''சாரமில்லா பரயு...''

''என்னத்தைப் பரயறது. ஈஸ்வரி, நீ என்ன சாப்பிடற?''

''எனக்கு ஒண்ணும் வேண்டாம். 'சாமி கும்பிட்டுட்டு அப்புறம் சாப்பிடலாம்ணு இருக்கேன்.''

''சரியாப் போச்சு. மறுபடி ஹோட்டலுக்கு வரணுமா?''

''ஏன்? வந்தா என்ன?'' என்றாள் சற்று அழுத்தமாக.

''ஓ.கே! ஓ. கே!''

''சின்னப் புள்ளலர்ந்து எங்க அப்பாம்மா கத்துக் கொடுத்திருக்காங்க சாமி கும்பிட்டுட்டு சாப்பிடணும்னு, உங்களுக்கு அது மூட நம்பிக்கையா இருக்கலாம் வேணா...''

''சேச்சே. இந்தச் சின்னவிஷயத்துக்குச் சண்டையைத் துவங்காதே. ஒத்துக்கிட்டாச்சு; மறுபடி வரலாம். சரி, சரி... ஏம்பா எனக்கு முதல்ல மூணு இட்லி வடை, அப்புறம் பச்சைத் தண்ணி; பச்சை வெள்ளம். சுக்கைப் போட்டுக் காய்ச்சி மஞ்சளா ஒரு வெள்ளம் கொண்டு வெப்பீங்களே அது வேண்டா. கேட்டோ?'' என்றான்.

கணவனின் மலையாள முயற்சிகளில் சிரிப்பு வந்தது ஈஸ்வரிக்கு. கோபம் போய் விட்டது.

''முணக்குன்னா கோபமா?'' என்றான்,

''பின்ன என்னவாம். நான் எது சொன்னாலும் அதுக்கு எதிராச் சொன்னா?''

''சரி! இன்னிக்கு ஒரு பிராமிஸ். நீ என்ன சொன்னா லும் சரி சரி. மறுப்பே தெரிவிக்க மாட்டேன். வெளியூர்ல ஹோட்டல்லே வந்து எதுக்காக சண்டை போடணும்?''

சாப்பிட்டுவிட்டு வெளியே வரும்போது ஈஸ்வரி அந்த அம்மாளைப் பார்த்தாள். பிராமண மாது. நாற்பது இருக்கலாம். கிழிந்த நார்ப்பட்டில் ஜாதிக்கட்டு; ரவிக்கை யில் ஒட்டு: நெற்றியில் வெறுமை. நரை இழையோடிய தலை ஒரு சின்னத் தேங்காய்போல இருந்தது. அவர்களை அணுகி சன்னமாகப் பிச்சை எடுத்தாள். தயக்கமாகக் கை நீட்டி ஹாஸ்யமில்லாமல் சிரித்து மெல்லிய குரலில், ''அம்மா மஹாலட்சுமி, ஏதாவது காசு தாயேன்'' என்றாள், பற்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சோழிகள்.

அவள் ஒரு காலத்தில் செல்வாக்காக இருந்து நொடித் துப் போய் பிச்சை எடுக்க வந்திருக்க வேண்டும் என்பது அவள் தோற்றத்திலும் கூசிக்குறுகிய தயக்கத்திலும் வெளிப்பட்டது.

சோமசுந்தரம் அவளுக்கு நாலணா கொடுத்தான்.

அவள் அதை வாங்கிப் பார்த்து, ''நாலணா போறா துப்பா குழந்தை பசியாக் கிடக்கிறாள். நானும் பட்டினி' என்றாள்.

''எவ்வளவு தரணும்கறிங்க பாட்டி? 'பாட்டி'என்று அழைத்தது அசம்பாவிதமாக இருந்தாலும் 'மாமி' என்று அழைத்துத் தனக்கு ஒரு அவசியமில்லாத பிராமணத் தன்மையை வரவழைத்துக் கொள்ளச் சோமசுந்தரம் விரும்பவில்லை.

''ஒரு ரூபா கொடுத்தா எதிர்த்தாப்பல காப்பி கிளப்பில் ஒரு முழுச் சாப்பாடு கிடைக்கும் நானும் என் பெண்ணும் சாப்பிடலாமாக்கம்.'' அவள் தமிழில் மலையாள உச்சரிப்புத் தென்பட்டது பாலக்காடாக இருக்கலாம்.

''இத பாருங்க உங்களுக்கு ஒரு ரூபா கொடுத்தா உங்க வாழ்க்கைப் பிரச்சினை தீர்ந்து போயிடப் போற தில்லை. கொடுக்கிறத வாங்கிட்டுப் போங்க பெரியம்மா! வேற மூணு நாலு ஆளுங்க கிட்ட கேட்டா ஒரு ரூபா அவ்வளவுதான்!'' என்று சோமசுந்தரம் நடந்தான். ஈஸ்வரி சற்றுத் தயங்கினாள்.

''அம்மா மகாலட்சுமி; ஜகதீஸ்வரி; பூவும் பொட்டுமா அழகா தங்கமாட்டமா இருக்கியே. உனக்குத் தங்க விக்கிரம் மாதிரி ஒரு புள்ளை பொறந்து எல்லாரும் செழிப்பா இருப்பீங்க.ஒரு ரூபா கொடுத்துட்டுப்போம்மா ராசாத்தி.''

கணவன் அங்கிருந்து, ''அவ கூட என்ன பேச்சு? வா வா! ' என்று அவசரப்படுத்தினான். ஒரு கடைக்குள் நுழைந்தான். ''தொந்தரவு பண்ணாதிங்கம்மா. போங்க'' என்று ஈஸ்வரி நடக்க அந்தப் பெண்மணி உடன் தொடர்ந்து கடைவாசல் வரைக்கும் நீட்டிய கையுடன் வந்தாள்.

கடைக்குள் ஆயிரம் உதவாக்கரை சாமான்கள் இருந்தன. எத்தனை விதமான மர யானைகள் மரம்

இழுக்கும் யானை, சேவிக்கும் யானை, ஏன் யானை மேல் யானையைக் கூட விட்டு வைக்கவில்லை.

"என்ன, போனாளா?"

"இல்லீங்க! பாவம் அய்யர் சாதி."

"ஆமா அய்யர் சாதிதான். அதுக்குன்னு ஜாஸ்தி பணம் குடுக்கணும்கறியா? பிச்சைலேகூட வர்ணாச்ரம தர்மமா? இந்த யானை என்ன விலைங்க?"

"சட்! அது வேண்டாங்க! புத்தி போவுது பாரு!"

"விலை கேட்டேன்! திருவனந்தபுரத்துக்கு வந்ததுக்கு ஞாபகமா யானை வாங்கிட்டுப் போக வேண்டாமா?"

"அது நல்லா இருக்குதில்ல?" என்று நீண்ட சதுரப் பாயின்மேல் தத்ரூபமாக ஒரு யானை வரையப்பட்டிருந் ததைக் காட்டினாள். "ஹாலில் அலங்காரமா தொங்க விடலாம். என்னப்பா விலை?"

பதினெட்டு ரூபாய் கொடுத்து அதை வாங்கிச் சுருட்டிக் கொண்டு கடைக்கு வெளியே வரும்போது அந்த அம்மாள் இன்னும் நின்று கொண்டிருந்தாள். அதே அரைக்கை நீட்டல். அதே அசட்டுச் சிரிப்பு. ஏழ்மையின் தங்க மெடல்கள். ஈஸ்வரிக்குக் குற்ற உணர்வு உறுத்தியது. 'பதினெட்டு ரூபாய் கொடுத்து அலங்கார சாமான் வாங்கு கிறாய். எனக்கு நாலணாவுக்குக் கணக்குப் பார்க்கிறாய்!' என்று அவர் பார்வையே கேட்பதுபோல் தோன்றியது.

கணவன் கவனிக்காமல் காரை நோக்கி நடந்து கொண்டிருக்க ஈஸ்வரி இரண்டாம்முறை தயங்கி யோசித் தாள்.

"பாட்டி, உங்க பேர் என்ன?"

"அலமேலும்மா".

"எந்த ஊர் நீங்க?"

"வடக்கே திருச்சூர்."

''ஏன் இப்படிப் பிச்சை எடுத்துப் பிழைக்கும்படியா ஆய்டுச்சு?''

''அதை ஏண்டிம்மா கேக்கறே எங்க தாத்தா சப்ரிஜிஸ்திரார்ரா இருந்தார். ஆத்தில நாலு சேவகா இருந்தா. தென்னந்தோப்பும் துரவுமா காய் காய்ச்சு தாழ்வாரம் பூரா கொட்டியிருக்கும்.''

''அது சரி. இப்ப ஏன் இப்படி ஆய்டுச்சு?''

''எங்கப்பன் சொத்தையெல்லாம் அழிச்சுட்டு எங்கள நடுத்தெருவில் நிக்க வெச்சுட்டுப்போயிட்டான். சமையல் காரனுக்கு வாக்கப்பட்டேன் அவரும் போய்ட்டார். நானும் என் பெண்ணும் மட்டும் தனியா.''

''கூடப் பிறந்தவங்க யாரும் இல்லையா?''

''இருக்கான். தம்பிக்காரன் திருச்சூர்ல வாத்தியாரா இருக்கான். ஆம்படையா பேச்சைக் கேட்டுண்டு தூரத்தி விட்டுட்டான்.''

''வீட்டு வேலை ஏதாவது செஞ்சு பிழைக்கறது தானே?''

''பிழைக்கலாம். யாராவது வேலைகுடுத்தாத் தானே? அதுக்குக்கூட சிபாரிசு தேவையா இருக்கு, இல்லைன்னா திருடிப்பிடுவேனாம். இப்பகூட ஒரு நம்பூதிரி வீட்டில கூட்டிருந்தா. போறதுக்குள்ள வேற பொம்மனாட்டி வந்துட்டா. என் மூஞ்சியப் பார்த்தா திருடற மாதிரியா இருக்கு. சொல்லும்மா. ஒரே ஒரு பொண்ணு. ஸ்கூலுக்குப் போயிண்டிருக்கு, மத்யான சாப்பாடு. ஒரு சத்திரத்தில் கிடைக்கும். இன்னிக்கெல்லாம் என்ன வயசுங்கறே எனக்கு? நாப்பத்திரண்டு. பசிச்சுப் பசிச்சு அறுபது வயசாட்டம் இருக்கன். 'பாட்டி'ங்கறே!''

''வீட்டு வேலை எங்லாம் செய்வீங்களா?''

"பேஷா! சமைப்பேன். பத்துப்பாத்திரம்தேய்ப்பேன்? மாடு கறப்பேன். இட்லி தோசைக்கு அரைப்பேன். கைக்குழந்தைக்கு எண்ணெய் தேய்ச்சு விடுவேன் வேண்டப்பட்ட காரியம் செய்வனாக்கம். எட்டூருக்கு வேலை செய்வேன்."

சோமசுந்தரம் கார் வரை சென்று காத்திருந்து பொறுமையிழந்து திரும்பி வந்தான். "என்ன ஈஸ்வரி இங்கேயே நின்னுட்டே? இத பாருங்க அய்யர் விட்டு அம்மா. காசு கொடுத்தாச்சில்ல? பேசாம போயிட வேண்டியதுநானே?"

ஈஸ்வரி அவனைக் கவனிக்காமல், "இப்ப எங்ககூட வறீங்களாம்மா!" என்றாள்.

"எங்கே?"

"மெட்ராஸுக்கு வீட்டு வேலை செய்யறதுக்கு எனக்கு ஒரு ஆள் தேவையா இருக்கு."

"வெயிட் எ மினிட்வெயிட் எ மினிட்! என்னஈஸ்வரி உடனேஅப்பாய்ண்ட்வெண்ட் ஆர்டர்கொடுத்துர்றதா?"

"சும்மா இருங்க! பாட்டி, பெரியம்மா! உங்களால மெட்ராஸ் வர முடியுமா சொல்லுங்க!"

அம்மாள் கண்களில் முதல் தடவையாகப் பிரகாசம் ஏற்பட்டது. "என்னம்மா இப்படிக் கேட்டுட்டே!உடனே புறப்பட்டு வரேம்மா! கடல் தாண்டி வேணும்னாலும் வரேன்!"

"கொஞ்சம் இரு ஈஸ்வரி!"

"இன்னிக்கு மத்யானம் நாங்க கார்ல இந்த ஊரை விட்டுக் கிளம்பி நாகர்கோயில் போறம்.

"இன்னிக்கே வந்துர்றேம்மா!" அவள் முகம் பூரா இப்போது அந்த பிரகாசம் பரவியிருந்தது. "ஆனா கோமதி?"

''கோமதி யாரு?''

''எம்பொண்ணு. பள்ளிக்கூடத்துக்குப் போயிருக்கா.''

''எப்ப திரும்பி வரும்?''

''ஒரு மணிக்கு.''

''நாங்க ரெண்டு மணிக்குக் கிளம்பறம். உங்க பொண்ணையும் அழைச்சுக்கிட்டு வந்திருங்க. பொட்டி படுக்கையெல்லாம் கொண்டுட்டு வந்துருங்க.''

''பொட்டியுமில்ல படுக்கையுமில்ல. ஒத்தக் கடையில ஒண்ணு ரெண்டு பை! பிளாட்பாரத்திலக்கும் படுத்துக் கறது.'' கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''மஹாலட்சுமி மாதிரிதாம்மா வந்து சேர்ந்தே நீ! உனக்கு நான் நாயா உழைக்கிறேன்! உடம்பை செருப்பா தேய்ச்சுப் போடறேன்.''

'சரி, சீக்கிரம் போய்ட்டு வாங்க!''

''இதோ.'' ஓடினாள்.

சோமசுந்தரம் மௌனமாகத் தன் மனைவியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன பாக்கறீங்க! வாங்க கோயிலுக்குப் போகலாம்!''

''நீ செய்யறது சரிதானா? அது உனக்கே நல்லா இருக்கா? முன்ன பின்ன தெரியாத தேசத்தில முன்ன பின்ன தெரியாத பொம்பளைய கார்ல கூப்பிட்டு மெட்ராஸுக்கு அழைச்சுட்டுப்போறதா?''

''காலைல என்ன சொன்னீங்க?''

''விசாரிக்க வேண்டாமா?''

''காலைல ஹோட்டல்ல என்ன சொன்னீங்க?''

''மெட்ராஸ்ல கிடைக்காத பொம்பளைகளா?''

''காலைல நீ என்ன சொன்னாலும் மறுப்பே தெரிவிக்க மாட்டேன்னு சொல்லல நீங்க?''

''அது சரி, ஆனா இந்த விஷயம்...''

''நடங்க கோயிலுக்கு.''

சட்டையைக் கழற்றி பாண்ட்டை மடக்கி அதன்மேல் வாடகை வேஷ்டி சுற்றிக்கொண்டு சோமசுந்தரம் வர இருவரும் கோயிலுக்குள் நுழைந்தார்கள்.

''ஆம்பளைங்களுக்கு மட்டும் சட்டையைக் கழட்டணும்னு என்ன ரூல் இது?'' என்ற அவன் ஹாஸ்யத்தை அவள் கவனிக்கவில்லை.

''எவ்வளவோ தடவை சாமி கும்பிடறோம். என்ன பிரயோசனம்? நடைமுறையில ஏதாவது நல்ல காரியம் செய்ய வேண்டாம்? இந்த ட்ரிப்புக்குஇதுவரை எவ்வளவு ரூபா செலவழிச்சிருக்கும்? எத்தனை பெட்ரோல் எத்தனை சினிமா எத்தனை ஐஸ்க்ரீம் எத்தனை கண்டா முண்டா சாமான்கள்? ஓர் ஏழைப் பொம்பளைக்கு நாலணா குடுக்க மூக்கால அழறோம். நாம எல்லாம் மனுசங்கஇல்லியா? இரக்கம் கிடையாது? வேற யாராவது பார்த்துப்பாங்கன்னு எல்லாமே விட்டுட்டா யார் அந்த வேறு யாராவது?கோயிலுக்குக்கூடப் போகவேண்டாங்க. இந்த மாதிரி ஒரு நல்ல காரியம் செஞ்சா அதுவே பெரிய தபஸ்!''

சோமசுந்தரம் நடந்துகொண்டே கை தட்டினான்.

இருவரும் சன்னதிக்குள் நுழைந்தார்கள்.

கோயிலைவிட்டு வெளியே சட்டை அணிந்துகொண்டு காசு கொடுத்துவிட்டு வெளியில் இறங்கியபோது தாடி வைத்த ஆசாமி ஒருவன் சைக்கிளில் வந்து அவர்கள் அருகில் நிறுத்தி இறங்கினான். அவனை சமீபத்தில் பார்த்த மாதிரி இருந்தது.

''ஸார், ஒரு விஷயம்.''

''ஒண்ணும் வேண்டாம்ப்பா.''

''நான் ஏதும் விக்கறதுக்கு வரலையாக்கம். எதுத் தாப்பல கடைக்காரன்தான். அம்மாவும் அந்த அலமேலுவும் கொஞ்ச நேரம் முன்னாடி என் கடை வாசல்ல பேசிட்டிருந்ததைக் கவனிச்சேன். அம்மா அவளை மெட்ராஸுக்கு அழைச்சுட்டுப் போறதா சொன்னது.''

''ஆமாம். என்ன இப்ப?''

''கோவிக்க வேண்டாம் இந்தப் பொம்பளைய நீங்க கூட்டிப் போகக் கூடாது.''

''ஏன்?''

''அது செரியில்ல.''

''சரியில்லைன்னா?''

''உங்ககிட்ட பொய் சொல்லியிருக்கு. எனக்கு செரியா காதில விழலை. கேவலமான பொம்பள. பிராமணப் பொம்பளை பதினாலு வயசில ஒரு பொண்ணு. அதைத் தெருவில அலையவிட்டு அதை வெச்சு சம்பாதிக்கிறவளாக்கம் அவ!''

''மை காட். பொண்ணு ஸ்கூலுக்குப் போறதா சொன்னாளே?''

''பொய்! ஸ்கூலாவது ஒண்ணாவது சுத்தப் பொய். இவளுக்கு ஏகப்பட்ட கடனாக்கம். திருச்சூர்ல தம்பி இருக்கான். அவன்கூட சரியா இருக்க முடியாம ஓடி வந்தாச்சு. எங்கிட்ட இருந்தே நூத்தம்பது ரூபா கடன் வாங்கியிருக்கு. வீட்டு வேலை ஒண்ணும் தெரியாது. வெறும் சாக்கடை! உடம்பெல்லாம் பொய்யி. நான் சொல்றதை சொல்லிட்டேன் ''

சோமசுந்தரம் மனைவியைப் பார்த்தான். ஈஸ்வரியின் முகத்தில் தீர்மானமின்மை தெரிந்தது. ''என்னங்க இப்படிச் சொல்றான்?'' என்றாள்.

அப்போது அலமேலு அம்மாளும் அவள் பெண் கோமதியும் ஒரு துணி மூட்டை கோணிப்பை தகரப் பெட்டி சகிதம் அவர்களை நோக்கி ஆர்வத்துடன் வந்து கொண்டிருந்தார்கள்.

''இப்ப என்னங்க செய்யறது?'' என்றாள் ஈஸ்வரி. சைக்கிள்காரனைப் பார்த்ததும் அம்மாவும் பெண்ணும் பிரேக் போட்டாற்போல் நின்றார்கள்.

''வாங்க அலமேலு அம்மா! வெளியூர் கிளம்பிட்டாப் பல?'' என்றான். அவள் பார்வை சரிந்தது.

சோமசுந்தரம் அந்த கோமதியைப் பார்த்தான். வளர்த்தியான பெண். பதினாலு வயசுதான் இருக்கும். குழந்தை முகம். சாயம்போன பாவாடை சாயம்போன தாவணி. பிளாஸ்டிக் மாலை ஒன்றைக் கடித்துக் கொண்டிருந்தாள். கன்னம் கரேல் என்று தலைமயிர். கண்கள், கொஞ்சம் கொஞ்சம் தீபா.

''என்னம்மா, இந்த ஆளு உங்களைப் பத்தி வேற மாதிரி இல்ல சொல்றார்?''

''அய்யா! அவர் சொல்றதை நம்பாதீங்க! அவருக்கு நான் பணம் கொடுக்கணும்னு என்ன என்னவோ பொய் சொல்வார். எல்லாம் பொய்! அப்படி எல்லாம் இல்ல!''

''ஏய் மூதேவி! நீ எனக்கு ஒண்ணும் பணத்தை திருப்பித் தரவேண்டாம்! வெளியூர்க்காரர்களை ஏமாத்தாதே!''

''அப்ப இவர் சொல்றது நிஜமா பெரியம்மா?''

''பொய்! எல்லாம் பொய்! நான் ஏழை. ஏழை சொல் அம்பலம் ஏறாதும்பா. எல்லாரும் சேர்ந்துண்டு அழிச்சாட்டியம் பண்ணி...''

ஈஸ்வரி கோமதியைப் பார்த்துக்கொண்டே இருந் தாள். அந்தப் பெண் பூமியைப் பார்த்துக்கொண்டு கால் கட்டை விரலால் வட்டங்கள் வரைந்து கொண்டிருந்தது.

ஈஸ்வரி, ''வாங்க போகலாம்'' என்றாள்.

''இரு ஈஸ்வரி. இதைச் சரியா விசாரிச்சுறலாம். யார் பொய் சொல்றான்னு பார்த்துறலாம்!'' என்றான் சோம சுந்தரம்.

''யார் பொய் சொன்னாலும் யார் நிஜம் சொன்னா லும் இந்த அம்மா நமக்கு வேண்டாம்!'' என்றாள் தெளிவாக.

''அப்படி பட்டுனு சொல்லிட்டா எப்படி? உனக்கு உதவிக்கு வேணும்னுட்டுத்தானே...''

''மெட்ராஸ்லே கிடைக்காத பொம்பளைங்களா?''

''இந்த ஆள் சொல்றது எவ்வளவு தூரம் நிஜம்னு யாருக்குத் தெரியும்?''

ஈஸ்வரி கோபத்தில் வெடித்தாள். ''இப்ப நீங்க கிளம்பறீங்களா இல்லையா?''

சோமசுந்தரம் மவுனமாகக் காரை ஸ்டார்ட் செய் தான். மெதுவாக நகர்ந்தான். அந்த அம்மாள் அந்தப் பெண்ணுடன் கூட ஓடி வந்தாள். ''அய்யா! அம்மா! அம்மாடி! எனக்கு ஒரு வழி பண்ணிக் குடுப்பேன்னு நினைச்சேன்! ஏதோ பசிக் கொடுமையினால், அடுத்த வேளை சாப்பாட்டுக்கு இல்லாத கொடுமையிலே தவறுதலா நேர்ந்திருந்தாலும் நீங்க மன்னிக்கக் கூடாதா? என்னை உங்காத்துல சேர்த்துக்க வேண்டாம். பட்டணத் தில் அழைச்சுண்டு போய் ஏதாவது ஒரு ஆசிரமத்தில் ரெண்டு பேரையும் சேர்த்துடுங்கோ. புண்ணியம் உண்டு! இந்த இடத்தில் இருந்து எனக்கு விடுதலை கொடுங்கோ''

தாடிக்காரனைக் காட்டி, ''இவாதான் என்னை அந்த மாதிரி பண்ணா! இவாதான் சொல்லிக் கொடுத்தா! இவாதான் சொல்லிக் கொடுத்தா!'

''ஸாரி பெரியம்மா! உங்களுக்கு ஹெல்ப் பண்ண முடியாத நிலையில் இருக்கேன்!'' சோமசுந்தரம் கியர் மாற்ற கார் வேகம் பிடித்தது.

அதன் கண்ணாடி வழியாக மூவரும் நிற்பதைப் பார்த்தாள் ஈஸ்வரி. புடவைத் தலைப்பில் அழுதுகொண்டு அலமேலு; சங்கிலியைக் கடித்துக் கொண்டு காலால் தரையில் கோடிட்டுக் கொண்டு கோமதி; சற்று தூரத்தில் அவர்களை வா என்று கூப்பிடும் அந்த சைக்கிள் தாடி.

கருணைக்கும் சில நிபந்தனைகள் உண்டு.



# 8

# கரைகண்ட ராமன்

மதுராந்தகத்திலிருந்து எட்டு மைல் தொலைவில் இருந்தது சீரா ரம் என்னும் அந்த ஸ்ரீராமபுரம். 'வருக! வருக!' என்று ஊராட்சி ஒன்றியம் அழைத்தது. கோவிலின் குள்ள கோபுரம் தெரிந்தது, காரைத் தொடர்ந்து சீராரத்தின் கருப்பட்டி நாய் ஒன்று குலைத்துக் கொண்டு தன் எல்லைவரை ஓடி வந்தது. புழுதிப் பாதை. கோவிலின் அருகில் போய் நிறுத்தினான். கார் கிளப்பிய புழுதிப் படலம் இன்னும் அடங்கவில்லை. ஓர் ஆள் ஓடிவந்து "என்னங்க?" என்றான்.

"கோவில் எப்ப தொறக்கும்?" என்றான்.

"அதுக்கு நேரம் கிடையாதுங்க. அக்கிரகாரத்திலே கிருஷ்ணசாமின்னு அர்ச்சகர் இருக்கார். தக்ளியிலே நூல் நூத்துக்கிட்டு இருப்பாரு மேற்க பார்த்த வீடு. அவர் கிட்ட சாவி இருக்குது."

"அவரைக் கூட்டி வா."

அவன் இங்கேயிருந்தே 'அய்யரே அய்யரே' என்று கத்திக் கொண்டு ஓடினான். சிறு குழந்தைகளும் பெரியவர்களும் காரில் வந்தவனை வேடிக்கை பார்க்க வநதனர்.

வெயில் கண்ணாடி அணிந்து கொண்டான். சிகரெட் பற்றவைத்தான். பார்வைகள்! மௌனமாகக் கம்பளிப் பூச்சி ஊர்வது போல் உடம்பை உறுத்தும் பார்வைகள்.

''என்னய்யா?'' என்று அதட்டினான்.

''ஒண்ணுமில்லே சும்மா'' என்றான் முண்டாசுக் காரன்

''இங்கே போலீஸ் போஸ்டு ஏதாவது இருக்கா?''

''இல்லீங்க. அதுக்கு மதுராந்தகம் போகணும்.''

சிதிலமாக இருந்ததுகோவில். மதில் பக்கம் கண்டபடி காட்டுச் செடிகள் வளர்ந்திருந்தன. நிறையப் பொக்கை இருந்தது. நூற்றாண்டுகளாகப் பட்ட காற்றும் மழையும் கோபுரத்தைப் பச்சைக் கருப்பாக்கி இருந்தன. நாமங்கள் அழிந்திருந்தன. மரத் தேர் ஓடுவதை மறந்து தரைதட்டியிருந்தது. அதனடியில் பன்றிக் குட்டிகள் வால் சுற்றிக் கொண்டிருந்தன. 'ஊழல் போதாதா! உனக்கா ஓட்டு!' என்று சுவரில் எழுத்துக்களில் அரசியல் காலம் கடந்திருந்தது.

அந்த அர்ச்சகர் வேர்க்க விறுவிறுக்க ஓடி வந்தார். வயிறு மட்டும் விலகி முதலிலேயே வந்துவிட்டது. பூணூல் தேர்வடம் போல் தடியாக இருந்தது. மூக்கு பெரிசாக இருந்தது 1945-ல் அழகாக இருந்திருக்கலாம். இப்போது பாரியான உடம்பு.

''வாங்கோ! கோவிலுக்கு வாரத்துக்கு ஒருத்தர்தான் வரா. அதான் நூல் நூத்துண்டு இருந்தேன்.'' அவர் இடுப்பில் சாவிக்கொத்து செருகியிருந்தது.

''ஏன் அய்யரே! சாமி கும்பிட வர நேரத்திலே கோவிலைத் திறந்து வெச்சிருக்கக் கூடாது? அவுங்க பாரு மெட்ராஸ்லேந்து 'ப்ளெஷர்' எடுத்துக்கிட்டு வந்திருக்காங்க எவ்வள நாழி காத்திருப்பாங்க?''

''அடப்போடா எச்சக்கலை! எனக்கு கோவிலை எப்ப திறக்கிறது எப்ப மூடறதுன்னு தெரியும்! நீங்க வாங்கோ ஸார் பெருமாள் சேவிக்கணுமா?''

கோவில் வாசலில் மரக் கதவு இரண்டையும் பிணைத்து தொளதொள என்று ஓர் இரும்பு சங்கிலி— பெரிய கரிய பூட்டு சாவியை உள்ளே வைத்த உடனே வாய் திறந்து கொண்டது. கதவு திறக்கும்போது 'எண்ணெய் வேண்டும்' என்று முனகியது. துவஜஸ் தம்பம் தெரிந்தது.

''சீக்கிரம் வந்துடுங்கோ, தலையிலே கல் விழுந்தாலும் விழும். சிதிலமா இருக்கு கோவில். எண்டோமென்ட் போர்டுக்கு எழுதிக் கொடுத்திருக்கோம். எடுத்துக்கோங் கோன்னு. ரிப்ளையே வரலை. பிராசீனமான, கோவில். கரைகண்ட ராமன்னு பெருமாளுக்குப்பேரு. மதுராந்தகத் திலே ஏரி காத்த ராமன். இங்கே கரைகண்ட ராமன். அதைவிட இது பழைய கோவில். திருமங்கை மன்னன் ஒரு பத்து பாசுரம் பாடியிருக்கார். சுவத்திலே எழுதி யிருக்கு பாருங்கோ.''

''எவ்வளவு பழசய்யா இந்தக் கோவில்?''

''உடையவர் காலத்துக்குக்கூட முன்பட்டது. பெரிய நம்பி இங்கே வந்திருக்கார். சாஸனங்கள் இருக்கு. சுவத்திலே எல்லாம் வேற லிபியிலே எழுதியிருக்கா பாருங்கோ! ரொம்பப் பழைய கோவில்.''

முட்செடிகளைக் கடந்து பட்டப் பகலிலே மிக்க இருட்டாக இருக்கும் சந்நிதியை அடைந்தார்கள். உயிர் போகிற மாதிரி ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ''எண்ணெய்க்கே தினம் நாலணா ஆறது'' என்று அதைத் தூண்டி விட்டார்.

கரைகண்ட ராமனைப் பார்த்தான். பிரமித்தான். கோடி வேட்டி சுற்றியிருந்தது விக்கிரகம். கரப்பான்பூச்சி சுவாமி மேல ஓடியது. இருந்தும் அந்த மங்கலான ஒளியில் அந்த முகத்தில் இருந்த புன்னகையும் கையில் வில் வைத்திருந்த ஒயிலும் காதின் பாடகமும் கன்னத்தில் குழிவுகளும் பக்கத்தில் பதவிசாக நின்ற மனைவியும்

தம்பியும், ''திருமஞ்சனம் திருவாராதனம் ஒண்ண விடற தில்லை நான். எல்லாம் என் ஏழைக் கிரமப்படி நடத்திண்டு வரேன். அஷ்டோத்திரம் சொல்லி அர்ச்சனை பண்ணிடலாமா?''

''என்ன விக்கிரகம்யா அது செம்பா?'' என்றான்.

''இல்லை, இதைப் பஞ்சலோகம்னு சொல்றா. ரொம்ப அபூர்வமான விக்கிரகம். மூலவர் பேர் கோதண்ட ராமன். உத்சவர்தான் கரைகண்ட ராமன். ஸ்ரீராமன் சீதாதேவி, லட்சுமணனோட காட்டுக்குப் போறபோது இங்கே வந்து...''

அபாரமான விக்கிரகம். மூன்றரை அடி உயர மிருந்தது. நகைககள் அதிகமில்லை. மார்பில் ஒரு பச்சைக் கல் நகை இருந்தது.

நகைகள் யாருக்கு வேண்டும்? விக்கிரகம் முப்பதினாயிரம் பெறும். பாக்கி இரண்டும் பதினைந்து பதினைந்துக்குப் போகும். மொத்தம் எழுபதுகூடத் தேறும். மிகப் பழைய விக்கிரகம். பஞ்சலோகம் அருமையான வேலைப்பாடு! ஜான் மயங்கி விழுந்து விடுவான்.

எடுப்பதிலும் அதிகம் தொந்ரவு இருக்காது. பெடஸ்டல் வைத்து மூன்று பேரும் நிற்க சுலபமாக... திடுக்கிட்டான்.

''ஏன் ஸ்வாமி, உற்சவங்களுக்கு விக்கிரகங்களை வெளியிலே எடுக்க மாட்டீங்க?''

''ஏன்?''

''சிமெண்டுப் போட்டுப் பூசியிருக்குதே?''

''எடுக்கும்படியாத்தான் இருந்தது முன்னாடி. உற்சவம் எல்லாம் நன்னாத்தான் நடந்திண்டிருந்தது. பங்குனி மாசம், சித்திரை மாசம்...எட்டு வருஷமாத்தான் 'கேஷ்'

இல்லாம நின்னு போய்டுத்து. கொஞ்சம் ஸ்திரமாப் பண்ணிடலாமேன்னுட்டு கீழே கொஞ்சம் சிமெண்ட் நானே பூசி வெச்சுட்டேன். நாயுடு ஒருத்தர் அரை மூட்டை சிமெண்ட் தந்தார்.''

''இந்தாங்க!'' என்றான். பத்து ரூபாய்.

''என்னது! அர்ச்சனையே ஆகலையே இன்னும்!''

''வெச்சுக்கங்க! ராத்திரிக்கு நிறைய விளக்கு ஏத்தி வையுங்க!''

பைத்தியக்காரன்! விக்கிரகங்களை அடிப்பாகத்தில் சிமெண்ட் பூசி ஸ்திரமாக்கி வைத்திருக்கிறான். உடைக்க மூன்று மணி நேரமாவது ஆகும்! அவனுக்கு எரிச்சலாக வந்தது. ராத்திரிதான் வேலை நடக்கும் போலிருக்கிறது.

''அஷ்டோத்திரம் சொல்லட்டுமா?''

''சொல்லுங்க!''

ஓம்!

ராமரின் கல்யாணகுணங்கள் சகலத்தையும் விவரிக்கும் பெயர்களை ஒவ்வொன்றாக அடுக்க அவன் அந்த மூன்று விக்கிரகங்களும் எவ்வளவு கனம் இருக்கும் என்று யோசித்தான். காரை உள்ளே கொண்டு வர முடியாது. டிக்கியில் போய்விடும். ஒரு சிஸல் தேவைப்படும். சுத்தி தேவைப்படும். மதுராந்தகத்தில் கிடைக்கும். ஜான் வந்திருக்கலாம். அவனை பம்பாயில்தான் பார்க்கமுடியும்.

''நன்னா சேவிங்கோ!''

ஆரத்தியின் அதிகப்பட்ட வெளிச்சத்தில் ராமன் ஜொலித்தான்.

பஞ்சலோகம். தொள்ளாயிரம் வருஷத்துக்கு முந்தின சிலை. அடேய், உனக்கு அதிர்ஷ்டம்டா! கார்பன் டேட்டிங்கூட பண்ணலாம். அப்புறம் பணம் கொடு என்று கேட்கலாம். டாலர்கள்...இனிமையான டாலர்கள்.

கோவிலை விட்டு வெளிவந்ததும் அவர் அக்கறையாகக் கோவிலைப் பூட்டி, "அப்ப நான் வரட்டுமா? ரொம்ப சந்தோஷம்" என்றார்.

"சாமி, இன்னிக்கு என்ன நட்சத்திரம்?" என்றான்.

"பரணி."

"பரணியா! பரணிக்கு அடுத்தது?"

"கார்த்திகை."

"அட, நான் ஒரு நாள் முன்னால வந்துட்டேன் கார்த்திகைதான் என் நட்சத்திரம். நாளைக்குத்தான் வந்து சிறியதா ஒரு உற்சவம் மாதிரி நடத்தி பத்துப் பேருக்குச் சாப்பாடு போட்டு செய்யணும்னு எங்கப்பாரு ஆசைப்பட்டாரு."

"சரி, போய்ட்டு நாளைக்கு வாங்களேன்."

"எங்கே? நான் நாகர்கோயில்லேந்து வரேன்."

"அப்ப மதுராந்தகத்திலே தங்கிட்டு விடிகார்த்தாலே வந்துட்டேள்னா பாக்கியை நான் பார்த்துக்கறேன்."

"அதுகூட சரிதான். மதுராந்தகத்திலே ஓட்டல் வசதியெல்லாம் எப்படியோ?"

"ஒ கிளாஸ்! என் ஷட்டகருக்கு உறவுக்காரர்கூட பஜார்லே பத்மா கபேன்னு வெச்சிருக்கார்."

"தங்கறதுக்கு சொன்னேன்."

"தங்கறதுக்குக்கூட இருக்கு. ஆனா நீங்க ஒண்ணு பண்ணுங்கோளேன். ஆட்சேபணை இல்லைன்னா நம் மாத்திலே தங்கிக்கோங்களேன். ஒரு ராத்திரிதானே. என் ஆம்படையா பேஷா தளிப் பண்ணிப் போடுவா."

"எதுக்கு எட்டு மைல் போய்ட்டு வரணும்?"

அவன் புன்னகையுடன் "அதுகூட சரிதான்" என்றான்.

கிருஷ்ணசாமிக்குப் பதினாறு வயதிலிருந்து ஆரம்பித்து சளைக்காமல் ஐந்து பெண்கள் இருந்தனர். அவன் திண்ணையில் உட்கார்ந்து எண்ணெய் வழிந்த பிறையைப் பார்த்துக் கொண்டிருக்க மோர் கொண்டு வந்து கொடுத்த பெண்ணை "உன் பேர் என்ன?" என்றான்.

"அலமேலு."

"என் பேர் எச்சி" என்றது அடுத்தது. அலமேலு எச்சி எல்லாருமே சிவப்பாக இருந்தனர். கிருஷ்ணசாமியின் மனைவி தென்படவில்லை. நிலைப்படிக்குமேல் நடுவே நாமம் போட்டு பக்கத்தில் அனுமாரும் கருடனும் போட்டு ஒரு படம் மாட்டியிருந்தது. "இந்தப் படி எங்கே போறது?" என்று அலமேலுவைக் கேட்டான்.

"மாடிக்கு! தூரம்னா உள்ளுக்கு" என்றது.

"நீ இங்கேயே இருக்கப் போறியா?" என்றது, கோமளி என்கிற நான்காவது மழலை. அலமேலுவின் ஏழ்மை தோற்றுப் போயிருந்தது. தலைப் பின்னலின் இறுதியில் கம்பளி நூல். கழுத்தில் கறுப்புக் கயிற்றில் பிளாஸ்டிக் வெங்கடேசுவரர். சீட்டிப் பாவடை. அம்மா புடைவையின் பாதித்தாவணி... யாவும் சேர்ந்து முயற்சி செய்து தோற்றுப் போயிருந்தன. இருட்டில் பார்த்த ராமன்போல் அழகாக இருந்தாள். உதடுகள் ரோஜா நிறத்துக்கு அருகே இருந்தன. இளமையின் கட்டுக்கடங்காத ராச்சியம். பரிபாலனம்.

"எத்தனாவது படிக்கறே அலமேலு?"

"படிக்கலை மாமா, ஆத்திலே அம்மாவுக்கு ஒத்தாசையா இருக்கேன். இது என்ன. .•.பாரின் வாச்சா? முள்ளே இல்லையே?"

"ஆமா, இதுக்குள்ள ஒரு லைட்டு எரியறது பாரு. மணிநம்பராகவே காட்டும்! பாரு! இங்கே வா! கிட்ட வா!"

தயங்கித் தயங்கி வந்தாள். டிஜிட்டல் கடிகாரத்தின் சிவப்பு எழுத்துகளில் அவள் கண்கள் அகல விரிந்தன.

''இது என்ன சங்கிலி?''

''என்ன மாமா இது! அங்கெல்லாம் போய்த் தொட்டுண்டு''

''அலமேலு!''என்று உள்ளிருந்து குரல் கூப்பிட.

''வந்துட்டேம்மா!'' என்று காணாமற் போனாள்.

''ராத்திரிக்குள் ராமனைச் சந்திப்பதற்குள்!' என்று நினைத்துக்கொண்டான், உடனே தலையில் தட்டிக் கொண்டான். தான் வந்த வேலை என்ன? நடுவே எதற்கு இந்த நப்பாசை

''இந்தாங்க மாமா பஜ்ஜி''—அலமேலு.
''இந்தாங்க மாமா தீர்த்தம்.''—எச்சி
''இந்தாங்க மாமா.''—கோமாளி மழலை

அவன் கொடுத்த நூறு ரூபாயை ''எதுக்கு இதெல்லாம்'' என்று வாங்கிக் கொண்டிருந்தார் அர்ச்சகர்.

வாழை இலை, வாழைக்காய் எல்லாம் வாங்கிக் கொண்டு வந்தார். சாவி இடுப்பிலேயே செருகியிருந்தது.

''சாவி விழுந்துடும்போல இருக்கு'' என்றான்.

''விழாது எப்பவும் இடுப்பிலேதான் இருக்கும்.''

''எவ்வளவு வரது கோவில்லே உங்களுக்கு?''

''மாசம் பதினஞ்சு ரூபா, அப்புறம் வருஷாந்தரத்துக்கு நெல் உண்டு. அதை வித்துக்கறது. சாப்பாட்டுக்கு கொஞ்சம் வெச்சுக்கறது. ஆத்துக்காரி அப்பளம் இடறா, ஒரு பையன் எட்டு வயசிலே சீரங்கத்திலே பாடசாலையிலே விட்டிருக்கேன் ஒரு பொண்ணு செங்கல்பட்டிலே வக்கீலாத்திலே குழந்தையைப் பாத்துக்கறது அவா பணம் பதினஞ்சு அனுப்பறா''

''மொத்தம் ஏழா?''

''ஆமா. என்ன பண்றது? அந்த நாள்லே எல்லாம் குடும்ப கட்டுப்பாடு பிரச்சாரம் அது இது எல்லாம் கிடையாது''

' அப்படி ஒண்ணும் ரொம்ப 'அந்த நாள்' இல்லை போலிருக்கே'' என்றான்.

''என்ன சொல்றேள்?''

● ● ●

சாயங்காலம் மதுராந்தகம் போய் சில சாதனங்கள் வாங்கிக் கொண்டு இருட்டுவதற்குள் திரும்பி வந்து விட்டான் அர்ச்சகர் வாழைக்காய் திருத்திக் கொண்டிருந்தார். அலமேலு, அரிசி பொறுக்கிக் கொண்டிருந்தாள். அவளின் இதமான புதியமலர்போன்ற அறியாமைநிறைந்த மென்மையில் சற்று நேரம் நிலை மறந்தான். ஒரு பையனை சீரங்கத்திற்கும் ஒரு பெண்ணை 'வக்கீலாத்தி' ற்கும் அனுப்பிக் கைகழுவியிருக்கும் கிருஷ்ணசாமி அய்யங்காரே உன் மூத்த பெண் அலமேலுவை நான் அழைத்துச் செல்கிறேன்; பணம் தருகிறேன், படிப்புத் தருகிறேன்...என்று கேட்க நினைத்துப் பதிலாக, ''எத்தனை மணிக்கு நீங்க தூங்கப் போவீங்க?'' என்றான்.

''எட்டாச்சுன்னா படுத்துண்டுடுவேன்?''

''அதான் ஏழா?''

''என்ன?''

''ஒண்ணுமில்லை.''

● ● ●

திண்ணையில்தான் படுத்திருந்தார். குறட்டை எதிர்த் திண்ணையில் படுத்திருந்தவனைத் தாக்கியது. இடுப்பு வேஷ்டி நழுவியிருந்தது. சாவிக்கொத்து சரிந்திருந்தது.

நிதானமாகக் கோவிலுக்கு நடந்தான், காரை முன்பே கோவிலருகில் நிறுத்தியிருந்தான். இருட்டு அவர் குறட்டை கோவிலின் வாசல்வரை கேட்டது. டிக்கியைத் திறந்து கத்தி, உளி, கயிறு எல்லாம் எடுத்துக்கொண்டு மெதுவாக மரக்கதவைத் திறந்து உள்ளே நடந்து சந்நிதியை அடைந்து திறந்து...

ராமர் புன்னகை செய்து கொண்டிருந்தார். 'டங்!' அவனுக்கே செதுக்கிய ஒலி பயமாக இருந்தது விளக்கொளி தங்க நிறத்தில் ராமனை வருடியது. சுவாமி உயிர் பெற்றதுபோல் நிழல் எதிர்ச் சுவரில் மூலவர்மேல் நடனமாடியது.

சிமெண்ட் 'பொர பொர' என்றிருந்தது. ஒரு தட்டலில் நிறையப் பெயர்ந்தது சுலபம்தான்!

டங்! டங்! டங்!

ராமன் அணிந்திருந்த வெள்ளை வேட்டியை உருவினான். உள்ளே நிரந்தரமான செதுக்கலில் அவர் உடையணிந்திருந்தார். பிரமாதமான விக்கிரகம்.

டங்! டங்! டங்! மெதுவாக ராமன் அஸ்திவாரத்திலிருந்து அசைந்தார்.

டங்! டங்! டங்!

அவர் இடுப்பில் கயிறு சுற்றி மெதுவாக அசக்கியதில் அவர் விடுதலை பெற்றார்.

அடுத்தது சீதை...திடீர் என்று மயிர்க்கால் கள் சிலிர்த்தன. யாரோ பார்க்கிறார்கள். திரும்பினான். தூரத்தில் உருவம் தெரிந்தது. அவனை நோக்கி வந்தது.

''யாரப்பா அது? யார் சந்நிதிக்குள்ளே! யாரு? யாரு?'' அவன் ரத்தம் உறைந்தது, முதுகுத்தண்டில் சில்லிட்டது.

''யார்றா அது யாரு?''—அர்ச்சகர் கிருஷ்ணசாமியின் குரல்.

அவசரமாக ராமரைத் தூக்கிப் பார்த்தான். நல்ல கனமாக இருந்தார். உலோகம் புரள்கிற தொனி விநோதமாக இருந்தது.

''அடப்பாவி! ஏய்! விடுடா விக்கிரகத்தை! நீயா? சாவியைக் காணமேன்னு ஏந்தா...ஏய், விடுடா விக்கிரகத்தை வைடா அதை!'' என்று விக்கிரகத்தின் மேல் பாய்ந்து கட்டிக் கொண்டார். அவன் கயிற்றை இழுத்தான்

அவர் அவனையும் சேர்த்துப் பற்றிக்கொண்டு, ''வேண்டாண்டா! மஹாப் பாவம்! பழைய காலத்திலே மஹா பெரியவா எல்லாம் பிரதிஷ்டை பண்ணின விக்கிரகண்டா. அதைத் தொடாதே. பாவம்டா! தினம் தினம் நான் தொடறதினாலேதான் என் பாவமூட்டை ஏறிண்டு இருக்கு...சாப்பாட்டுக்கு உன்மாதிரி திருட்டுப்பன்னாடைகளையெல்லாம் நாடவேண்டியிருக்கு... கஷ்டப்படறேன்! விட்டுடுடா! விட்டுடு. இது தெய்வம்! பெருமாள்! உன்னை சும்மா விடமாட்டார். பூண்டோடு அழிஞ்சு போய்டுவே!''

அவர், அவனைப் பிடித்துத் தள்ளின தள்ளலில் விளக்கு சரிந்து அவன் ஏதோ காட்டுத்தனமாக ஓங்க, 'கிக்றீச்' என்று சப்தம் கேட்க ஒரு வௌவால் அவன் முகத்தைச் சீய்த்துக்கொண்டு 'விர்ர்ர்' என்று பறக்க...

''இதபார் அய்யரே! ஏன் இப்படி ஏழ்மையிலே சாமி சாமின்னு உசிரை விடறே! சோத்துக்கு அல்லாடறே! ரூபாய் பத்தாயிரம் கொடுக்கறேன் பேசாம கம்னு இருந்துடு. சாமிக்கு விளக்கு ஏத்த எண்ணெய் இல்லாம கரப்பாம்பூச்சியும் வௌவாலுமா ஓடுது! நான் உங்க சாமியை எடுத்துட்டுப் போய் கொடுக்கற இடத்திலே வெளிநாட்டிலே வெல்வெட்டிலே ஏர்கண்டிசன் ரூமுக்குள்ளே கண்ணாடிப் பொட்டியிலே வெச்சுப்பாங்க! ராம

ருக்கும் வாழ்வு வந்துடுச்சு...உனக்கும் வாழ்வு வந்துடுச்சு! உன் பொண்ணை நான் கட்டிக்கிறேன். உனக்கும் மச்சு வீடு கட்டித்தரேன். கம்முனு இரு. போலீஸ்காரங்க நாளைக்கு வந்தாக்க என்னை அடிச்சிட்டுப் போயிட்டான்னு...''

''ஏய்! மஹாப்பாவி! மஹாப்பாவி' விக்கிரகத்தை வெச்சுடுடா! வெச்சுடுடா! பாதகம்டா இது, அடுக்காதுடா! அய்யோ ஸ்ரீராமா!''

—அர்ச்சகர் அவன் காலை வார...மறுபடி வெளவால் அவன் கன்னத்தில் பட்டுவிட...

அவன் கோபம் அதிகமாகி அவரை சுத்தியால் பலமாக மண்டையில் அடித்துவிட்டான்.

அர்ச்சகர் 'ராமா' என்று நின்று போனார். இருட்டிச் சாய்ந்தார்.

அவன் மூன்றுவிக்கிரகங்களையும் பேர்த்துக் கொண்ட பின்தான் புறப்பட்டான்.

● ● ●

''அப்புறம் அந்த ஆள் என்ன ஆனான்?'' என்றான் ஜான்.

''நான் பேப்பர் பார்க்கவில்லை. நான் விட்டுச்சென்ற போது அங்கேயே கிடந்தான். நடு மண்டையில் அடி பட்டது. உடைந்தாற்போல் சப்தம் கேட்டது. இந்த மாதிரி மியூசியம் பிறவிகளும் இருக்கிறார்கள்...''

''ஏன்?''

''பைத்தியக்காரன், நான் வாக்களித்த பணத்தை வாங்கிக்கொண்டு எனக்கு உதவி செய்திருக்கலாம்.! அவன் பெண்ணைக்கூட நான் கல்யாணம் செய்துகொண்டிருப்பேன். அதை விட்டுவிட்டு என்னை சபிக்கிறானாம்! தண்டனையாம்! அழிந்து போய்விடுவேனாம்.'' வாய் விட்டுச் சிரித்தான்.

கரைக்கண்ட ராமன் தன் மனைவியுடனும் தம்பியுடனும் அந்த பம்பாய் ஹோட்டலின் எட்டாவது மாடி, எண்பதாவது அறையின் ஓரத்தில் நின்று கொண்டிருந்தார்.

ஜான், பாலித்தீன் உறைகளைத் தயார் செய்து கொண்டே, "கன்னத்தில் என்ன காயம்?" என்றான்.

தொட்டுப் பார்த்தான். வலித்தது. கண்ணாடியில் பார்த்தான். ஒரே ஒரு சின்ன ரத்தக் காயம்.

எங்கிருந்து வந்தது இந்தக் காயம்? யோசித்தான்.

"ஆ! அந்த அர்ச்சகனுடன் போராடும்போது வௌவால் ஒன்று முகத்தில் அடித்தது. அப்போது கடித்திருக்க வேண்டும்?"

"வௌவாலா?"

' ஆம்."

"வௌவால் சாதாரணமாகக் கடிக்காதே?"

"இது கடித்திருக்கிறது."

"சமீபத்தில் ரீடர்ஸ் டைஜஸ்ட்டில் படித்தேன். வௌவால்களுக்கும் ரேபிஸ் (Rabies) உண்டாம். அப்போது அவை கடிக்குமாம். கடித்து ஹைட்ரோஃபோபியா வந்து பலர் செத்துப் போயிருக்கிறார்கள்."

அவன் மறுபடி அந்தக் காயத்தைப் பார்த்துக் கொண்டான். கன்னிப்போய்க் கோபித்துக் கொண்டிருந்தது...வலித்தது.

கண்ணாடியில் கரைகண்ட ராமன் புன்சிரிப்புடன் தெரிந்தார்.



# 9

# முரண்

குமாரசுவாமி மிகவும் அதிகாலையில் எழுந்து குளித்து விட்டு, கந்தர் அலங்காரம் சொல்லிவிட்டுத் தெருக்கோடிக்குச் சென்று டிப்போவில் பால் இரண்டு ஆழாக்கு வாங்கி வந்து டீ போட்டுக் கொண்டு டீ சாப்பிட்டு விட்டு, தன் காக்கி யூனிஃபாரம், தலைக்குக் காப்டன் தொப்பி அணிந்து கொண்டு பள்ளிக்கூடக் கட்டடத்திற்கு நடந்து சென்று ஷெட் சாவி போட்டுத் திறந்து டாட்டா மெர்ஸிடிஸ் பென்ஸ் வண்டியை டீஸல் தண்ணீர் எல்லாம் செக் பண்ணி விட்டுக் கிளப்பி பள்ளிக் கட்டடத்தை விட்டு வெளியே வந்து 40 கிலோ மீட்டர் வேகத்தை மிஞ்சாமல் நிதானமாக என். எஸ். காலனிக்குச் சென்று நிறுத்தியபோது மணி எட்டு முப்பது.

மேற்சொன்ன நியமனத்தைக் குமாரசுவாமி பள்ளி தினங்களில் சென்ற இருபது வருஷங்களாகச் செய்கிறான். குமாரசுவாமிக்கு உடம்புக்கு வந்து லீவு போட்டதாக ஞாபகம் இல்லை கந்தர் அலங்காரம் சொல்லாத அல்லது டீக்குப் பதில்காப்பி சாப்பிட ஏதாவது தினம் இருக்குமோ என்று சென்ற இருபது வருஷங்களில் தேடிப் பார்க்க வேண்டும்.

என் எஸ். காலனியின் நீல ஸ்கர்ட்டும், வெள்ளைச் சட்டையும் அணிந்த அந்தப் பெண் ஓடி வந்து ஏறிக் கொண்டாள். இரட்டைப் பின்னல், பூனைக் கண்கள்...

ப்ரேக்ஃபாஸ்ட்டை பாக்கி வைத்துக்கொண்டு வந்தாள். அதை மென்றுகொண்டே வந்தாள்.

''ஃப்யூ ஐ மேட் இட் குட்மார்னிங் குமாரசாமி!''

''குட்மார்னிங் பேபி!''

''பிஸ்கட் வேணுமா?''

''வேண்டாம், நீ சாப்பிடு. இன்றைக்கு ரிஹர்ஸல் உண்டா?''

''ஓ எஸ்.''

குமாரசுவாமி வண்டியைக் கிளப்பினான். சீராகச் செலுத்தினான்.

அடுத்த ஸ்டாப். எட்டுப் பெண்கள் ஏறிக் கொண்டார்கள். எல்லாரும் ஒரே மாதிரி நீல ஸ்கர்ட், வெள்ளைச் சட்டை அணிந்த பெண்கள். அவர்கள் வயது எட்டிலிருந்து பதினான்கு வரை இருக்கலாம். புதிய நீலமலர்கள் போல்.

''குட்மார்னிங், குமாரசாமி!''

''குட்மார்னிங், குமாரசாமி!''

''குட்மார்னிங், குமாரசாமி!''

கீச்சுக் கீச்சுக் குரல்கள், சிரிப்புகள், விஷமம் இல்லாத இயற்கையான சிரிப்புகள்.

குமாரசுவாமி நியமித்த ரூட்டில் பஸ்ஸை நியமித்த வேகத்தில் செலுத்தி இரண்டு மூன்று ஃபர்லாங்கிற்கு ஒரு தடவை நிறுத்தி மேலும் பெண்களை ஏற்றிக்கொண்டு சென்றான். ஒவ்வொரு ஸ்டாப்பிலும் இன்னும் நீல மலர்கள்.

பைஜாமா, நைட் கவுன், நியூஸ் பேப்பர் சகிதம் தூக்கம் தேங்கிய கண்களுடன் சில அப்பாக்கள் தத்தம் பெண்களை பஸ்வரை கொண்டுவந்து ஏற்றிவிட்டார்கள்

பெண்கள் மார்பில் பின் குத்தி அதில் கைக்குட்டை பொருத்தி இருந்தார்கள். சில பெண்கள் இரட்டைப்

பின்னல். சில பெண்கள் ஒற்றைப் பின்னல், வெறும் ரிப்பன். குமாரசுவாமிக்கு எல்லோரையும் தெரியும். எல்லாம் மனப்பாடம் அவனுக்கு.

கடைசி ஸ்டாப்பில் எப்போதும் போல் பஸ் நிரம்பி, பெண்கள் நிற்க வேண்டி இருந்தது. பஸ் முழுவதும் கண்ணாடிச் சிரிப்பு. தெளிந்த நீரோடைச் சிரிப்பு. மீனா என்ன செய்தாள்? மாலா என்ன செய்தாள்? தர்மேந்திரா! ஷத்ருகன்சின் ஹா! சினிமா, சிநேகிதிகள், க்ளாஸ் மிஸ்கள், பவுடர், சங்கிலி டாலர் அவைகளைப் பற்றியே பேச்சு. குமாரசுவாமி இன்னும் நிதானமாகச் செலுத்தினான். பள்ளி துவங்குவதற்குப் பதினைந்து நிமிஷம் முன்பே வந்து சேர்ந்து விட்டான். அந்தப் பெண்கள் கூடலையி லிருந்து ஒரேவகைப் பூக்களை இறைத்ததுபோல் பஸ்ஸை விட்டு இறங்கி மரநிழலில் புல்வெளியில் எம்பிக் குதித்து விளையாடச் சென்றார்கள்.

பஸ்ஸை உள்ளே நிறுத்தி ஹாண்ட் ப்ரேக் போட்டதும் ராமலிங்கம் வந்து ''அண்ணே! உங்களை பிரின்சிபால் அம்மா கூப்பிட்டு அனுப்பிச்சாங்க'' என்றான்.

குமாரசுவாமி உடனே தன் சட்டையை இழுத்து விட்டுக் கொண்டு தொப்பியைச் சீராக்கிக் கொண்டு பள்ளியின் பிரதான கட்டடத்தை அடைந்து மாடிக்குச் சென்றான்.

பிரின்ஸிபாலின் அறை வாசலில் தயங்கினான். இந்திரா காந்தியின் படமும் பள்ளி கோக்கோ விளை யாட்டில் வென்ற ஷீல்டும் தெரிந்தன. ப்யூன் ''குமாரசாமி வந்திருக்கிறான்'' என்று உள்ளே சொன்னது காதில் விழுந்தது. வெளியே வந்து ''போங்க உள்ளே'' என்றான்.

பிரின்ஸிபாலுடன் டென்த் ஸ்டாண்டர்ட் லீலா அம்மாவும் உட்கார்ந்திருந்தார்கள். ''வா குமாரசுவாமி'' என்றாள் பிரின்ஸிபால்.

''கூப்பிட்டீங்களா அம்மா?''

''மிஸ் டிகாஸ்டா! குமாரசுவாமி பர்ஸனல் ஃபைலைக் கொண்டு வாருங்கள். உட்கார் குமாரசுவாமி''

''இருக்கட்டுங்க.''

''பரவாயில்லை உட்காருப்பா!''

''இருக்கட்டுங்க. உட்கார்ந்தா பேச வராது எனக்கு!'' பிரின்ஸிபால் சிரித்தாள் என் வயது கூட இருக்காது.

ஃபைலைப் புரட்டினாள். ''லெட் மி ஸீ. நீ வந்து இந்த ஸ்கூல்லே சேர்ந்தது...''

''நவம்பர் 18, 1947-ங்க!''

''நல்ல ஞாபகசக்தி உனக்கு... குமாரசவாமி இன்னிக்கு என்ன தேதி?''

எதிரே காலண்டரைப் பார்த்து ''நவம்பர் பதினெட்டு'' என்றான்.

''நவம்பர் பதினெட்டு 1972!''

''ஆமாங்க!'' என்றான்.

''இன்றோடு நீ இந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து இருபத்தி ஐந்து வருஷம் முடிகிறது.

''ஆமாங்க! என்னை நிறுத்திவிடப் போறீங்களா?''

''சேச்சே! இல்லே!''

''1947லே க்ளீனரா சேர்ந்தேங்க. அப்ப ஒரு டாட்ஜ் வண்டி இருந்தது. ஏகப்பட்ட ஆயில்குடிக்கும். உங்களுக்கு முன்னாலே மூணு பிரின்ஸிபாலைப் பார்த்திருக்கிறேன். அப்பவும் ஒரு லேலேண்ட் செகண் ஹாண்ட் வாங்கினாங்க. அஞ்சு வருஷம் க்ளீனரா இருந்தேன். அப்புறம் இருபது வருஷம் டிரைவர். ஆமாம்! இருபத்தி அஞ்சு வருஷம் ஓடிப்போச்சுங்க!''

''நீதான் இந்தப் பள்ளிக்கூடத்திலே பழைய ஆசாமி! நீ இருபத்தி அஞ்சு வருஷம் சர்வீஸ் செய்ததற்கு,

மேனேஜ்மென்ட்...லீலா. அந்தப் பெட்டியை எடுங்க... இந்தக் கடிகாரத்தை உனக்குப் பரிசா கொடுக்கச் சொல்லி இருக்காங்க... அப்புறம் இருநூறு ரூபா பணமும் கொடுக்கச் சொல்லி இருக்காங்க!''

''என்னங்க இதெல்லாம்...''

''வாங்கிக்க குமாரசுவாமி!''

''இதெல்லாம் வேண்டாங்க எனக்கு. எனக்கு பணமே கடிகாரமோ தேவையில்லை. எங்கிட்ட சுமாரா பணம் இருக்குச் சேத்து வச்சது. கெடிகாரம் எனக்கு இங்கே இருக்குதுங்க'' என்று நெற்றியைத் தட்டிக்காட்டினான்

''பிரின்ஸிபால் சிரித்து, பரவாயில்லை, வாங்கிக்க'' என்றாள்.

''இல்லீங்க, தயக்கமா இருக்கு. கடிகாரம் வேணா வாங்கிக்கறேன். பணம் வேண்டாங்க!''

''குமாரசுவாமி! உனக்கு எத்தனை பிள்ளைகள்?''

''எனக்குக் கல்யாணம் ஆகலிங்க!''

''அப்படியா! ஏன்?''

''இதைப்பத்தி நினைக்கலேங்க! அவ்வளவுதான்.''

''எல்லாம் நானே சமைச்சுக்கிட்டு கொடுக்கிற சம்பளத்திலே பாதியை பாங்கிலே போட்டுகிட்டு... ஆபீசிலே யூனிஃபாரம் கொடுத்துடறீங்க. பிராந்தியச் செய்திகள் கேக்கறதுக்கு மட்டும் ஒரு டிரான்சிஸ்டர் வாங்கிக்கிட்டேன். அதான் என் சொத்து. ரெண்டு மூணு அலுமினியப் பாத்திரங்கள், முருகன்! அவ்வளவுதான். இந்த இருநூறு ரூபாயை வெச்சுக்குங்க யாராவது ஏழைப் பிள்ளைங்களுக்குப் படிக்க வைக்கலாம்.''

''இந்தப் பள்ளிக்கூடத்தில் ஏழைப்பிள்ளைங்க கிடையாதே? இருபத்தி அஞ்சு வருஷம்...ஒருவிபத்துக் கிடையாது. ஒருநாள் லேட்டாக வந்தது கிடையாது! ஒரு நாள்

லீவ் எடுத்தது கிடையாது. ஏன், வருஷாந்திர லீவு எல்லாம் எக்ஸ்பைர் ஆகிக்கொண்டு வருகிறது தெரியுமா?''

''லீவு எதுக்குங்க. லீவு எடுத்துக்கிட்டு எனக்குப் போறதுக்கு எடம் கிடையாது...''

''இந்தா, இதைக் கட்டிக்கொள்!''

குமாரசுவாமி வெட்கத்துடன் அந்தப் புத்தம் புதிய கடிகாரத்தைக் கட்டிக்கொண்டான். பிரின்ஸிபாலுடன் லீலா அம்மாவும் மெலிதாகக் கை தட்டினார்கள்.

''ரொம்ப நன்றிங்க. வணக்கங்க, நன்றிங்க!'' தணிந்து தணிந்து குமாரசுவாமி வெளியே வந்தான்.

பிரின்ஸிபால் ''இவன் மாதிரி பிரஜைகள் நம் நாட்டுக்கு நிறையத் தேவை'' என்றாள் ஆங்கிலத்தில். லீலா அம்மாள் ஆமோதித்தாள்.

வெளியே வந்த குமாரசுவாமியின் கடிகாரத்தை முதலில் ப்யூன் முத்து ஆராய்ந்தான். ''நல்லா இருக்குங்க ஓடுதுங்க'' என்றான்.

கீழே க்ளீனர் கோபால் மாலையுடன் காத்திருந்தான்.

''குமாரசுவாமிக்கு ஜே!'' என்றான் மற்ற ப்யூன்களும் வாட்டர் பாய்களும் மரத்தடியில் சேர்ந்து கொண்டார்கள்.

முத்து : ''ரூபாயை வேண்டாம்னுட்டாருடா!''

''அண்ணன் நிறைய சேர்த்து வைச்சிருக்காருடா, குமாரசுவாமி அண்ணே! எத்தனை ஆயிரம் வெச்சிருக்கீங்க எட்டாயிரமா?''

''ஒன்பதாயிரத்து தொண்ணூற்று எட்டு...'' என்று குமாரசுவாமியின் ஞாபகத்தில் வந்தது.

''அண்ணே! இருபத்தி அஞ்சு வருஷம் முடிச்சுட்டீங்க. பள்ளிக்கூடத்திலே கடிகாரம் கொடுத்தாங்க. எங்களுக்கு ஒரு ப்ார்ட்டி...''

''புகாரிக்குப் போகலாம் வாங்க!''

''கோழி சாப்பிடலாம்.முட்டைக்கறி சாப்பிடலாம்''.

''அப்புறம் கொஞ்சம் தண்ணி.''

''சே, அவரு கோக்கோகோலாகூட சாப்பிட்ட தில்லடா. அதைச் சாப்பிட்டாலே மயக்கம் வந்துரும் அவருக்கு! சுத்த சைவம்டா!''

''அண்ணே! உங்களை ஒண்ணே ஒண்ணு ரொம்ப நாளா கேக்கணும்னு ஆசை.''

''என்னடா!'' என்றான் குமாரசுவாமி புதிய கவனத்துடன்.

''நீங்க ஏன் கல்யாணமே பண்ணிக்கலே?''

திடீரென்று எல்லோரும் மௌனமாக அவன் பதிலுக்குக் காத்திருந்தார்கள்.

''பண்ணிக்கலே. அவ்வளவுதான்!''

''ஏதாவது பொண்ணு துரோகம் பண்ணிவிட்டாளா?''

''சேச்சே! அதுக்கெல்லாம் எனக்கு டயமில்லடா. டீஸலையே கட்டிக்கொண்டு அழுதேன்!''

''அப்படின்னா நீங்க பொம்பளையைத் தொட்டதே இல்லையா?''

''சே!என்ன கேள்வி கேக்கறாண்டா அந்த வேம்பன்.''

''கேக்கட்டுண்டா! வேம்பா, எதுக்குடா இப்படிக் கேக்கறே?''

''இல்லிங்க நாங்கள்ளாம் சாதாரண மனுசங்க அப்பப்போ ஆசை இருக்கும். பெண்டாட்டி மேலே பாய்வோம், இல்லை போவோம். அந்த மாதிரி இத்தனை வயசு வரைக்கும் ஒரு தடவை ,ஒரிரு தடவைகூட சித்த அப்படி...ஜாலியாப் போய்ட்டு வருவோம். அப்படின்னு தோணவே இல்லையா? தப்பாக் கேட்டுட்டேன்னா மன்னிச்சுக்குங்க அண்ணே!''

குமாரசுவாமி சிரித்தான்

''சிரிக்கிறாரு! என்னவோ விளையாடி இருக்காரு...''

''இல்லைடா! அப்படி எல்லாம் நடந்ததே இல்லை! நான் கொஞ்சம் வேறு மாதிரிடா! நான் கொஞ்சம் தனி! '

மணி அடித்தது.

''போய் வேலையைப் பாருங்கடா! சும்மா மனசில விசித்திரமா கற்பனை பண்ணிக்காதீங்க...!''

குமாரசுவாமி பள்ளியின் ஆபீஸ் கட்டிடத்தை நோக்கி நடந்தான்.

''ரைட்டர் ஸார்...பாங்குக்கு போக வேண்டாம்?''

ரைட்டர் தன் கைக் கெடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு ''குமாரசுவாமியா? வா. பணம் வாங்கிக்க மாட்டேன்னிட்டியாமே?''

''பணம் எதுக்கு ஸார்?''

''ஆமா. உனக்கு குழந்தையா குட்டியா... பணம் உனக்கு அவசியமில்லதான். எங்கே வாட்சைக் காமி. எத்தனை இருக்கும்? பத்து நூத்தம்பது ரூபா இருக்கும். எனக்குப் பதினைஞ்சு வருஷ சர்வீஸ், எதுக்கு இன்னும் பத்து வருஷம் காத்திருக்க வேண்டும். வானை எடுத்துக் கொண்டு வா. எனக்கு இன்னும் ரெண்டு. மூணு வெளச்சர் எண்டர் பண்ணணும்...''

அவன் போனதும் பாக்கியசாலி! புத்திசாலி! கல்யாணம் பண்ணிக்கலே. உத்தமன்'' என்றார்.

ரைட்டருடன் பாங்கிற்குச் சென்று பாங்க் வாசலில் காத்துக் கொண்டிருக்கும்போது குமாரசுவாமி துணியை எடுத்து வானை சுத்தமாகத் துடைத்தான். விண்ட் ஷீல்டின் ஓரத்தில் தேய்த்துத் தேய்த்துத் துடைத்தான்.

ரைட்டர் பையுடன் திரும்பி வந்து, இப்படியே ஐ.சி, எச். வழியே திரும்பிப் போய்டலாம். எனக்குக் கொஞ்சம் காப்பிக் கொட்டை வாங்கிக்கணும்'' என்றார்.

குமாரசுவாமி மறுத்து விட்டான். ரைட்டர் முணு முணுத்தார்...

குமாரசுவாமி பள்ளிக்குத் திரும்பியதும், மறுபடி பஸ்ஸை எடுத்துக் கொண்டு ஸர்வீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றான்.

அவனே கம்ப்ரெஸ்ஸரை இயக்கி தண்ணீர் ஹோஸைச் செலுத்தி பஸ்ஸை துப்புரவாக அலம்பினான். க்ரீஸ் போடுவதையும் டயர்களின் காற்றழுத்தத்தைச் சரி பார்ப்பதையும் ஒவ்வொன்றையும் கண்காணித்தான்.

திரும்ப அவன் பள்ளிக்கு வரும்போது பள்ளி முடிவதற்குச் சரியாக பதினைந்து நிமிஷம் இருந்தது. புதிய அலம்பலில் பஸ் பளபளத்தது.

குமாரசுவாமி தன் கைக்கெடிகாரத்தைப் பார்த்துக் கொண்டான். மிகப் புதிய தோல் பட்டை. மிகப் புதிய முகம் மிகப் புதிய முட்கள் பழையவனுக்குப் புதிய காலம் புதிய சமயம்.

அந்தப் பெண்கள் மறுபடி சிரித்தனர், மறுபடி ஜன்னல் ஸீட்டுக்காகச் சண்டை போட்டுக் கொண்டார்கள். தத்தம் "காமிக்"களைப் பிரித்துக் கொண்டார்கள்.

அந்தப் பெண்களைத் திரும்பக் கொண்டு விட்டு மறுபடி பள்ளிக்கு வந்து நாடக ஒத்திகை நடக்கும் வகுப்பறையின் வாசலில் காத்திருந்தபோது இருட்டி விட்டது.

உள்ளே பியானோ ஒலி கேட்டது; ஆங்கில சம்பாஷணை கேட்டது; ஒன்று சேர முயற்சித்த இளம் குரல்கள் சிரிப்பு! அதட்டல்! "ஜம்ப்! ஒன்—டு—ஜம்ப்..." பியோனோவின் "டங் டங்", களுக்கு ஏற்ப அந்தப் பெண்கள் ஒருவரை ஒருவர் சரி பார்த்துக் கொண்டு குதித்தார்கள்...

பத்துப் பெண்களையும் பி. டி. டீச்சர் அம்மாவையும் ஏற்றிக் கொண்டு மறுபடி பஸ்ஸைக் கிளப்பி அவர்களை

ஒவ்வொருவராக அவரவர்கள் இல்லத்தருகில் விட்டுவிட்டுக் கடைசியாக எஞ்சி இருந்த அந்தப் பெண்ணைக்கொண்டு விடுவதற்காக என்.எஸ். காலனி நோக்கி அவன் செல்லும் போது மணி எட்டு இருபது.

''ரிஹர்ஸல் ஆச்சா?'' என்றான் குமாரசுவாமி

''ஆச்சு'' என்ற அந்தப்பெண் படம் போட்ட சின்னப் புத்தகத்தைப் பிரித்துக் கொண்டாள்.

''நீ டிராமாவிலே என்ன வேஷம் போடுகிறாய்?''

''ம்?''

''டிராமாவிலே என்ன வேஷம் உனக்கு?''

''ஏன்ஜெல். எட்டு ஏன்ஜெல்களிலே நானும் ஒருத்தி எல்லாம் வெள்ளை. வெள்ளை கவுன், தலையிலே வெள்ளைப்பூ, வெள்ளை இறக்கை...அந்தமாதிரி ஃப்ளாப் பண்ணவேண்டும்.''

சிரித்துக் கொண்டு மானசீக இறக்கைகளை அடித்துக் கொண்டாள் அந்தப்பெண். மறுபடி தன் புத்தகத்தில் ஆழ்ந்தாள்.

எதிரே தன்னந்தனியாக ரோடு நீண்டது. தூரத்தில் காலனி விளக்குகள் தெரிந்தன.

பஸ் காலனிக்குச் செல்லவில்லை.

இடதுபக்கம் பிரியும் மண்பாதையில பஸ் திரும்பியது. அந்த இருளில் வளைந்து நெளிந்து வழக்கமில்லாத மிக வேகத்தில் சென்று கொண்டிருந்தது.



# 10

# வீடு

அண்ணா வீட்டை விற்கப் போகிறானாம். வக்கீல் எழுதிஇருக்கிறார். என் மகத்தானஅண்ணன் சூறையாடிச் செலவழித்துக் கடன்மேல் கடன்வாங்கி எல்லாவற்றையும் அழித்தபிறகு அது ஒன்றுதான் பாக்கி இருந்தது. அதையும் விற்கப் போகிறானாம். இல்லாவிட்டால் கோர்ட்டில் அட்டாச் பண்ணி விடுவார்களாம்...

இங்கே ஆயிரம்மைலில் இருந்து கொண்டு'வேண்டாம் வேண்டாம்' என்று சாடை காட்ட முடியுமா? கத்த முடியுமா? என் கணவருக்கு விளக்க முடியுமா? என்ன செய்யப் போகிறேன்...!

கணவருக்கு டெலிபோன் செய்தேன். அவர் லேசில் கிடைத்து விடுவாரா? ஜாயிண்ட் செகரட்ரி—டி.ஃ.பென்ஸ் மினிஸ்ட்ரி! முதலில் பி.ஏ. எடுப்பான். ''அப்பா, நான் அவருடைய தாலி கட்டிய பெண்டாட்டி'' என்று சொல்ல வேண்டும். சொன்னேன்.

''ரூமில் இருக்கிறாரா, பார்க்கிறேன்.''

மௌனம்.

''ஸாரி மிஸஸ் ஷங்கர்! அவர் கான்.ஃ.பரன்ஸில் இருக்கிறார்.''

''அவர் வந்ததும் உடனே எனக்கு வீட்டுக்கு டெலிபோன் செய்யச் சொல்கிறீர்களா?''

''ஜல் டு தட் மிஸஸ் ஷங்கர்.''

பாழாய்ப் போன கான்ஃபரன்ஸ்! வெறும் வெட்டிப் பேச்சும் காப்பியும்! என் வீட்டை விற்கப் போகிறான்! என்ன செய்வது? மேலும் கீழும் அலைந்தேன். ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். பார்க்கில் சின்னப்பையன் கள் பாப்கார்ன் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். என் வீடு விலை போகிறது: பாப்கார்ன் சாப்பிடுகிறார்கள்! எத்தனை நேரம். எத்தனை நேரம் டெலிபோனைப் பார்த்துக் கொண்டிருப்பது? அடித்துத் தொலையேன், கறுப்புப் பிசாசே...அடித்தது.

''என்ன சித்ரா?'' அவர்தான்— 'வெற்றி' என்று பெரிய எழுத்தில் எழுதியிருக்கும் குரலுடன்.

''உடனே வாருங்களேன். வீட்டுக்கு வாருங்களேன். நான் மெட்ராஸ் போக வேண்டும்.''

''எதற்கு?''

''அண்ணா வீட்டை விற்கப் போகிறானாம்.''

''எந்த வீடு?''

''எந்த வீடு? இதென்ன கேள்வி? எத்தனை வீடு இருக்கிறது? அண்ணா வீட்டை விற்கப் போகிறானாம்.''

''ஸோ?''

''ஸோ என்ன, ஸோ! பாழாய்ப் போன மனிதரே, ஏர்கண்டிஷன்ரூமில் உட்கார்ந்துகொண்டு சிகரெட்டைப் புகைத்துக்கொண்டு 'ஸோவாம்...?''

''விற்பதைத் தடுத்து நிறுத்த வேண்டும்.''

''சித்ரா! உனக்கு மூச்சு வாங்குகிறது. ஒரு டம்ளர் தண்ணீர் குடித்துவிட்டு வா அப்புறம் பேசு!''

''விளையாடாதீர்கள்.''

"சித்ரா, நிதானமாகச் சொல், என்ன செய்யவேண்டும் எப்படி நிறுத்த வேண்டும்?"

"பணம் கொடுத்து."

"எத்தனை பணம்?"

"எனக்குத் தெரியாது. முதலில் விற்பதைத் தடுக்க வேண்டும். தந்தி அடியுங்கள். டிரங்கால் போடுங்கள்... என்னவாவது செய்யுங்கள்."

"இன் அதர் வேர்ட்ஸ் உன் அண்ணாவின் கடனை எல்லாம் நான் அடைக்க வேண்டும். அப்படித்தானே?"

"அப்படித்தான்."

"எங்கே பணம் இருக்கிறது? அவனுக்கு எவ்வளவு கடன் இருக்கும் தெரியுமா? ஐம்பதாயிரத்துக்கு மேல். அவ்வளவு ஏது நம்மிடம்?"

"இருக்கிறது. எனக்குத் தெரியும். அவருக்கு சொத்தே லட்சத்துக்கு இருக்கிறது..."

"மேலும் அப்படி நாம் ரிஸ்க் எடுத்துக் கொள்ள லாமா?"

"உன் அண்ணா விவகாரங்களில் எவ்வளவு சிக்கல் இருக்குமோ?"

'பேசாமல் பணத்தைக் கொடுத்து விட்டு அந்த வீட்டை நம் பேரில் எழுதி வாங்கிக் கொண்டு விடலாம். பணம் போகாது. வீடு கிடைக்குமே!"

"உனக்கு ஒரு வீடு வேண்டும். அவ்வளவுதானே?",

"எனக்கு அந்த வீடு வேண்டும்?"

"என்ன அது ஸ்பெஷல்?"

"அப்படித்தான்."

"இது ஒரு பதிலா சித்ரா? அந்த வீடு ஒரு ஜங்க். பழங்காலத்து வீடு. மேலும் அதை மீட்டுகிறது அவ்வளவு

சுலபமான காரியம் இல்லை. சிக்கல் நிறைய இருக்கும். உன் அண்ணா பிதுரார்ஜிதமாக அடைந்த சொத்து. அதை டிரான்ஸ்ஃபர் பண்ண முடியுமோ என்னவோ?''

''உங்களுக்கு அந்த வீடு ஜங்க். எனக்கு அது என் அம்மா அப்பா...என் குடும்ப ரத்தம்.''

''என்ன உளறுகிறாய்? வீடாவது, ரத்தமாவது! பைத்தியக்காரத்தனமான புத்தகத்தை எல்லாம் படித்து விட்டு...''

''உங்களுடன் சாமர்த்தியப் பேச்சுப் பேச என்னால் முடியாது.''

''பின் என்ன செய்ய வேண்டும்?''

''தந்தியாவது அடியுங்கள் அண்ணாவுக்கு.''

''என்ன தந்தி?''

''தம்புராத் தந்தி! ஏன் அப்படி என் மன அலைச்சலை அறியாமல் இழுத்து இழுத்துப் பேசிக் கொண்டு போகிறீர்கள்? உங்களால் இதையாவது செய்ய முடியுமா? எனக்கு ஒரு டிக்கெட் வாங்கிக் கொடுங்கள். குமாரசுவாமியையும் கூட அனுப்புங்கள். நான் வனஜா வீட்டில் போய்த் தங்குகிறேன். (அவர் தங்கை) அண்ணாவிடம் போய் மன்றாடிக் கேட்கிறேன். எப்படியாவது விற்காமல் சிலருக்கு வழி பண்ணுகிறேன். நீங்களும்தான் சந்திகர் போகப் போகிறீர்கள். தடுத்து நிறுத்தப் பார்க்கிறேன்''

''அதை நிறுத்தப் பணம் ஒன்றால்தான் முடியும்.''

''பணம் நான் தருகிறேன்.''

''உன்னிடம் ஏது பணம்?''

''பணம் நான் தரலாம்.''

''என்ன பெண்ணே, அப்படிப் பேசுகிறாயே? நான் தான் சொன்னேனே அதில் சிக்கல் நிறைய இருக்கிறது என்று?''

''டெலிபோனில் அழ எனக்கு விருப்பமில்லை.''

''எதற்காக அழ வேண்டும்? அந்தக் குப்பை வீட்டுக்காகவா? தொலைகிறது போ! நான் கட்டித் தருகிறேன் உனக்குத் தாஜ்மகால்போல.''

எனக்கு அவரிடம் அப்படிக் கோபம் வந்தது...உலகத்து அளவு.

''கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பார். நீ போனால் உன் அண்ணன் என்னை மதிக்கப் போகிறானா? போன வருஷம் கடன் கேட்டான். தரவில்லை என்று எப்படியெல்லாம் பேசிவிட்டுப் போனான்! அவனைப் பற்றித்தான் உனக்குத் தெரியுமே...''

''உங்களுக்கு எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. நீங்கள் அந்த வீட்டை ஒரு நாள் இரண்டு நாள் தான் பார்த்திருக்கிறீர்கள். எனக்கு அந்த வீடு வேறு. என் அம்மா அப்பா ஞாபகத்துக்கு—என் பிறப்புக்கும் என் சந்ததிக்கும் தொடர்பாக இருக்கிற ஒரே ஒரு சங்கிலி அது. அதுவும் போய்விட்டால் எனக்கும் அந்த நாட்களுக்கும் தொடர்பு பூரா போய்விடும்.''

''அந்த வீட்டில் என்னதான் இருக்கிறது?''

''ஞாபகங்கள்.''

''பா! ஞாபகங்களை ரூபாய் கொடுத்து வாங்க வேண்டுமா?''

''ப்ளீஸ்! இந்தக் கேள்வியெல்லாம் இப்பொழுது வேண்டாம். என் மனம் ரொம்ப அல்லல்படுகிறது. தயவு செய்து என்னை அங்கே போகவிடுங்கள்...தடுத்து நிறுத்த முடியாவிட்டாலும் வீட்டைக் கடைசித் தடவையாகப் பார்த்து விட்டாவது வருகிறேன்.''

''வீட்டைப் பார்க்க ரூபாய் செலவழித்துக் கொண்டு...''

''ரூபாய்...ரூபாய்! நீங்கள் கொடுக்க வேண்டாம். என் அம்மா எனக்கு எத்தனை நகைகள் பண்ணிப் போட்டிருக்கிறாள்...''

''ஈஸி ஈஸி! அனுப்புகிறேன்.''

''உடனே டிக்கெட் வாங்குங்கள்.''

''வாங்குகிறேன். கோபம் இல்லையே?''

''நிறையக் கோபம்...''

டெலிபோனை வைத்ததும் மார்பு படபடத்தது. என் கணவருக்கு அவர் மட்டும்தான் புத்திசாலி. ஐ ஏ ஏ எஸ்! ஜாயிண்ட் செக்ரட்ரி. இவர் ஒரு நாள் ஆபீஸ் போகாவிட்டால் அரசாங்கம் கவிழ்ந்து விடும்.

அவருடைய உலகத்திற்கு என்னைக் கொத்திக் கொண்டு, சென்றவர். மாம்பலத்து வீட்டில்தான் என்னைப் பெண் பார்க்க வந்தார். மூக்குக் கண்ணாடி வழியாகப் பார்த்தார். ''டஸ் ஷி ஸிங்?'' என்றார் ஆர்மோனியப் பெட்டி இல்லாமல் பாடினேன் அப்புறம் வீணையைக் கொண்டு வந்து உட்கார்த்தி வைத்தார்கள். வாசித்தேன். முதலில் நமஸ்காரம், கடைசியாக நமஸ்காரம்

அவர் அம்மா என்னை ஒரு அறைக்குள் அழைத்துச் சென்று என் தலை மயிர்ப் பின்னலைச் சற்று இழுத்துப் பார்த்தாள். (கூந்தல் நிஜம்தானா?) சிரிக்க வைத்துப் பல்லெல்லாம் பார்த்தார்கள். என் வைரங்களைத் தொட்டுப் பார்த்தார்கள். நான் அப்பொழுது அழகாக இருந்தேன். என் அம்மா இருந்தாள் அப்போது என் அப்பா விட்டு வைத்துப் போன சொத்து மிச்சமிருந்தது. பெரிய வீடு, நிலபுலன்கள்...

குதிரை வாங்குகிறதுபோல் என்னை வாங்கிக்கொண்டு சென்றார்கள் அவர் குணம் எப்படி என் குணம் எப்படி... ம்ஹூம்! இந்த வித்தியாசங்கள் எல்லாம் கல்யாணம் ஆன பிறபாடு அவர்களே தீர்த்துக் கொள்ளட்டும். இருட்டில் வைரங்கள் ஜொலித்தால் மட்டும் போதும். வேதனைகள் ஏமாற்றங்கள் எல்லாம் ஜொலித்தால்...இவற்றைப் பற்றி எல்லாம் என்ன கவலை?

என் கணவர் உலகம் வேறு. அவருடைய போலி சிநேகிதர்களுடன் நுனிநாக்கில் இங்கிலீஷ் பேச வேண்டும் (கல்யாணமான புதிதில் என் அக்ஸெண்ட் சரியாக இல்லை என்று ஒரு பார்ஸிக்காரி எனக்கு ட்யூஷன்!) கார் ஓட்ட வேண்டும். பார்டிகளில் கிளாஸில் திரவங்கள் ததும்ப வேண்டும் கேட்டபோது மறுக்காமல் தரவேண்டும். எனக்கு விருப்பமா இல்லையா? அந்தப் பேச்சே இல்லையே!

என் கணவரைப் பற்றி நான் இப்படிச்சொல்கிறேனே என்று ஆச்சரியப்படலாம். நான் மனசில் இருப்பதைத்தான் சொல்கிறேன் எனக்கென்று தனி ஆசைகள், தனிக் குணங்கள் இருக்கலாம் என்று அவர் கவலைப் படுவதாகத் தெரியவில்லை நான் சித்ரா இல்லை. மிஸஸ் ஷங்கர்! பெண்ணில்லை. மனைவி. மேஜை, நாற்காலி. ஃப்ரிஜ், குக்கிங் ரேஞ்ச், மனைவி, அழகான பர்னிச்சர், அவர் நாட்டைப் பரிபாலனம் பண்ணுகிறவர். டெலிபோன் அவரைக்கூப்பிட்டுக்கொண்டே இருக்கும். டெபுடேஷனில் போவார். டெலிகேஷனில் போய் ரோம் நகரத்திலிருந்து வர்ணக் கார்டு அனுப்புவார்: ''விஷ் யு வர் ஹியர்!''

நான் வீட்டில் இருந்துகொண்டு அவர் சுற்றுலாவின் அட்டவணையை நண்பர்களிடம் பெருமையாகச்சொல்லிக் கொள்ள வேண்டும். உலகப் படத்தில் விரலால் தொடர வேண்டும். இன்று பாரீஸ் போய்விட்டு நாளைக்கு ஜினிவா ஜினிவாவில் இரண்டு நாள் அப்புறம் தாஷ்கெண்ட்...

இரை தேடிக்கொண்டு வரும் ஆண் சிங்கம் போல் டேப்ரிகார்டர், ஸ்டீரியோ, டிரான்ஸிஸ்டர், பாயர் மிக்ஸி என்று சேகரித்துக்கொண்டு வருவார் நான் ஏர்கண்டிஷன்ட் குகையை விட்டு வெளிவராத சோம்பேறிப்பெண் சிங்கம்! குழந்தையா? ''டு லேர ஏர்லி மை டார்லிங் சித்ரா!'' மனைவி இல்லை. லவ் மெஷின்.

எனக்கு எவ்வளவு சின்னச் சின்ன ஆசைகள். செருப்புப் போட்டுக் கொள்ளாமல் சன்னமாக மணலில் நடக்க வேண்டும் தெருவிலே விற்கிற 'ஆலு டிக்கி'யை வாங்கிச் சாப்பிட வேண்டும். நோட் புத்தகத்தில் சின்னச் சின்னதாகப் பாட்டுக்கள் எழுதவேண்டும். அப்புறம் அந்த ஆசை? அதைப் பற்றி என்ன இப்ப? இப்பொழுது என் வீடு மாற்றப் போவததை நிறுத்த வேண்டும். அது தான் தற்போதைய பரிபூரண ஆசை வெறி...!

பிடிவாதம் பிடித்து த்யிலேறி இரண்டு நாள் நிம்மதி இல்லாத பிரயாணம் செய்து சென்னைக்கு வந்து விட்டேன். குமாரசுவாமி தாட் கிளாஸிலிருந்து பயபக்தி யுடன் வந்து ''எங்கேம்மா? கிரிஜா அம்மா வீட்டுக்கா?'' என்றான்.

''இல்லை, குமாரசுவாமி. நேராக என் அண்ணா வீட்டுக்குப் போக வேண்டும்.''

''அய்யா நேரா உங்களை...கிரிஜா அம்மா வீட்டுக்கு...''

''அய்யாவை மற. இது அம்மா ஊர். அம்மா சொல்படி நடந்தாகணும்.''

''சரியம்மா.

டாக்ஸி ஏறித் தியாகராய நகருக்குச் செல்கையில் என் மனம் அலைந்தது. அண்ணா என்னை லட்சியம் பண்ண மாட்டான்! 'போன வருஷம் உன் வீட்டில் வந்து தொங்கினேனே, அப்ப ஹெல்ப் பண்ணியிருந்தா இது நடந்திருக்காதே' என்று சொல்லப்போகிறான். அதற்கு என்ன பதில் சொல்லப் போகிறேன்? ''நீங்கள் எல்லாம் பணக்காரர்கள். நான் ஏழை'' என்று தனிப்படுத்திப் பேசுவான், ''அண்ணா, எனக்குச் சுதந்திரம் இல்லையடா'' என்று சொன்னால் நம்புவானா? அப்புறம் மன்னியை எப்படி நேராகப் பார்க்கப் போகிறேன்? அந்த மூன்று குழந்தைகளையும்?... டாக்ஸியை நிறுத்தி மூன்று பிஸ்கட் பாக்கெட்டுகள் வாங்கிக் கொண்டேன்.

''மனுஷனே முழுகுகிறான்! வீட்டைக் காப்பாற்ற வந்து விட்டாள்!''

''அண்ணா! அப்படி இல்லையடா! என்னை உனக்குத் தெரியாதா? நாம் எல்லோரும் சின்ன வயசில் விளையாட வில்லையா? நான், நீ, அவன்—அவன் பெயர் என்ன?—ராஜு—எல்லாரும் ஊஞ்சலில் ஆடவில்லையா? என்னைத் தெரியாதா?''

''நீ எப்பவாவது கண்ணெடுத்துப் பார்த்தாயா எங்கள் பக்கம்?வீடு போகிறது என்றுமட்டும் வருகிறாயே! போன தடவை நான் டைபாய்டில் படுத்துக் கொண் டிருந்த போது ஒரு கார்டு எழுதினாயா?''

''எனக்கு அப்போது தெரியவே தெரியாதேடா! அப்புறம் லலிதா வந்து சொன்னபோதுதான் தெரியும். அண்ணா நான் புகுந்த இடத்துச் சூழ்நிலை வேறு விதமானது என்று எப்படி உனக்கு விளங்க வைக்கப் போகிறேன்? பய மாயிருக்கிறதே!''

''வீடு ஏலம் போகிறதாம். வந்து விட்டாள்!''

பயமாயிருக்கிறதே...?

தியேட்டர் தாண்டி எங்கள் தெருவில் திரும்பியது டாக்ஸி.

''லெஃப்டப்பா!''

எங்கள் தெரு! இதோ, இன்னும் ஒரு ஃபர்லாங் எங்கள் வீட்டுக்கு...

மெள்ள நெருங்கியது. பயமாயிருக்கிறதே!

இதோ என் வீடு!... என் வீடு...

''நிறுத்தப்பா.''

எவ்வளவு பெரிய வீடு! என் வீடு! எத்தனை வருஷம் கழித்துப் பார்க்கிறேன்!

என்ன இது!... வாசலில் இருந்த வெராந்தாவில் செங்கல் தடுப்புகள். போர்டு 'லட்சுமி கமர்ஷியல் இன்ஸ்டிட்யூட்—பெண்களுக்குத் தனி கிளாஸ்,' அப்புறம், ஒரு டீக்கடை. என் வீட்டின் முகம் எங்கே? வாசல் எங்கே?

''குமாரசுவாமி, உள்ளே போய்ப் பார்.''

என்னை எல்லோரும் கவனித்தார்கள். எவ்வளவு அன்னிய முகங்கள். கமர்ஷியல் இன்ஸ்டிட்யூட்டில் டைப் ரைட்டர் என் இதயம்போல வெடித்துக்கொண்டிருந்தது... பெண்ணே! சுறுசுறுப்பாக டைப் அடி. கல்யாணம் செய்து கொள்ளாதே!

குமாரசுவாமி வந்தான். ''அவங்க இல்லீங்களாமே.'' ஒருவன் வெளியில் வந்தான்.

''யாரு வேணும் நிங்களுக்கு?''

''இந்த வீட்டுச்சொந்தக்காரக் கேசவன். ஜி.கேசவன்.''

''அயாள் போயி!''

''என்ன போயி? எங்கே போயி?''

''நீங்க யாரும்மா?''—மற்றொருவர்.

''நான் இந்த வீட்டுச் சொந்தக்காரர் கேசவனின் ஸிஸ்டர்.''

''கேசவன்? ஓ! கேசவன்!''

''அவர் மூணு நாள் முன்னாடியே இந்த இடத்தை விட்டுப் போயிட்டாரே!'' என்று ஒரு கீச்சுக் குரல்.

''அப்ப இந்த வீடு?''

''வித்தாச்சு. நம்ம சுகுணா பிக்சர்ஸ் ரெட்டி வாங்கி இருக்கிறார். நீங்க 'இளந்தலைவன்' பார்த்ததில்லை?''

''வித்தாச்சா? எப்ப?''

''விக்கலை. மூழ்கிப் போச்சு கடன்லேன்னு சொல்லிக் கிறாங்க.''

''இப்ப யார் இருக்காங்க இதிலே?''

''காலியாகத்தான் இருக்கு. வெள்ளையடிச்சுக்கிட்டிருக்காங்க'' என்றான் குமாரசுவாமி.

''குமாரசுவாமி, இரு'' என்றேன்.

''டாக்ஸி?''

''நிக்கட்டும்.''

நான் மெதுவாக உள்ளே நுழைந்தேன் பிரவாகமாக என்னுள் நினைவுகள், நினைவுகள்...

அழக்கூடாது. அழக்கூடாது. அடக்கிக்கொள். வீடு என்றால் வீடு!

வாசலில் இந்த இடத்தில் ஈட்டி ஈட்டியாக கேட் இருக்கும். இந்த வராண்டா நீளமாக இருக்கும். எத்தனை கிரிக்கெட் ஆடியிருக்கிறார்கள் இங்கே அண்ணாவும் அவன் சிநேகிதர்களும்...! திண்ணை! எத்தனை பேர் தண்டச் சாப்பாடு சாப்பிட்டு உறங்கி இருக்கிறார்கள் இதில்!... அப்புறம் ரேழி. அதில்தான் அப்பாவைக் கிடத்திவிட்டு எல்லோரும் அலறினார்கள். அப்புறம் பெரிய பாட்டி, அப்புறம் அம்மா! 'அம்மா!... அழக் கூடாது. ஜாயிண்ட் செக்ரட்ரி பெண்டாட்டி நீ!'

தயக்கத்துடன் மேலே நடந்தேன். காலியாக இருக்கிறது ஹால். ஒரே ஒரு ஏணியும் ஒரு டிஸ்டெம்பர் டப்பாவும் கிடக்கிறது. கூடம். இதில்நான் பரதநாட்டியம் பயின்றேன். 'தாம் தித்தாம் தை தத்தை...' சலங்கை ஒலிக்கிறது கோலாட்டக்கழி தரையில் எதிரொறிக்கிறது. பாட்டுவாத்தியார் வீணை வாத்தியார்-நாட்டியத்திற்காக அவள் பெயர் என்ன? சுகுண சுந்தரியா? வெற்றிலையின் மூதுகு நரம்பை எவ்வளவு சாமர்த்தியமாகக் கிழிப்பாள். அப்புறம் ஊஞ்சல். ஊஞ்சலின் கொக்கிகள் மட்டும் தெரிந்தன. என் மனத்தில் ஊஞ்சல் தொங்கியது. ஆடியது. நானும் கேசவனும் ரெயில் விளையாட்டு விளையாடினது

வலது பக்கம் சமையலறை ஐயருடன் ரகசிய ஒப்பந்தம், மோர் சாதத்துக்குச் சர்க்கரை. வருஷங்கள் பின் சென்று தித்தித்தது. இடது பக்கம் இருட்டறை. அதில் இருந்த இரும்புப் பெட்டி எங்கே? அதில் கைப்பிடியில் செதுக்கியிருந்த வெண்கல விரல்கள் எங்கே? பின்கூடம். தாழ்வாரம். கொட்டகை. அதில் கட்டியிருந்த வெள்ளைப் பசு. அதன் கண்களின் அழகு. அந்தப் புத்தம் புதிய கன்றுக்குட்டி—என் மானஸீகத்தில் அதன் 'ம்மா'...

மறுபடி கூடத்துக்கு வந்தேன். அந்தப் படங்கள் எல்லாம் எங்கே? என் அப்பா விசிறி மடிப்பும் பெரிய லாங் கோட்டும் கெடியாரச் சங்கிலியுமாக நிற்பாரே: அப்புறம் ரவி வர்மாவின் கேரளத்து அழகிகள், காளிங்க நர்த்தனம், ஒரே ஜரிகையால் அலங்கரிக்கப்பட்ட ராமர். அவர் பக்கத்துச் சீதையின் ரோஸ் கலர் புடைவை. பெரிய கண்ணாடி இருக்குமே? அதில் நான் பதினெட்டு வயதில் தெரிவேனே? அப்புறம் இந்த மூலையில்தான் அந்தப் பழைய காலத்து எச். எம் வி. கிராமபோன் இருக்கும். அதை திறந்தால் ஒரு தனிப்பட்ட வாசனையடிக்கும். பெட்டி பெட்டியாக ராமானுஜ அய்யங்காரின் ப்ளேட்டுகள் இருக்கும். 'க்ஷீர சாகர'வில் ஒரு கீறல் இருக்கும்.

கூடத்திலிருந்து மாடி அறைக்குச் செல்லும் மரப்படிகள் வழலழவென்று கைப்பிடி. "நீயெல்லாம் இந்த மாதிரி சறுக்கக்கூடாது. உனக்கு வயசாயிடுத்து" என்று அம்மாவின் குரல் அந்த ஹாலில் எதிரொலித்தது.

மாடி ஏறினேன். அப்பா எப்பொழுதோ ஜில்லா போர்ட் பிரசிடெண்டாக இருந்தபோது அவருக்கு அளித்த வரவேற்புப் பத்திரங்கள் இதோ இந்தப் பாழ் சுவரில்தான் ஃப்ரேம் போட்டு மாட்டி இருக்கும். தங்க எழுத்தில் பொய்கள். அப்புறம் இந்த அலமாரியில் புத்தகங்கள் இல்லை. 'ரத்தினபுரி ரகசியம்' எட்டு வால்யூம்கள்... குதிரைகள் வருகின்றன. அவர்கள் சந்தித்துக் கொள்கிறார்கள். கத்தியால் குத்திக் கொள்கிறார்கள். என் ரத்தம் உறைகிறது...ரங்கராஜுவின் 'ராஜாம்பாள்...'

இங்கே சோபா போட்டிருக்கும். இந்தக் கதவைத் திறந்தால் மொட்டை மாடிக்குப் போகும் படிகள் தெரியும். (திருட்டுத்தனமாகப்போவேனும்.) படிகள் தெரிந்தன.

மெதுவாக மொட்டை மாடிக்குச் சென்றேன். ஒரு தகர ஷெட் இருக்குமே...இன்னும் இருக்கிறதே. இதில்தான் கண்டா முண்டா சாமான்களை எல்லாம் போட்டிருக்கும். புதையல் போல அதில் வினோதங்களைத் தேடுவோமே நாங்கள் இருவரும். ஒளிந்து கொள்ள எவ்வளவு பத்திர மான இடம்! இந்த உலகத்தின் உண்மைகளிலிருந்து ஒளிந்து கொள்ள! ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ள!

இந்தத் தகர ஷெட்டுக்கும் காரைச் சுவருக்கும் இடையில் ஒரு ரகசிய இடம்! எங்கள் இரண்டு பேருக்கு மட்டும் தெரிந்த இடம்...மெதுவாக நான் இதை அணுக அணுக. என் வயதின் வருடங்கள் உதிர்ந்து அந்தப் பதினெட்டு வயதை மறுபடி அடைந்தேன். எவ்வளவு ரகசியமான ஒருவருக்கும் தெரியாத இடம்!—நானும் அவனும் மட்டும் தான்...நானும் ராஜுவும்...

''சித்ரா.''

''சொல்லு.''

''நான் உன்னைத் தொடலாமா?''

''தொடு.''

''இன்னும் தொடு...''

கால் ஒடிந்த சோபா, பெட்பான், உபயோகமில்லாத நாற்காலிகள், நடைவண்டி, தகர டின், எல்லாவற்றையும் விலக்கினேன். அந்தக் காரைச் சுவர் தெரிந்தது. அந்த எழுத்துக்களும் தெரிந்தன. அதில் அவன் அன்று ஆணியால் கிறுக்கினானே...இருக்கிறது.

''சித்ரா! நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்—ராஜு.'' இரண்டே இரண்டு வாசகர்களுக்கு மட்டும் ஒரு காவியம்.

அம்மா இல்லை; அப்பா இல்லை; அண்ணா எங்கிருக் கிறான்?—தெரியவில்லை. ராஜுவும் இல்லை. (தோற்றம் 4-5-1935. மறைவு 14-9-1956) அவன் சுவரில் எழுதின கிறுக்கலைப் பார்க்க ஆயிரம் மைல்கள் பிரயாணம் செய்து வந்து மொட்டை மாடியில் தனியாகச் சற்று நேரம் நின்று அழுதேன்.

●●

# 11

# இளநீர்

இந்தியா. ஏதோ ஓர் ஊர். ஒரு தினத்தின் முற்பகல்.

ஊரின் கடைகள் எல்லாம் மூடியிருந்தன. சுவர்களில் புதிய. கசியும் சிவப்பில் ''அவர்களைக் கொல்லுங்கள்'' என்று பெரிதாக, கோணலாக எழுதியிருந்தது. தெருவில் ஆரவாரம் எதுவும் இல்லை. அமானுஷ்யமான மௌனம். வீடுகளின் ஜன்னல்களும் கதவுகளும் மூடப்பட்டுக் கிறித்துவ வேதத்தின் ஜட்ஜ்மெண்ட் தினம்போல் இருந்தது.

ஒரு ஜீப் ஆரவாரித்துக் கொண்டு வந்தது. அதன் மேல் பாகம் திறந்திருந்தது. அதில் சுமார் பதினைந்துபேர் நின்று கொண்டும், ஸ்திரமற்று உட்கார்ந்து கொண்டும். அடைத்திருந்தார்கள். ஜீப்பை ஓட்டிய இளைஞனின் வாயில் சிகரெட் தொங்கியது, நெற்றியில் கைக்குட்டை கட்டியிருநதான் அனாவசிய வேகத்தில் அதை ஓட்டிக் கொண்டிருந்தான் அடிக்கடி கியர் மாற்றிக்கொண்டிருந் தான். சுருண்டு எழுந்த புகைப்படலம் பின் தொடரஆர்ப் ப்பாட்டமாகச் சென்று கொண்டிருந்த அந்த வண்டிக்கு இலக்கே எதுவும் இல்லைபோல் இருந்தது நேராகச் சென்று நின்று 'ரிவர்ஸ் அடித்து மூறுபடியும் ஆரவார மாகச்சென்றது. ஜீப்பின் நடுவில் ஒருவன் மூங்கில் கம்பில் ஒரு பெரிய கொடி பிடித்துக் கொண்டிருந்தான். கொடி காற்றில் துடித்து ஆடியது. அவன் அருகில் மற்றொருவன் கொஞ்சம் தலைவன் போல் இருந்தான். கையில் ஒரு

ஸ்ரை.ஃ.பிள் வைத்திருந்தான். அதை வானத்தை நோக்கிச் சில தடவைகள் சுட்டபோது மரங்களிலிருந்து பறவைகள் படபடத்துவிலகின.

அவர்கள் யாவரும் ஜால்ராக்களும், டப்பாக்களும், சலங்கைகளும், இரும்புச் சாதனங்களுமாக ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தார்கள் வெற்றி— வீரம்— ரத்தம்— போர் போன்ற வார்த்தைகள் உபயோகித்துக் கத்திக்கொண்டை கம்மிப் போயிருந்தார்கள்.

அவர்கள் அவ்வளவு தூரம தெருவில் சத்தமிட்டும் அந்தக் கதவுகள் திறக்கவில்லை. அந்த ஜனங்கள் வெளி வர வில்லை,

''சிறிய ஊர்'' என்றான் ஒருவன்.

''பயந்து கொண்டார்கள்'' என்றான் இன்னொருவன்

''ஃப்ரீஇண்டியா ரெஸ்டாரண்ட்! நிறுத்து ஜீப்பை! உடை கதவை'' என்றான் போர்டுகளைப் படித்துக் கொண்டு வந்தவன்.

சரமாரியாக அந்த ஃப்ரீ இண்டியா ரெஸ்டாரண் மூடிய கதவுகளின் மேல் கற்கள் விழுந்தன,

''நிறுத்தாதே போ! டவுன் பக்கம் விடு!'' என்றான் தலைவன்,

''டவுன் பச்கம்! டவுன் பக்கம்!'' என்று ஜால்ராவு டன் அவர்கள் பாடினார்கள்.

''நம் நாடு!''

''நமதே!''

''நம் மொழி!''

''நமதே!''

ஜீப் புதிய வழியில் சற்றுத் தூரம் சென்றது.

''இளநீர் ! இளநீர்!'' என்றார்கள்.

ஒரு மரத்தினடியில் ஒரு கிழவன் இளநீர்க் கொத்துகளை வைத்து இளைப்பாறிக் கொண்டிருந்தான்.

ஜீப் விசுக்கென்று நின்றது. அவர்கள் துள்ளிக் குதித்து வெளி வந்தார்கள். தூரப்பார்வை குறைந்த அந்தக் கிழவன் சலனமில்லாமல் உட்கார்ந்திருந்தான்.

''தாத்தா, இளநீர் விற்கிறாயா?'' என்று கேட்டான்,

கிழவன் நிமிர்ந்தான். ''ஏன்?'' என்றான்.

''தாத்தா, இன்றைக்கு எல்லாம் பூரா பந்த்! இன்றைக்கு ஒன்றும் விற்கக்கூடாது தெரியுமா?''

''தாத்தா! அரிவாள் இருக்கிறதா?'' என்றான் மற்றொருவன். அவர்கள் அந்த இளநீர்க் கொத்திலிருந்து ஆளுக்கு ஒன்று எடுத்துக் கொண்டார்கள்.

''விடுங்கள். நான் தருகிறேன்!'' என்றான் கிழவன்.

''தாத்தா, நீ கிழவன். இன்றைக்கு வியாபாரம் பண்ணாதே!''

''ஏன்?''

''நம் மாநிலமே இன்றைக்கு பந்த்! கதவடைப்பு! எதிர்ப்பு!''

''அப்படியா? என் இளநீரைக் கொடுத்து விடுங்கள். எனக்குக் கணக்குத் தெரியவில்லை!''

''தாத்தா! அரிவாள் இல்லையா?''

''காசு தருகிறாயா? அரிவாள் தருகிறேன்!''

''தா'' என்றான்.

''காசு?''

''தருகிறேன், தா!''

கிழவன் சாக்குக்கு அடியில் இருந்த அரிவாளை எடுத்துக் கொடுத்தான்.

அந்த இளைஞன் புன்னகையுடன், இளநீரை வெட்டவா தாத்தா, உன் தலையை வெட்டவா?'' என்றான்.

கிழவன் சிரித்தான்.

தலைவன் போலிருந்தவன் மற்றவர்களை கட்டுப் படுத்தினான். ''கிழவன்! மூத்தவன்! அவனுக்குத் தெரியாது, தாத்தா! உன் இளநீரைச் சுருட்டிக் கொள்!'' என்றான்.

''ஏன்?''

' யாரும் வாங்க மாட்டார்கள். எல்லாக் கதவுகளும் அடைத்திருக்கின்றன ''

''ஏன்?''

''நல்லவர்களை வேறு ஊர்களில் அடித்துக் கொல்கிறார்கள். அதற்கு எதிர்ப்பு!''

கிழவனுக்குப் புரியவில்லை. ''என் அரிவாளைக் கொடு என்றான்.

அரிவாளால் முகத்தைச் சொறிந்து கொண்டவன், அதை 'ஷிக்' என்று சுழற்றி வெட்டினான். ''இப்படித் தான் வெட்டவேண்டும்'' என்றான்.

''இல்லை; கைகள் போதும்!'' என்று ஒருவன் மான சீகமாகக் கழுத்தை நெறித்தான்.

''எல்லாவிதத்திலும் நமக்கு அநியாயம்! எண்ணிக்கையில் நம் பாஷை பேசுபவர்கள்தான் அதிகம். சென்ஸஸ் தப்பு! பொய். அப்புறம் அவர்கள் குண்டர்களை வைத்து நம்மை அடித்தால் நாம் அவர்களை அடிக்க எவ்வளவு நேரமாகும்!''

''அங்கேயே போய் விடலாம், ஒரு படை திரட்டிக் கொண்டு! நம் சகோதரர்கள், நம் சகோதரிகள் அங்கே பாதுகாப்பின்றியிருக்கிறார்கள்! அங்கே நாம் போக வேண்டும்... இன்னும் படை திரட்டி, இன்னும் ஆயுதம் சேர்த்து, இன்னும்...''

''கவர்ந்த ஸாரிகளைக் கொடிபோல் கட்டித் தெருவில் ஓடினார்களாம்!''

''தீர்த்துக் கட்ட வேண்டும். அதற்கு வேளை வந்து விட்டது!''

பிரேம் என்பவனும் அவன் இளம் மனைவியும் ஒரு மலைவாச ஸ்தலத்தில் சில தினங்கள் கழித்து விட்டுத் தன் சொந்த ஊர் திரும்பினார்கள். இருமாநிலங்களின் எல்லையில் இருந்த அந்த ஊரைக் காரில் கடந்தார்கள். ஐந்து மணி நேரம் தொடர்ந்து கார் ஓட்டியதால் அவன் களைத்திருந்தாலும், தன் புதிய மனைவியுடன் அவன் வெளி உலகை மறந்து கழித்த புதிய ஆச்சரியங்கள் நிறைந்த கணங்களின் ஞாபகத்தில் உற்சாகமாகவே இருந்தான். அவனுடன் அருகில் ஒட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த அவன் மனைவியின் தலை வகிட்டின் ஆரம்பத்தில் குங்குமம் இருந்தது பொம்மை போல் இருந்தாள். ஓரிரண்டு தடவையே கழிந்த கன்னியாக அந்த ஞாபகத்தில் அவன் உடம்பில் இலேசான பூரிப்பு இருந்தது. கன்னங்கள் நாணத்தினாலும் வெயிலினாலும் சிவந்திருந்தன.

''எல்லாக் கடைகளும் பூட்டியிருக்கின்றனவே ஏன்?'' என்றாள் அவள்.

''லஞ்ச் நேரமாக இருக்கலாம். இந்தப் பிரதேசத்து ஜனங்களே சோம்பேறிகள்'' என்றான். அவள் துடையின் மேல் கை வைத்தான். அவள் அந்தக் கையை ஒதுக்கி ஸ்டீரியங்கின்மேல் வைத்து ''அப்புறம்'' என்றாள்.

''பிரேம், அதோ பார்!'' என்றாள்.

தூரத்தில் மர நிழலில் ஒரு கிழவன் இளநீர்களைச் சேகரித்துக் கொண்டிருந்தான். அருகே சில இளைஞர்கள் இளநீர் குடித்துக்கொண்டு சிதறி நின்று கொண்டிருந்தார்கள்

''இளநீர் விற்கிறான். எனக்குத் தாகமாக இருக்கிறது'' என்றாள்.

''ஓகே! மேய்ஸாபின் கட்டளை!'' என்றான்.

தூரத்திலிருந்து அந்த ஃபியட் கார் வருவதை அவர்கள் பார்த்தார்கள். வேகம் குறைந்து அது நின்றது. அதன் முன் பக்கத்தில் ஓர் இளைஞனும் பெண்ணும் ஒட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

அந்த இளைஞன் நவீனமாக உடை அணிந்திருந்தான். அவன் காரின் கதவைத் திறந்துகொண்டு ஒரு தடவை தன் கைகளை உயர்த்திச் சோம்பல் முறித்துக் கொண்டான். பைக்குள் கைவிட்டு ஒர்ஸை எடுத்துக் கொண்டு கிழவன் அருகில் சென்றான் அவன் சலனத்தை அவர்கள் விடாமல் கவனித்தார்கள். அந்தப் பெண் அவர்களைப் பார்த்தாள். தலை கலைந்த இளைஞன் ஒருவன் அவளைப் பார்த்துப் 'பளீர்' என்று பற்கள் தெரியச் சிரிப்பதைப் பார்த்துத் தலை குனிந்து கொண்டாள்,

''கித்னா?'' என்றான் பிரேம்.

கிழவன் புரியாமல் ''என்ன?'' என்றான்.

''கித்னா? ஹெள மச்?'' என்று இளநீரைத் தொட்டுச் சாடை காட்டினான்.

கிழவன் அருகே நின்றவர்களைப் பார்த்தான். அவர்களில் தலையில் கர்ச்சீப் கட்டி இருந்தவன், ''வா'' என்று மற்றொருவனை அழைத்தான்.

அவர்கள் அவனை மெதுவாக நெருங்கினார்கள்.

''தாத்தா! இவனுக்கு இளநீர் கொடுக்காதே.''

அந்த இளைஞன், கிழவன் இருவரும் புரியாமல் விழித்தார்கள். மேலும் சிலர் அருகே வந்தார்கள்.

''நீ எந்த மாநிலத்தவன்?''

பிரேம் ஆங்கிலத்தில் ''மன்னிக்கவும். எனக்கு உங்கள் பாஷை தெரியாது, ஆங்கிலத்தில் பேசுங்கள்'' என்றான்.

''கோபால்! இவனை இங்கிலீஷில் கேள.''

கோபால் என்பவன் ஆங்கிலத்தில்''நீ எந்தமாநிலம்?'' என்றான்.

பிரேம், ''நான் ஓர் இந்தியன்'' என்றான்.

''பிரேம்! இளநீர் வேண்டாம் வா, போகலாம்''என்று கலவரத்துடன் கூப்பிட்டாள் அந்தப்பெண். அவள் எதிரே ஒருவன் நின்று கொண்டு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

பிரேமுக்கு அந்த இடத்தின் உஷ்ணம் திடீரென்று உதைத்தது. அந்த இளைஞர்களின் முகத்தில் விரோதம் தெரிந்தது அந்த ரை.·.பிள் தெரிந்தது. அந்த சலங்கைகள், அந்த ஜால்ரா, கம்புகள், அந்தக் கொடி...

''தேர் இஸ் நோ இண்டியா மிஸ்டர்!''

''இவன் அவர்களைச் சேர்ந்தவன்தான்!''

''ஆம், ஆம், ஆளைப் பார்த்தாலே தெரிகிறது.''

''பிரேம், ப்ளீஸ் வந்துவிடு! எனக்குப் பயமாக இருக்கிறது.''

இப்போது அவளை அவர்கள் சூழ்ந்திருந்தார்கள். அவள் சட்டையை அவர்களில் ஒருவன் தொட்டுத் துணியின் ஸன்னத்தைப் பரிசோதித்தான்.

''மீசை அழகாக வைத்திருக்கிறான் பார்?''

பிரேம் கிளம்ப முயற்சி செய்தான். அவர்களை நட்புடன் விலக்கினான். அவர்கள் வழிவிடவில்லை.

''விடுங்களேன், அவனை. இளநீர் குடிக்கட்டும்'' என்றான் கிழவன்.

கோபால், '''உங்கள் மாநிலத்தில் எங்கள் ஆசாமிகளைக் கொன்றிருக்கிறார்கள்'' என்றான்.

''எனக்கு மாநிலம் கிடையாது! எனக்கு மாநிலம் கிடையாது.''

''தப்பிக்கப் பார்க்கிறான்.''

''நீ பேப்பர் பார்க்கவில்லையா? இன்று இந்த மாநிலம் முழுவதும் கதவடைப்பு. என்ன தைரியம் இருந்தால் நீ கார் ஓட்டிச் செல்வாய்?''

''மன்னிக்கவும். சென்ற மூன்று தினங்களாக நான் பேப்பர் பார்க்கவில்லை.''

''உன் சொந்த ஊர் எது?''

''பிரேம்!''

பிரேம் சற்றுப் பயத்துடன் புன்னகை செய்தான். ''ப்ளீஸ், எனக்கு வழி விடுங்கள்.''

''இன்று கார் ஓட்டக் கூடாது.''

''சரி, சரி! நான் திரும்பச் சென்று ஓரத்தில் நிறுத்தி விடுகிறேன், எனக்கு வழி விடுங்கள்.

''காலைத் தொட்டு வணங்கு. வழி விடுகிறோம்.''

''பிரேம்! பிரேம்!''

''ஊரைச் சொல்ல மாட்டேன் என்கிறான் பார்!''

சிலர் அவன் மனைவிக்குமுன் கிராமிய நடனம் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

அவன் சற்றுத் தயங்கினான். சற்றுத்தான். அவன் நெற்றியில் வியர்வை முத்துக்கள் தெரிந்தன.

''என்ன செய்ய வேண்டும்?''

''வணங்கு!''

''சரி!''என்று அவன் குனிந்து தொட்டு நிமிர்ந்தான். ''திருப்திதானே!'' என்றான்.

''அவளையும் கும்பிடச் சொல்!''

''உன் மனைவியையும் வணங்கச் சொல்''

அவர்களில் சிலர் காரின் அருகே சென்று அதன் கதவைத் திறந்து, ''வா வெளியே!'' என்று அவளிடம் கத்தினார்கள்.

அவள் பயந்து சீட்டின் ஓரத்தில் ஒதுங்க முற்பட, அந்த ஜன்னல் வழியாக முகங்கள் தெரிந்து சிரித்தன. ஒருவன் அவளை மார்பில் தொட்டான்.

அப்போது அந்த இடத்தில் திடுமென எரிமலை வெடித்தது. அந்த இளைஞன் திமிறி விலக்கிக் கொண்டு, ''விடு அவளை!'' என்று கார் அருகே ஓடி அவர்களைத் தள்ளினான். அவர்கள் அவன் சட்டையைப் பிடித்தார்கள். அந்தப் பெண் பீதியுடன் கதவைத் திறந்து அவனை அனுமதிக்க முயற்சி செய்ய. அவனால் உள்ளே செல்ல முடியவில்லை. காரின் பானெட்டில் மூன்று பேர் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். இளைஞன் மிக மிக பலத்துடன் தன் காரில் நுழைந்து அதைக் கிளப்ப முயற்சி செய்தான், அவர்கள் அவனை முரட்டுத் தனமாகப் பிடித்து வெளியே இழுத்தார்கள். அவன் கண்மூடித்தனமாக'மடேர் மடேர்' என்று யாரையோ அடித்தான். அவன் உடைகள் கிழிந்தன. அவர்கள் அவன் மேல் பரவினார்கள்.

இப்போது அந்தச் சிக்கலான கூட்டத்தில் அந்த இளைஞனும் பெண்ணும் எங்கிருக்கிறார்கள் என்பது

தெரியவில்லை, காரின் உள்ளே இருந்த பொருட்கள் வெளியே சிதறின, A Marriage Manual, அந்தப் பிரதேசத்தின் ரோட் மாப், தண்ணீர் பாட்டில், வளையல்கள்...முத்து...

காரின் உச்சியில் ஒருவன் ஏறிக்கொண்டு நடன மாடினான். கார் சீராக ஆடியது.

பிரேமின் குரல் ஹீனமாகக் கேட்டது... "உங்களைப் போல் ஆயிரக்கணக்கில் அங்கே இருப்பதை நினைத்துப் பாருங்கள்...நான் ஓர் இந்தியன் நான்..."

"கோபால்! ரை. .பிளை எடு..."

அங்கிருந்து சற்றுத் தூரத்தில் சாலையில் சுதந்திர மாகத் திரிந்து கொண்டிருந்த வற்றிப்போன பசு ஒன்று வெடிச் சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தது.



# 12

# நகரம்

''பாண்டியர்களின் இரண்டாம் தலைநகரம் மதுரை. பண்டைய தேசப் படங்களில் 'மட்ரா' என்று காணப் படுவதும், ஆங்கிலத்தில் 'மதுரா' என்று சொல்லப்படு வதும், கிரேக்கர்களால் 'மெதோரரா' என்று குறிக்கப்படு வதும் இத் தமிழ் மதுரையேயாம்.

**—கால்டுவெல் ஒப்பிலக்கணம்**

சுவர்களில் ஓரடி உயர எழுத்துகளில் விளம்பரங்கள் விதவிதமாக ஒன்றி வாழ்ந்தன. நிஜாம் லேடி புகையிலை— ஆ கே. கட்பாடிகள் — எச்சரிக்கை! புரட்சித் தீ! சுவிசேஷக் கூட்டங்கள்-ஹாஜி மூசா ஜவுளிக் கடை (ஜவுளிக்கடல்), 30-9-73 அன்று கடவுளை நம்பாதவர்கள் சுமக்கப் போகும் தீச்சட்டிகள்.

மதுரையில் ஒரு சாதாரண தினம். எப்போதும்போல 'பைப்' அருகே குடங்கள் மனிதர்களுக்காக வரிசைத் தவம் இருந்தன. சின்னப் பையன்கள் 'டெட்டானஸ்' கவலை இன்றி மண்ணில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். பாண்டியன் போக்குவரத்துக் கழக பஸ்கள் தேசியம் கலந்த டீஸல் புகை பரப்பிக் கொண்டிருந்தன. விரைப் பான கால் சராய் சட்டை அணிந்த, ப்ரோட்டீன் போதா போலீஸ்காரர்கள் 'இங்கிட்டும் அங்கிட்டும்' செல்லும் வாகன—மானிட போக்குவரத்தைக் கட்டுப்படுத்திக்

கொண்டிருந்தார்கள். நகரின் மனித இயக்கம் ஒருவிதப் ப்ரௌனியன் இயக்கம்போல் இருந்தது. (பௌதிகம் தெரிந்தவர்களைக் கேட்கவும்) கதர் சட்டை அணிந்த, மெல்லிய, அதிக நீளமில்லாத ஊர்வலம் ஒன்று, சாலையின் இடதுபுறத்தில் அரசாங்கத்தை விலைவாசி உயர்வுக்காகத் திட்டிக் கொண்டே ஊர்ந்தது. செருப்பில்லாத டப்பாக் கட்டு ஜனங்கள் மீனாட்சி கோயிலின் ஸ்தம்பித்த கோபுரங்கள், வற்றிய வைகை, பாலம்...மதுரை!

நம் கதை இந்த நகரத்துக்கு இன்று வந்திருக்கும் ஒரு பெண்ணைப் பற்றியது. வள்ளியம்மாள் தன் மகள் பாப்பாத்தியுடன் மதுரை பெரியாஸ்பத்திரியில் ஓ பி டிபார்ட்மெண்டின் காரிடாரில் காத்திருந்தாள். முதல் தினம் பாப்பாத்திக்கு சுரம். கிராம ப்ரைமரி ஹெல்த் சென்ட்டரில் காட்டியதில் அந்த டாக்டர் பயங்காட்டி விட்டார். ''உடனே பெரிய ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போ'' என்றார். அதிகாலை பஸ் ஏறி...

பாப்பாத்தி ஸ்ட்ரெச்சரில் கிடந்தாள். அவளைச் சூழ்ந்து ஆறு டாக்டர்கள் இருந்தார்கள். பாப்பாத்திக்குப் பன்னிரண்டு வயது இருக்கும். இரண்டு மூக்கும் குத்தப் பட்டு ஏழைக் கண்ணாடிக் கற்கள் ஆஸ்பத்திரி வெளிச்சத் தில் பளிச்சிட்டன. நெற்றியில் விபூதிக் கீற்று. மார்புவரை போர்த்தப்பட்டுத் தெரிந்த கைகள் குச்சியாய் இருந்தன. பாப்பாத்தி ஜுரத் தூக்கத்தில் இருந்தாள். வாய் திறந்திருந்தது.

பெரிய டாக்டர் அவள் தலையைத் திருப்பிப் பார்த்தார். கண் இரப்பையைத் தூக்கிப் பார்த்தார். கன்னங்களை விரலால் அழுத்திப் பார்த்தார். விரல்களால் மண்டையோட்டை உணர்ந்து பார்த்தார். பெரியடாக்டர் மேல் நாட்டில் படித்தவர். போஸ்ட் கிராஜுவேட் வகுப்புகள் எடுப்பவர்கள், ப்ரொ.·.பஸர், அவரைச் சுற்றிலும் இருந்தவர்கள் அவரின் டாக்டர் மாணவர்கள்.

Acute case of Meningitis. Notice the..."

வள்ளியம்மாள் அந்தப் புரியாத சம்பாஷணையின் ஊடே தன் மகளையே ஏக்கத்துடன் நோக்கிக் கொண்டிருந்தாள். சுற்றிலும் இருந்தவர்கள் ஒவ்வொருவராக வந்து ஆஃப்தால் மாஸ்கோப் மூலம் அந்தப் பெண்ணின் கண்ணுக்குள்ளே பார்த்தார்கள். 'டார்ச்' அடித்து விழிகள் நகருகின்றனவா என்று சோதித்தார்கள். குறிப்புகள் எடுத்துக் கொண்டார்கள்.

பெரிய டாக்டர், "இவளை அட்மிட் பண்ணிடச் சொல்லுங்கள்" என்றாள்.

வள்ளியம்மாள் அவர்கள் முகங்களை மாற்றி மாற்றிப் பார்த்தாள். அவர்களில் ஒருவர், "இத பாரும்மா, இந்தப் பெண்ணை உடனே ஆஸ்பத்திரியில் சேர்க்கணும். அதோ அங்கே உக்கார்ந்திருக்காரே, அவர் கிட்ட போ. சீட்டு எங்கே?" என்றார்.

வள்ளியம்மாளிடம் சீட்டு இல்லை.

"சரி, அவரு கொடுப்பாரு. நீ வாய்யா இப்படி பெரியவரே"'

வள்ளியம்மாள் பெரிய டாக்டரைப் பார்த்து, "அய்யா, குளந்தைக்குச் சரியாய்டுங்களா?" என்றாள்.

"முதல்ல அட்மிட் பண்ணு. நாங்க பரர்த்துக்கறோம். டாக்டர் தனசேகரன். நானே இந்தக் கேஸைப் பார்க்கிறேன். ஸீ தட் ஷி இஸ் அட்மிட்டட். எனக்கு கிளாஸ் எடுக்கணும். போயிட்டு வந்ததும் பார்க்கிறேன்."

மற்றவர்கள் புடைசூழ அவர் ஒரு மந்திரிபோல் கிளம்பிச் சென்றார். டாக்டர் தனசேகரன் அங்கிருந்த சீனிவாசனிடம் சொல்லிவிட்டுப் பெரிய டாக்டர் பின்னால் விரைந்தார்.

சீனிவாசன் வள்ளியம்மாளைப் பார்த்தான்.

''இங்கே வாம்மா. உன் பேர் என்ன?... டேய் சாவு கிராக்கி! அந்த ரிஜிஸ்தரை எடுடா!''

''வள்ளியம்மாள்.''

''பேஷண்ட் பேரு?''

''அவரு இறந்து போய்ட்டாருங்க.''

சீனிவாசன் நிமிர்ந்தான்.

''பேஷண்டுன்னா நோயாளி...யாரைச் சேர்க்கணும்?

''என் மகளைங்க.''

''பேரு என்ன?''

''வள்ளியம்மாளுங்க.''

''என்ன சேட்டையா பண்றே? உன் மக பேர் என்ன?''

''பாப்பாத்தி.''

''பாப்பாத்தி!... அப்பாடா. இந்தா, இந்தச் சீட்டை எடுத்துக்கிட்டுப் போயி இப்படியே நேராப் போனின்னா அங்கே மாடிப்படிகிட்ட நாற்காலி போட்டுக்கிட்டு ஒருத்தர் உக்காந்திருப்பார். வருமானம் பாக்கறவரு, அவரு கிட்ட கொடு.''

''குழந்தைங்க?''

''குழந்தைக்கு ஒண்ணும் ஆவாது. அப்படியே படுத்திருக்கட்டும். கூட யாரும் வல்லையா? நீ போய் வா... விஜயரங்கம் யாருய்யா?''

வள்ளியம்மாளுக்குப் பாப்பாத்தியை விட்டுப் போவதில் இஷ்டமில்லை. அந்த க்யூ வரிசையும் அந்த வாசனையும் அவளுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. இறந்து போன தன் கணவன்மேல் கோபம் வந்தது.

அந்தச் சீட்டைக் கொண்டு அவள் எதிரே சென்றாள். நாற்காலி காலியாக இருந்தது. அதன் முதுகில் அழுக்கு இருந்தது. அருகே இருந்தவரிடம் சீட்டைக் காட்டினாள்.

அவர் எழுதிக்கொண்டே சீட்டை இடது கண்ணின் கால் பாகத்தால் பார்த்தார் ''இரும்மா, அவரு வரட்டும்'' என்று காலி நாற்காலியைக் காட்டினார். வள்ளியம்மாளுக்குத் திரும்பத் தன் மகளிடம் செல்ல ஆவல் ஏற்பட்டது. அவள் படிக்காத நெஞ்சில், காத்திருப்பதா—குழந்தையிடம் போவதா என்கிற பிரச்சனை உலகளவுக்கு விரிந்தது.

''ரொம்ப நேரமாவுங்களா?'' என்று கேட்கப் பயமாக இருந்தது அவளுக்கு.

வருமானம் மதிப்பிடுபவர் தன் மருமானை அட்மிட் பண்ணிவிட்டு மெதுவாக வந்தார். உட்கார்ந்தார். ஒரு சிட்டிகை பொடியை மூக்கில் மூன்று தடவை தொட்டுக் கொண்டு கர்ச்சீப்பைக் கயிறாகச் சுருட்டித் தேய்த்துக் கொண்டு சுறுசுறுப்பானார்.

''த பார், வரிசையா நிக்கணும். இப்படி ஈசப்பூச்சி மாதிரி வந்தீங்கன்னா என்ன செய்யறது?''

வள்ளியம்மாள் முப்பது நிமிஷம் காத்திருந்தபின் அவள் நீட்டிய சீட்டு அவளிடமிருந்து பிடுங்கப்பட்டது.

''டாக்டர் கிட்ட கையெழுத்து வாங்கிக்கிட்டு வா. டாக்டர் கையெழுத்தே இல்லையே அதிலே!''

''அதுக்கு எங்கிட்டுப் போவணும்?''

''எங்கேருந்து வந்தே?''

''மூனாண்டிப்பட்டிங்க!''

கிளார்க், ''ஊத்'' என்றார். சிரித்தார். ''மூனாண்டிப் பட்டி! இங்கே கொண்டா அந்தச் சீட்டை.''

சீட்டை மறுபடி கொடுத்தாள். அவர் அதை விசிறி போல் இப்படித் திருப்பினார்.

''உன் புருசனுக்கு என்ன வருமானம்?''

"புருசன் இல்லீங்க."

"உனக்கு என்ன வருமானம்?"

அவள் புரியாமல் விழித்தாள்.

"எத்தனை ரூபா மாசம் சம்பாதிப்பே?"

"அறுப்புக்குப் போனா நெல்லாக் கிடைக்கும், அப்புறம் கம்பு, கேவரகு!"

"ரூபா—கிடையாதா!...சரி சரி. தொண்ணூறு ரூபா போட்டு வெக்கறேன்."

"மாசங்களா?"

"பயப்படாதே. சார்ஜு பண்ணமாட்டாங்க. இந்தா இந்தச் சீட்டை எடுத்துக்கொண்டு இப்படியே நேராப் போய் இடது பக்கம்—பீச்சாங்கைப் பக்கம் திரும்பு. சுவத்திலே அம்பு அடையாளம் போட்டிருக்கும். 48-ஆம் நம்பர் ரூமுக்குப் போ."

வள்ளியம்மாள் அந்தச் சீட்டை இருகரங்களிலும் வாங்கிக் கொண்டாள். கிளார்க் கொடுத்த அடையாளங்கள் அவள் எளிய மனதை மேலும் குழப்பி இருக்க, காற்றில் விடுதலை அடைந்த காகிதம் போல் ஆஸ்பத்திரியில் அலைந்தாள். அவளுக்குப் படிக்க வராது. 48-ஆம் நம்பர் என்பது உடனே அவள் ஞாபகத்திலிருந்து விலகி இருந்தது. திரும்பிப் போய் அந்த கிளார்க்கை கேட்க அவளுக்கு அச்சமாக இருந்தது.

ஒரே ஸ்ட்ரெச்சரில் இரண்டு நோயாளிகள் உக்கார்ந்து கொண்டு, பாதி படுத்துக்கொண்டு மூக்கில் குழாய் செருகி இருக்க அவளைக் கடந்தார்கள். மற்றொரு வண்டியில் ஒரு பெரிய வாயகன்ற பாத்திரத்தில் சாம்பார் சாதம் நகர்ந்து கொண்டிருந்தது வெள்ளைக் குல்லாய்கள் தெரிந்தது. அலங்கரித்துக்கொண்டு, வெள்ளைக் கோட் அணிந்து கொண்டு, ஸ்டெதாஸ்கோப் மாலையிட்டு, பெண் டாக்டர்கள் சென்றார்கள். போலீஸ்காரர்கள், காபி டம்ளர்காரர்

கள், நர்ஸ்கள் எல்லோரும் எல்லாத் திசையிலும் நடந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அவசரத்தில் இருந்தார்கள். அவர்களை நிறுத்திக் கேட்க அவளுக்குப் பயமாக இருந்தது. என்ன கேட்பது என்றே அவளுக்குத் தெரியவில்லை. ஏதோ ஒரு அறையின் முன் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். அங்கே ஒரு ஆள் அவள் சீட்டுப் போலப் பல பழுப்புச் சீட்டுகளைச் சேகரித்துக் கொண்டிருந்தான். அவன் கையில் தன் சீட்டைக் கொடுத்தாள். அவன் அதைக் கவனமில்லாமல் வாங்கிக் கொண்டான். வெளியே பெஞ்சில் எல்லோரும் காத்திருந்தார்கள். வள்ளியம்மாளுக்குப் பாப்பாத்தியின் கவலை வந்தது. அந்தப் பெண் அங்கே தனியாக இருக்கிறாள் சீட்டுக்களைச் சேகரித்தவன் ஒவ்வொரு பெயராகக் கூப்பிட்டுக் கொண்டிருந்தான். கூப்பிட்டு வரிசையாக அவர்களை உட்கார வைத்தான். பாப்பாத்தியின் பெயர் வந்ததும் அந்தச் சீட்டைப் பார்த்து, ''இங்க கொண்டு வந்தியா! இந்தா,'' சீட்டைத் திருப்பிக் கொடுத்து, ''நேராப்போ,'' என்றான். வள்ளியம்மாள், ''அய்யா இடம் தெரியலிங்களே'' என்றாள். அவன் சற்று யோசித்து எதிரே சென்ற ஒருவனைத் தடுத்து நிறுத்தி, ''அமல்ராஜ், இந்த அம்மாளுக்கு நாற்பத்தி எட்டாம் நம்பரைக் காட்டுய்யா. இந்த ஆள் பின்னாடியே போ. இவர் அங்கேதான் போறார்'' என்றான்.

அவள் அமல்ராஜின் பின்னே ஓடவேண்டி இருந்தது.

அங்கே மற்றொரு பெஞ்சில் மற்றொரு கூட்டம் கூடி இருந்தது. அவள் சீட்டை ஒருவன் வாங்கிக்கொண்டான். வள்ளியம்மாளுக்கு ஒன்றும் சாப்பிடாததாலும், அந்த ஆஸ்பத்திரி வாசனையினாலும் கொஞ்சம் சுற்றியது.

அரை மணி கழித்து அவள் அழைக்கப்பட்டாள். அறையின் உள்ளே சென்றாள். எதிர் எதிராக இருவர் உட்கார்ந்து காகிதப் பென்சிலால் எழுதிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருத்தன் அவள் சீட்டைப் பார்த்தான். திருப்பிப் பார்த்தான். சாய்த்துப் பார்த்தான்.



''ஓ.பி.டிபார்ட்மெண்டிலிருந்து வரியா?''

இந்தக் கேள்விக்கு அவளால் பதில் சொல்லமுடியவில்லை.

''அட்மிட் பண்றதுக்கு எழுதி இருக்கு. இப்ப இடம் இல்லை. நாளைக் காலையிலே சரியா ஏழரை மணிக்கு வந்துடு. என்ன?''

''எங்கிட்டு வரதுங்க?''

''இங்கே வா. நேரா வா, என்ன?''

வள்ளியம்மாளுக்கு அந்த அறையைவிட்டு வெளியே வந்ததும் அவளுக்கு ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம் தனியாக விட்டு வந்துவிட்ட தன் மகள் பாப்பாத்தியின் கவலை மிகப் பெரியதாயிற்று. அவளுக்குத் திரும்பிப் போகும் வழி தெரியவில்லை. ஆஸ்பத்திரி அறைகள் யாவும் ஒன்றுபோல் இருந்தன. ஒரே ஆசாமி திரும்பத் திரும்ப பல்வேறு அறைகளில் உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றியது. ஒரு வார்டில் கையைக் காலைத் தூக்கி. கிட்டி வைத்துக் கட்டி பல பேர் படுத்திருந்தார்கள், ஒன்றில் சிறியகுழந்தைகள் வரிசையாக முகத்தைச் சுளித்து அழுது கொண்டிருந்தன மிஷின்களும், நோயாளிகளும், டாக்டர்களுமாக அவளுக்குத்திரும்பவும் வழிபுரியவில்லை.

''அம்மா'' என்று ஒரு பெண் டாக்டரைக் கூப்பிட்டு தான் புறப்பட்ட இடத்தின் அடையாளங்களைச் சொன்னாள். ''நிறைய டாக்டருங்க கூடிப் பேசிக்கிட்டாங்க. வருமானம் கேட்டாங்க, பணம் கொடுக்க வேண்டாம்னு சொன்னாங்க. எம் புள்ளையை அங்கிட்டு விட்டுட்டு வந்திருக்கேன் அம்மா!''

அவள் சொன்ன வழியில் சென்றாள். அங்கே கேட்டுக் கதவு பூட்டி இருந்தது. அப்போது அவளுக்கு பயம்

திகிலாக மாறியது. அவள் அழ ஆரம்பித்தாள். நட்ட நடுவில் நின்று கொண்டு அழுதாள். ஒரு ஆள் அவளை ஓரமாக ஒதுங்கி நின்று அழச் சொன்னான். அந்த இடத்தில் அவள் அழுவது அந்த இடத்து அஸெப்டிக் மணம்போல் எல்லோருக்கும் சகஜமாக இருந்திருக்க வேண்டும்.

பாப்பாத்தி! பாப்பாத்தி! உன்னை எங்கிட்டுப் பாப்பேன்? எங்கிட்டுப் போவேன்?'' என்று பேசிக் கொண்டே நடந்தாள். ஏதோ ஒரு பக்கம் வாசல் தெரிந்தது. ஆஸ்பத்திரியை விட்டு வெளியே செல்லும் வாசல். அதன் கேட்டைத் திறந்து வெளியே மட்டும் செல்ல விட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த வாசலைப் பார்த்த ஞாபகம் இருந்தது அவளுக்கு.

வெளியே வந்துவிட்டாள். அங்கிருந்துதான் தொலை தூரம் நடந்து மற்றொரு வாசலில் முதலில் உள் நுழைந்தது ஞாபகம் வந்தது. அந்தப் பக்கம் ஓடினாள். மற்றொரு வாயிலை அடைந்தாள். அந்த மரப்படிகள் ஞாபகம் வந்தது அதோ வருமானம் கேட்ட ஆசாமியின் நாற்காலி காலியாக இருக்கிறது. அங்கேதான்!

ஆனால் வாயில்தான் மூடப்பட்டிருந்தது. உள்ளே பாப்பாத்தி ஒரு ஓரத்தில் இன்னும் அந்த ஸ்ட்ரெச்சரில் கண்மூடிப் படுத்திருப்பது தெரிந்தது.

''அதோ! அய்யா, கொஞ்சம் கதவைத் திறவுங்க. எம்மவ அங்கே இருக்கு.''

''சரியா மூணு மணிக்கு வா. இப்ப எல்லாம் க்ளோஸ்.'' அவனிடம் பத்து நிமிஷம் மன்றாடினாள் அவன் பாஷை அவளுக்குப் புரியவில்லை. தமிழ்தான் அவன் கேட்டது. அவளுக்குப் புரியவில்லை. சில்லறையைக் கண்ணில் ஒத்திக்கொண்டு யாருக்கோ அவன் வழிவிட்டபோது அந்த வழியில் மீறிக்கொண்டு உள்ளே ஓடினாள். தன் மகளை வாரி அணைத்துக்கொண்டு தனியே பெஞ்சில் போய் உட்கார்ந்துகொண்டு அழுதாள்.

பெரிய டாக்டர் எம். டி, மாணவர்களுக்கு வகுப்பு எடுத்து முடிந்ததும் ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டு வார்டுக்குச் சென்றார். அவருக்குக் காலை பார்த்த மெனின்ஸைடிஸ் கேஸ் நன்றாக ஞாபகம் இருந்தது. B M J யில் சமீபத்தில் புதிய சில மருந்துகளைப் பற்றி அவர் படித்திருந்தார்.

''இன்னிக்குக் காலையிலே அட்மிட் பண்ணச் சொன்னேனே மெனின் ஜைடிஸ் கேஸ். பன்னிரண்டு வயசுப் பொண்ணு எங்கேய்யா?''

''இன்னிக்கு யாரும் அட்மிட் ஆகலையே டாக்டர்''

''என்னது? அட்மிட் ஆகலையா? நான் ஸ்பெஸிஃபிக்காகச் சொன்னேனே! தனசேகரன். உங்களுக்கு ஞாபகம் இல்லை?''

''இருக்கிறது டாக்டர்!''

''பால்! கொஞ்சம் போய் விசாரிச்சுட்டு வாங்க. அது எப்படி மிஸ் ஆகும்?''

பால் என்பவர் நேராகக் கீழே சென்று எதிர் எதிராக இருந்த கிளார்க்குகளிடம் விசாரித்தார்.

''எங்கேய்யா! அட்மிட் அட்மின்னு நீங்க பாட்டுக்கு எழுதிப்புடறீங்க. வார்டிலே நிக்க இடம் கிடையாது!''

''ஸ்வாமி! சீஃப் கேக்கறார்!''

''அவருக்குத் தெரிஞ்சவங்களா?''

''இருக்கலாம். எனக்கு என்ன தெரியும்!''

''பன்னண்டு வயசுப் பொண்ணு ஒண்ணும் நம்ப பக்கம் வரலை. வேற யாராவது வந்திருந்தாக்கூட எல்லாரையும் நாளைக்குக் காலை 7-30க்கு வரச்சொல்லிட்டேன். ராத்திரி ரெண்டு மூணு பெட் காலியாகும். எமர்ஜன்

ஸினைா முன்னாலேயே சொல்லணும்! இல்லை, பெரிய வருக்கு அதிலே இண்ட்ரஸ்ட் இருக்குன்னு ஒரு வார்த்தை! உறவுக்காரங்களா?''

வள்ளியம்மாளுக்கு மறுநாள் காலை 7-30 வரை தான் என்ன செய்யப் போகிறோம் என்பது தெரிய வில்லை. அவளுக்கு ஆஸ்பத்திரியின் சூழ்நிலை மிகவும் அச்சம் தந்தது. அவர்கள் தன்னைப் பெண்ணுடன் இருக்க அனுமதிப்பார்களா என்பது தெரியவில்லை. வள்ளியம்மாள் யோசித்தாள். தன் மகள் பாப்பாத்தியை அள்ளி அணைத்துக் கொண்டு மார்பின்மேல் சார்த்திக் கொண்டு, தலை தோளில் சாய, கைகால்கள் தொங்க ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தாள். மஞ்சள் நிற சைக்கிள் ரிக்ஷாவில் ஏறிக்கொண்டாள். அவனை பஸ் ஸ்டாண்டுக்குப் போகச் சொன்னாள்.

''வாட் நான்ஸென்ஸ்! நாளைக்குக் காலை ஏழரை மணியா! அதுக்குள்ள அந்தப் பெண் செத்துப் போய்டும்யா! டாக்டர் தனசேகரன் நீங்க ஓ. பி யிலே போய்ப் பாருங்க. அங்கேதான் இருக்கும்! இந்த ரெச்சட் வார்டிலே ஒரு பெட் காலி இல்லைன்னா நம்ம டிபார்ட் மெண்ட் வார்டிலே பெட் இருக்குது. கொடுக்கச் சொல் லுங்க! க்விக்!''

''டாக்டர்! அது ரிஸர்வ் பண்ணி வெச்சுருக்கு!''

''I don't care. I want that girl admitted now. Right now!''

பெரியவர் அம்மாதிரி இதுவரை இருந்ததில்லை. பயந்த டாக்டர் தனசேகரன், பால், மிராண்டா என்கிற தலைமை நர்ஸ் எல்லோரும் வள்ளியம்மாளைத் தேடி ஓ.பி. டிபார்ட்மெண்டுக்கு ஓடினார்கள்.

''வெறும் சுரம்தானே? பேசாமல் மூனாண்டிப் பட்டிக்கே போய்விடலாம். வைத்தியரிடம் காட்டி விடலாம் கிராம ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டாம். அந்த டாக்டர்தான் பயங்காட்டி மதுரைக்கு விரட்டினார். சரியாகப் போய்விடும். வெள்ளைக்கட்டி போட்டு விபூதி மந்திரித்து விடலாம்.'' சைக்கிள் ரிக்ஷா பஸ் நிலையத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது வள்ளியம்மாள், பாப்பாத்திக்குச் சரியாய்ப் போனால் வைதீஸ்வரன் கோவிலுக்கு இரண்டு கை நிறையக் காசு காணிக்கையாக அளிக்கிறேன்'' என்று வேண்டிக் கொண்டாள்.



# 13

# பார்வை

*பிருந்தாவன் எக்ஸ்பிரஸின் முதல் வகுப்பில் அன்று அதிகக் கூட்டம் இல்லை ரேஸ் எதிர்ப் பக்கம் நடக்கிறது. ஏரோப்ளேன் வகை சீட்டுகளில் இங்கொன்றும் அங்கொன்றுமாகத் தலைகள் தெரிந்தன. பொழுது போகாதவர்கள் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார் கள். இளைஞர்கள் ஹாட்லி சேஸ் நாவல் அணிந்து கொண்டு, முகத்தில் பெரிய முட்டை வடிவக் கண்ணாடி அணிந்து கொண்டு, எங்கெங்கே இளம் பெண்கள் உட்கார்ந்திருக்கிறார்கள் என்று 'சர்வே' செய்து கொண் டிருந்தார்கள். வண்டி அப்போதுதான் கிளம்பி இருந்தது. கண்டோன்மெண்ட் தாண்டியதும்தான் காப்பி, பிளாஸ்டிக் பைக்குள் ஜிலேபி, சாக்லெட், ஐஸ்கிரீம், மசால்வடை ராணுவம் கிளம்பும்.*

*நான் ரயிலில் புத்தகங்கள்படிப்பதில்லை.சென்னைக்கு ஐந்து மணிநேரம் இருந்தது. சும்மா மனிதர்களைப் பார்த்துக் கொண்டிருப்பது, கேட்டுக் கொண்டிருப்பது எனக்குப் பிடிக்கும். இன்று அதற்கு அதிக வாய்ப்பில்லை. பொழுது எப்படிச் செல்லப் போகிறது? கவலை— கண்டோன்மெண்ட் வண்டி நின்றது.*

*அருகில் இருக்கும் ஸீட்டில் வந்து உட்கார்ந்தவனை நான் சரியாகக் கவனிக்கவில்லை. வெளியே ஒரு வயதான*

ஆங்கிலோ இந்தியத் தம்பதியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். கிழவன் தன் 'ரோஸி'க்குக் கன்னத்தில் ஒரு ரப்பர் ஸ்டாம்ப் முத்தம் கொடுத்துவிட்டுச் சட்டென்று வண்டியில் ஏறிக் கொண்டான். அவள் மூக்கைச் சிந்திக் கொண்டு அதே கைக்குட்டையால் 'டாட்டா' காட்டினாள்.

''எத்தனைப்பா?''

''குடுங்க சாமி! போட்டுக் குடுங்க!''

''பெரியசாமி, இது எத்தனைடா? ஒரு ரூபாதானே?''

''ஆமாய்யா!''

''பக்கத்திலே ஆள் இருக்காங்க, இல்லை!''

''ஆமாய்யா!''

''வலது பக்கமா?''

''ஆமாய்யா!''

''நீ போய் உக்காரு! உன் சீட் எங்கே?''

''இதோ எதிர்த்தாப்பலேயே இருக்கு. கூட்டமே இல்லை''

எனக்கு அருகில் நிகழ்ந்த சம்பாஷணை புரியவில்லை. திரும்பினேன், என் அருகே ஒரு இளைஞன். எதிரே போர்ட்டர். ஓரத்தில் ஒரு ஒன்பது வயதுப் பையன்.

போர்ட்டர் ஒரு ரூபாயைச் சம்மதத்துடன் வாங்கிக் கொண்டு கண்ணில் ஒத்திக் கொண்டான். சலாம் போட்டு விட்டு ''நான் வரேன். பையா, ஐயாவைப் பார்த்து அனைச்சுட்டுப் போ'' என்று சொல்லிச் சென்றான். இளைஞனைப் பார்த்தேன். இருபத்து ஐந்து இருக்கலாம். கருப்புக் கண்ணாடி அணிந்திருந்தான். ஒரே திக்கில் பார்த்துக் கொண்டு தன் பர்ஸைப் பைக்குள் பத்திரமாக வைத்துக் கொண்டான். நல்ல ஷர்ட் அணிந்திருந்தான். சிவப்பாக இருந்தான். தலை மயிர் அளவாக வெட்டப்பட்டிருந்தது.

இளைஞன் கண் பார்வை இல்லாதவன். அவன் மெதுவாக, உத்தேசமாக, என் பக்கம் திரும்பி, "நீங்களும் மெட்ராஸ்தான் போறீங்களா?" என்றான். "ஆம்" என்றேன் "என் பெயர் கிருஷ்ணகுமார். நான் பார்வையில்லாதவன்" என்றான். சிரித்தான். இந்த அப்பட்டமான சுய அறிமுகம் என்னை வீழ்த்தியது. என்ன சொல்வது! 'ஐ ஆம் ஸோ ஸாரி!' என்பதா, 'அப்படியா!' என்பதா? தயங்கி என் பெயர் சொன்னேன்.

"சந்தோஷம்" என்று என் கையைக் கேட்டு வாங்கி அதைப் பற்றி அழுத்திக் குலுக்கினான்

'ஐந்து மணி நேரம் ஆகும்!" என்றான். அவன் குரல் உன்னதமாக இருந்தது. பாடத் தெரிந்தால் நன்றாகப் பாடுவான். அவனை நான் உன்னிப்பாகப் பார்த்தேன். கையில் கடிகாரம் எதற்காக? சுத்தமான உயர்தர உடைகள் அதிகம் பதியாத கால்கள். பணக்காரன். அவன் உட்கார்ந்த விதம் எதையுமே எதிர்பார்க்கவில்லை. தன்னைச் சுற்றி வாழ்க்கை கடந்து செல்லட்டும் என்கிற பாவத்திலிருந்தது வண்டி கிளம்பி வேகம் பிடித்துவிட்டது ஒரு அனாமத்தான ஸ்டேஷன் விர்ர் என்று ப்ளாராகச் சென்றது. அவனைக் கேள்விகள் கேட்க என் மனம் துடித்தது. சிறு டிபன் பட்டாளத்தின் முதல் ஆசாமி புறப்பட்டுவிட்டான். என் மூக்கருகே வேஃபர் பிஸ்கட் தோன்றி மறைந்தது. எதிரே அவனுடன் வந்திருந்த ஒன்பது வயதுப் பையன்—பெரியசாமியா?—மெத்தை சீட்டில் குற்ற உணர்ச்சியுடன் உட்கார்ந்திருந்தான். அவன் துவைத்த ஷர்ட்டில் சுருக்கங்கள் இருந்தன. பட்டன் இல்லாத இடம் ஒன்றில் ஒரு ஸேஃப்டி பின் குத்தி இருந்தது. வேலைக்காரப் பையன்.

இளைஞனே ஆரம்பித்தான். "நீங்கள் பெங்களூர் வாசியா?"

"ஆம், மூன்று வருஷம்!"

''எக்ஸ்கியூஸ் மீ. ஆம் ஐ டிஸ்டர்பிங் யூ?'' நல்ல உச்சரிப்பில் ஆங்கிலம்

''நாட் அட் ஆல்'' என்றேன்.

''நீங்கள் ஏதாவது படித்துக் கொண்டிருக்கலாம். நான் கொஞ்சம் அதிகம் பேசுவேன். பேச்சு ஒன்றுதான் எனக்கு...''

''புரிகிறது'' என்றேன். சொல்லியிருக்கக் கூடாதோ

''நீங்கள் நிறையப் பேசலாம். நான் நிறையக் கேட்கிறேன். என்னிடம் புத்தகங்கள் எதுவும் இல்லை. பொழுது போவதற்கு நல்ல கம்பெனி கிடைத்தது'' என்றேன்.

''கொஞ்சம் வித்தியாசமான கம்பெனி! இல்லையா? உங்களைப் பற்றிக் கொஞ்சம் சொல்லட்டுமா?''

''பார்டன்!''

''நான் உங்களைப் பார்க்கவில்லை. பார்க்க முடியாது. கையைக் குலுக்கினேன். உங்களைக் கும்பிட்டேன். உங்கள் கை மிருதுவாக இருந்தது உடல் வேலை செய்யும் ஆசாமியின் கையில்லை அது. நீங்கள் ஒரு ஆபீசில் வேலை செய்பவராக இருக்கலாம். உங்கள் குரல் உங்களுக்கு சுமார் முப்பத்து ஐந்து வயது என்று சொல்கிறது

''முழுவதும் சரி'' என்றேன். முப்பத்து எட்டாக இருந்தாலும் என்ன? கிட்டத்தட்ட வந்துவிட்டானே!

''அப்புறம் நீங்கள் சிகரெட் பிடிப்பீர்கள் என நினைக்கிறேன். உங்களருகில் மெலிதாக அந்த வாசனை இருக்கிறது.''

''ரிமார்க்கபிள்! நீங்கள் போலீஸில் இருக்கவேண்டும்.'' அவன் புன்னகைத்தான். ''துப்பறியும் நாயாகவா?''

''நான் உங்களைப்பற்றிஒன்றே ஒன்று சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்'' என்றான் சுவாரசியத்துடன்.

''நீங்கள் கண் தெரியாதவராக இருந்தாலும் அதைப் பற்றிப் பிறர் பரிதாபப்படுவதை விரும்பவில்லை.''

''எப்படிச் சொல்கிறீர்கள்?''

'அந்த போர்ட்டர் உங்கள் வேலைக்காரனிடம், 'பாத்து அளைச்சுக்கிட்டு போ ஐயாவை' என்று சொன்ன போது உங்கள் முகம் மாறியது.

அவன் மெல்ல, ''கரெட். நான் பரிதாபத்தை விரும்புவதில்லை'' என்றான்.

''உங்கள் ஊகத்துக்கு என் ஊகம் கீழானதுதான். பார்த்துச் சொல்வது, பார்க்காமற் சொல்வதைவிட சுலபம் இல்லையா?''

''நீங்கள் லாயரா?''

''இல்லை. இன்ஜினீயர். எலெக்ட்ரானிக்ஸ்.''

''எங்கே வேலை செய்கிறீர்கள்?''

''பாரத் எலெட்ரானிக்ஸ்.''

''அப்படியா! உங்கள் கம்பெனியில் ஒரு தமிழ் எழுத்தாளர் இருக்கிறார்.''

''தெரியும்...அவரை எனக்கும் கொஞ்சம் அந்தரங்கமாகவே தெரியும்.''

''நீங்கள்தானா?'? கெட்டிக்காரன்தான். கொஞ்சம் அந்தரங்கமாகவே தெரியும் என்று சொன்ன பாவத்திலிருந்து சடக்கென்று தாவி விட்டான்.

''ஆம்'' என்றேன், அவன் சற்று நேரம் மௌனமாக என் திக்கில் நிலைத்திருந்தான். அவன் என்னை மிகவும் பார்க்க விரும்புகிறானோ என்று தோன்றியது.

''உங்களைச் சந்தித்ததில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி, 'சந்தித்ததில்' கண் தெரிந்த உலகத்தின் வார்த்தை,

''நான் உங்களைத் தொடலாமா?''

எனக்குத் 'திக்' என்றது. அவன் கரம் மெதுவாக என் முகத்தருகே வந்து என் முகத்தை வருடியது. எனக்கு மயிர்க் கால்களைச் சிலிர்க்க வைத்தது.

''உங்கள் கதைகளை நான் படித்திருக்கிறேன். சில எனக்குப் பிடித்திருந்தன...சில குப்பைக் கதைகள்! யூ ஆர் கேபபிள் ஆஃப் ஸம் குட் ரைட்டிங்.''

''அப்படியா, நன்றி! எப்படிப் படித்தீர்கள்?''

அவன் முகம் சற்று மாறியது. ''மன்னிக்கவும். நான் படித்தேன் என்றால் படிக்கச் சொல்லிக் கேட்டேன் என்று பொருள். பார்த்தேன் என்றால் தொட்டேன் என்று பொருள். என் உலகம் முக்கால் உலகமல்லவா?''

''நீங்கள் கல்லூரி சென்றிருக்கிறீர்களா?''
''ஆம்...நான் எம். ஏ. படித்திருக்கிறேன்.''
''வெரி குட்.''

''ஜூன் மாதம் எட்டாம் தேதி என்னைப்பற்றி இண்டியன் எக்ஸ்பிரஸில் நான்கு வரிகள் வந்திருந்தனவே?

''அப்படியா?''

''எல்லாம் ஆச்சரியப்பட்டார்கள். எனக்கு மாலை எல்லாம் போட்டு கை தட்டினார்கள். பிஸ்கட் சாப்பிட்டார்கள்,''

''ஆச்சரியம்தான்.''

''ஆச்சரியம்தான் இல்லையா?'' அவன் குரலில் கொஞ்சம் ஏளனம்கூட இருந்ததோ?''

''பரிட்சை எப்படி எழுதினீர்கள்?''

''எனக்காக ஸ்பெஷலாக டிக்டேஷன் செய்வதற்காக ஒரு ஆள் அனுமதித்திருந்தார்கள். கேட்டுக் கேட்டே படித்தேன். கேட்டுக் கேட்டே பாஸ் பண்ணினேன்.''

''ரிமார்க்கபிள். எம். ஏ. என்ன பாடம்?''

''பொலிட்டிகல் ஸயன்ஸ்.''

''இனி என்ன பண்ணுவதாக உத்தேசம்?''

''இதுவரை ஏதாவது செய்தேனா என்ன, இனி என்ன செய்ய என்று யோசிக்க!''

''ஏன், இதுவரை எம். ஏ. படித்தீர்கள்...இனி?''

''இன்னும் கொஞ்சம் படிக்கலாம். அவ்வளவுதான். படித்தால் ஃபிலாலஜி...மொழிகள் பற்றிப் படிக்க ஆசை.. ஆனால் ஒரு விதத்தில் எனக்கு அலுத்துப்போய்விட்டது.''

''ஏன்?''

''இந்த எம். ஏ. எனக்கு கண் தெரிந்த உலகம் தந்த சலுகை. வகுப்பறையில் டேப் ரிகார்டர் அனுமதிக்கப் பட்டு எனக்காக எழுதும் முறை தனியாக அமைக்கப் பட்டு...இதெல்லாம் எதற்காக? இதோ ஒரு ஆச்சரியம்! பேப்பரில் போட்டு, மாலைபோட்டு. 'எல்லாரும் பாருங் கடா! பார்வை இல்லாதவன் எம் ஏ. பாஸ் பண்ணி இருக்கிறான்' என்று பார்வை உள்ளவர்களுக்கு உதார ணம் காட்ட ஒரு குரூரமான ஆச்சரியம். இரண்டு தலை ஆடு போல்...எம். ஏ பாஸ் செய்த குருடன்!''

அவன் சிரித்துக்கொண்டுதான் சொன்னான்.

''உங்கள் வார்த்தைகளில் வெறுப்பு இருக்கிறது.''

''வெறுப்பே இல்லை, உண்மை,'' அவன் நேராக உட்கார்ந்து கொண்டான். ''சார், நான் ஒரு பிறவிக் குருடன். பார்வை என்றால் என்ன என்றே எனக்குத் தெரியாது. நீங்க்ள் எழுத்தாளர். என் ஒரே ஒரு கேள்விக்குப் பதில் சொல்கிறீர்களா?''

''கேளுங்கள்.''

''வர்ணம் என்பது என்ன? எனக்கு வர்ணியுங்கள். கேட்கிறேன். வர்ணம் என்பது என்ன?''

நான் மௌனமாக இருந்தேன். என் மனதில் அலை அலையாக வார்த்தைகள் மோதின. எல்லாம் கண் தெரிந்த வார்த்தைகள்.

''சொல்லுங்கள்.''

''கொஞ்சம் யோசிக்க வேண்டும்.''

''நான் காத்திருக்கிறேன்'' என்றான். அதே புன்னகை மறுபடி!

பிறந்ததிலிருந்தே வானத்தைப் பார்த்திராதவனுக்கு, சாயங்கால சூரிய ஜாலத்தைப் பார்த்திராதவனுக்கு, பெண்களின் கண்களை, நெல் வயல்களின் பச்சைப் போர்வையை, மண்ணின் சிவப்பை-அழுக்கை-கருப்பை, இரத்தத்தை, மலர்களை எவையும் பார்த்திராதவனுக்கு எப்படிச் சொல்வது? பௌதிக சாஸ்திரம் வர்ணத்தை ஆங்ஸ்ட்ராம் யூனிட்களாகச் சொல்கிறது. அவன் மூளைக்குள் செத்துக்கிடக்கும் பார்வை நரம்புகளை உயிர்ப்பிக்க எண்களால், வார்த்தைகளால் முடியுமா? எப்படி முடியும்?

முயன்று பார்த்தேன்.

''உங்களுக்குச் சங்கீதம் பிடிக்குமா?''

''நிறைய.''

''ஏழு சுரங்கள் இருக்கின்றன, இல்லையா?''

''ஆம்.''

''வர்ணங்களும் ஒரு விதமான சங்கீதம்தான். கண்கள் வழியே உணரும் சங்கீதம் என்று வைத்துக்கொள்ளுங்கள். வயலட்-ஸ, இண்டிகோ-ரி, நீலம்-க, பச்சை-ம, மஞ்சள்-ப, ஆரஞ்ச்-த, சிவப்பு-நி இப்படி நீங்கள் யோசிக்கலாம். இப்போது நான் வெளியே, ஜன்னலுக்கு வெளியே பார்க்கையில் நான் பார்ப்பது மம...பபப...தத...நி...ம... நிமிர்ந்து வானத்தைப் பார்த்தால் ஒரு விசாலமான காந்தாரம்: சாயங்கால வேளைகளில் மேற்கே கொஞ்சம் நிஷாதம். தைவதம்.''

நான் அவன் முகத்தில் எதிரொலியைத் தேடினேன்.

''புதுவிதமாகச் சொல்கிறீர்கள். புரியவில்லை. முயற்சி செய்து பார்க்கிறேன். என் உலகத்திலிருந்து உங்கள் உலகை யோசித்துப் பாருங்கள் எனக்கு ரயில் என்பது ஒரு இரைச்சல். உட்கார்ந்து கொண்டால் ஆடும்—ஆட்டம்...ஒரு வகைக் குரல்களிலிருந்து மற்றொரு வகைக் குரல்களுக்குச் செல்லும் பிரயாணம். பெயிண்ட் வாசனை, சிகரெட் வாசனை, பூ வாசனை...''

''புரிகிறது.''

''எனக்குக் கனவுகள் குரல்கள். என் கடவுள் ஒரு இனிய குரல்.''

''இந்த வர்ணங்களும் வேறு குரல்கள்...''

''என் நண்பர்கள் என் விரல்களில் உஷ்ணம், சன்னமான, கடினமான தொடல்கள்...வாசனைகள்...''

''கிருஷ்ணகுமார், உங்களுக்குப் பார்வை இல்லாதிருந்தாலும், பார்வையுள்ள பலரைவிட, அதிகமாக 'பர்ஸப்ஷன்' இருக்கிறது! உங்களால் உங்கள் நினைவுகளைத் துல்லியமாக வருணிக்க முடிகிறது. இது ஒரு கிஃப்ட்தான்.''

''பார்வை இல்லாததற்கு ஒரு சிறிய நஷ்டஈடு.''

சற்று நேரம் வேறு விஷயங்கள் பற்றிப் பேசினோம். காட்பாடியில் நான் சற்று இறங்கி நடந்தேன். தள்ளு வண்டியில் ஸ்டான்லி கார்ட்னரும், சித்தர் பாடல்களும் புத்தகங்களாக அடுக்கி இருக்க, இரண்டு ஆரஞ்சு வாங்கினேன். பிளாட்பாரத்திலிருந்து என் ஜன்னல் தெரிந்தது. ஒரு குருட்டுப் பிச்சைக்காரன். ''ஐயா! கண் தெரியாதவனப்பா'' என்று ஜன்னல் ஜன்னலாகத் தடவிக்-

கொண்டே நடந்தான். அந்த இளைஞன் தன் பர்ஸி லிருந்து ரூபாய் நோட்டுக் காகிதத்தை எடுத்துக் குரல் வந்த திக்கில் தேடித் தகரக் குவளையை உணர்ந்து, அந்த நோட்டைத் திணித்து, ரூபா நோட்டுடா! ஜாக்கிரதையா புடிச்சு வெச்சிக்கோ'' என்றான். பிச்சைக்காரன் அவன் சந்ததிகளை வாழ்த்த, இளைஞன் அவன் கையைத் தொட்டு அமுக்கினான்.

காட்பாடியிலிருந்து சென்னைக்கு எண்பது மைலா? இந்த எண்பது மைலை என்னால் மறக்க முடியாது. கிருஷ்ணகுமார் தன்னைப்பற்றிப் பேசினான். மெதுவாக, தனக்கே சொல்லிக் கொளவது போல்!... பகுதிகள்:

''எனக்கு என்னவோ அம்மாவின் ஞாபகம் இருக் கிறது என்று பிடிவாதமாக நினைத்துக் கொண்டிருக் கிறேன். ஒரு மெத்தை போன்று சன்னமான பிரவகிக்கும் உஷ்ணமாக... அவள் நான் பிறந்தவுடன் செத்துப் போயிருக்கிறாள். அவளைப்பற்றி மறறவர் சொன்ன தைச் சேகரித்து வைத்திருக்கிறேன். புராண காலத்து அம்மா, பதிவிரதை! கணவனுக்குக் கால் அலம்பி விட்டவள்...வீசிறியவள்... பின் தூங்கி முன் எழும் டைப்...! வாழ்நாள் முழுதும் இரண்டு மூன்று அறை களையே பார்த்தவள்!...என் அப்பா,எனக்குச் சதா உடன் இருப்பதற்கு ஆயா ஒருத்தியை வைத்து என் மேல் தூசு படாமல் பார்த்து வளர்த்திருக்கிறார். அந்த ஆயா என்னைக் கிள்ளுவாள். அது ஞாபகம் இருக்கிறது. அவளிடம் பூண்டு வாசனை இருக்கும்...அப்பாவிடம் சானல் 22 வாசனை அடிக்கும். வேளைக்குச் சாப்பிட்டு இருக்கிறேன். குளித்திருக்கிறேன். தலை சீவிக்கொண்டு, பவுடர் போட்டுக் கொண்டு, புஷ்டியாக வளர்ந்திருக் கிறேன். மிகச் சீக்கிரம் நான் பேச ஆரம்பித்து விட்டே னாம். சீக்கிரமே! பார்வை இல்லாதவர்களுக்கென்றே பிரத்தியேகமான பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப்பட்டேன்.

ப்ரெய்ல் எழுத்தின் முதல் அறிமுகம். ஸிஸ்டர் கிளாரிஸ்ஸாவின் அஸெப்டிக் வாசனை. அவள் உடைகளின்

மொர மொரப்பான தன்மை. அவள் கரங்களின் பஞ்சு மென்மை...அதைவிட அவள் "கிருஷ்ணா" என்று சன்னமாக அழைக்கும் குரலின் மென்மை... உலகை முதலில் எனக்கு அறுதியிட்டுக் காட்டியவள்···சமீபத்தில் இருநூறு மைல் பிரயாணம் செய்து அந்தப் பள்ளிக்கூடத்துக்குச் சென்று ஸிஸ்டர் கிளாரிஸ்ஸாவைத் தேடினேன். ஸிஸ்டர் கிளாரிஸ்ஸா பரம பிதாவிடம் சென்றுவிட்டாளாம் அப்பா என் முன்னேற்றத்தில் ஒவ்வொரு படியிலும் உதவியிருக்கிறார். பள்ளி இறுதிப் பரிட்சைக்கு பிரத்யேகமாக எனக்குச் சந்தர்ப்பம் தர டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷனை எல்லாம் பார்த்துப், பேசி, உடன்பாடு பெற்று என்னை மேலும் கல்லூரியில் படிக்க வைத்து... காரில் அனுப்பி, திரும்பக் காரில் அழைத்து வந்து. டேப்ரிகார்டர் வாங்கிக் கொடுத்து, படித்துக் காட்டுவதற்கு ஏழைப் பையன் ஒருத்தனை நியமித்து, எனக்குச் சங்கீதத்தில் ஈடுபாடு ஏற்படுத்தி, சபாக் கச்சேரிகளுக்கு அனுப்பி... விரைவில் ஆர். கிருஷ்ணகுமார் எம், ஏ., மாஸ்டர் ஆப் ஆர்ட்ஸ்!

மாஸ்டர் ஆப் ப்ளடி ப்ளைண்ட் ஆர்ட்ஸ்.

Parasite regained!

என் அப்பா என்னைப் பார்த்துப் பூரிக்கிறார்! என்னை அமெரிக்காவுக்கு அனுப்ப ஆவலாக இருக்கிறார். எனக்குத்தான் விருப்பமில்லை. அமெரிக்கா என்பது என்ன? கடல் கடந்த வேறுவித வாசனைகள்? வேறுவிதக் குரல்கள். அப்பாவுக்கு நான் எல். எல். பி, படித்துவிட்டு கோர்ட்டுக்குப் போய் எல்லாருக்கும் சமமாக வாதாட வேண்டும் என்று விருப்பம். வாதாடினால் அவருடைய 'மிஷன்' வெற்றிகரமாக முடிந்துவிடும். பிராயச்சித்தம் கிடைத்துவிடும்... குறையோடு பிறந்தாலும் எந்தவிதக் குறையுமின்றி வளர்த்திருக்கிறார். அவர்கள் சொல்கிறார்கள், நான் கருப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டால் பார்க்க அழகாகக்கூட இருக்கிறேனாம், ஏதாவது பெண்

என்னைக் கல்யாணம் செய்ய முன் வந்தாலும் வருவாள்! செக்ஸ் என்பது என் விரல்களில் அவ்வப்போது கிடைத்த வடிவங்கள்! நான் கேட்டிருந்தால் அப்பா அதற்கும் ஏற்பாடு செய்திருப்பார். செல்ல அப்பா!

எனக்கு ஆச்சரியங்களின் இந்த முனையில் இருந்து அலுத்து விட்டது. எனக்கு அறிவு கிடைத்து விட்டது அது போதாதா? மகத்தான அறிவு!

என் வாழ்க்கை இதைவிட மோசமாக இருந்திருக் கலாம்! அந்தப் பிச்சைக்காரன் போல் பிளாட்பாரத்தில் உலவ வேண்டிய கதியை எனக்குக் கொடுக்கவில்லை பரமபிதா! அதற்காக நான் பணக்காரனுக்குக் குருட்டுப் பிள்ளையாகப் பிறந்ததில் ஒரு அரை அதிர்ஷ்டம் இருந் திருக்கிறது... என்ன சொல்கிறீர்கள்?''

நான். ''உங்கள் தந்தையின் தைரியத்தையும் இதில் பாராட்ட வேண்டும் உங்கள் தந்தைக்கும் நீங்கள் நன்றி சொல்ல வேண்டும்'' என்றேன்.

''எதற்கு? பணம் தந்ததற்கா?''

''இல்லை. உங்களுக்குக் கல்வி தந்ததற்கு உங்களை நார்மலாக வளர்த்ததற்கு. உங்களுக்கு அறிவு உலகத்திற்கு அனுமதி கொடுத்ததற்கு பிடிவாதமாக உங்களைப் படிக்க வைத்ததற்கு''

''சார்! என்னைப் படிக்க வைத்ததுதான் எனக்கு இந்த உலகில் கிடைத்த மகத்தான தண்டனை! என்னை அணில். ஆடு ஸ்டேஜிலே நிறுத்தி விட்டு வேளா வேளைக் குச் சோறு போட்டு நாற்காலியில் உட்கார வைத்திருக்க லாம் என் தந்தை. அது எனக்குச் சந்தோஷம் நிறைந்த வாழ்க்கையாகப் படுகிறது!''

''புரியவில்லை!''

''நான் படித்தேன். மெத்தப் படித்தேன். என்ன ஆயிற்று? அதன் விளைவு என்ன? கேள்விகள் பதிலே

கிடைக்காத கேள்விகள்! வர்ணம் என்பது என்ன? சூரியன் என்பது என்ன? வானம் என்பது என்ன? அழகு என்கிறீர்களே! என்ன சார் அது? எனக்கு எப்படிப் பதில் கிடைக்கும்? இதற்கெல்லாம் பதில் கிடைக்காவிட்டால் பரவாயில்லை. என்னுடைய அந்தரங்கமான முட்டாள்தனமான உலகில் சின்ன சின்ன பிரத்யேகப் பதில்களை அமைத்துக் கொள்ளலாம் நான். அமைத்துக் கொண்டிருக்கிறேன்... ஆனால்...ஆனால்...

''எனக்கு அறிவு ஏற்பட்டதால் படிப்பு கிடைக்காததால் கேட்ட ஒரு கேள்விக்குப் பதில், சரியான பதில். கிடைத்து விட்டது. நான் படிக்காதிருந்தால் இந்தக் கேள்வி கேட்டிருக்கவே மாட்டேன். கேட்டிருக்கவே தெரிந்திருக்காது. படித்ததால்தான் இதன் பதிலைத் துரத்திக் கொண்டு பழைய உறவினர்களைச் சந்தித்தேன் டாக்டர்களைப் பார்த்தேன். புத்தகங்களைப் படித்தேன். என் அம்மாவின் உறவினர்களை, சில பழைய வேலைக்காரர்களை, ஏன், நான் பெங்களூர் சென்றது கூடப் பதிலை துரத்திக் கொண்டு சென்ற என் ஆடிஸ்ஸியின் கடைசிப் பாகம்! பதிலைக் கண்டுபிடித்து விட்டேன்.''

''என்ன கேள்வி அது?''

''நான் ஏன் பார்வை இன்றிப் பிறந்தேன்?''

''என்ன பதில் எனக்குக் கிடைத்தது?''

''என் மகத்தான தந்தை என் அன்னைக்கு தந்த ஸிஃபிலிஸ் காரணமாக. அவருக்கென்ன? ஒன்று ஷாட் பென்சிலின்...எனக்கு...பிறக்கு முன்னே இருட்டு.''

அய்யா! சென்ட்ரல் வந்திடுச்சுங்க. பெரிய அய்யா கூட ஸ்டேஷனுக்கு வந்திருக்காங்க.''



# 14

# காணிக்கை

என் பேர் சீமாச்சு. சீரங்கம் கோவில்லே தெற்கு கோபுர வாசல்லே மூக்கிலே ஈயை விரட்டிண்டு உக்காந்திண்டிருக்கேனே, நான்தான். நாயுடு கடையிலே தந்தி பேப்பர் பார்த்துட்டு யாரர்வது வராளான்னுகாத்துண்டு இருந்தேன். யாரும் வல்லை. பஸ் நிறைய மொட்டை அடிச்சுண்டு சந்தனம் தடவிண்டு ஒரு டூரிஸ்ட்கும்பல்தான் வந்து இறங்கித்து. சில்லறை புரளாது. எல்லாரும் கோவிந்தா கோவிந்தான்னு கோஷ்டியாகக் கத்திட்டு மொத்தமா பத்து பைசா கொடுக்கும் பத்து பைசா எனக்குப் போறாது.

கோவிலுக்கு வரப்பட்ட மனுஷாளை அழைச்சுண்டு போய்ச் சுத்திக் காமிச்சுட்டுப் பெருமாள் சேவை பண்ணி வெச்சுட்டு அவா குடுக்கிறதை வாங்கிண்டு அன்னன்னிக்குக் காலட்சேபம் நடக்கிறது எனக்கு...

சீரங்கம் கோவில் இப்பல்லாம் முன்னைப்போல் இல்லை. முன்னே உத்ஸவம் எல்லாம் நிறுத்தி நிதானமா நடக்கும்.

ஜாஸ்தி கூட்டமும் கிடையாது பிரபுக்கள்ளாம் வருவா. எம்மாதிரி ஆசரதம் பண்றவாளுக்குத் தினப்படி குறைவில்லாம கிடைக்கும். பிரசாதம் கிடைக்கும். இப்ப? பெருமாளே கடிகாரம் கட்டிண்டு ஓடறார் மணிப்

பிரகாரம். நேரப் பிரகாரம். டாண் டாண்ணு புறப்பாடுகளும் உத்ஸவங்களும் நடந்து ஆகணும் 'எதுக்கெடுத்தாலும் டிக்கெட்டு எங்கே பார்த்தாலும் சங்கிலி.மூங்கில். 'இங்கே போகாதே,' அங்கே போ...' எல்லாத்துக்கும் கணக்கு. கோவில் தோசைக்கு, பிரசாதத்துக்கு, அதிரசத்துக்கு, பட்டை சாதத்துக்கு, யானைக்கு நாமக்கட்டிக்கு... எல்லாத்தையும் ஆபீஸிலே ஒக்காண்டு பேரேடு புஸ்தகத்திலே எழுதிண்டிருக்கா. தமிழிலே அர்ச்சனை பண்றா. ரங்க மண்டபத்திலே கிளிக் கூண்டு எல்லாம் காலியா இருக்கு வெள்ளைக்காரா நிறையப் பேர் வரா. ரொம்ப மாறிப் போயிடுத்து.

நான் சின்ன வயசிலே சீமான் தாங்கியா இருந்தேன். மாசாமாசம் சம்பளம் வந்துண்டிருந்தது. ஒரு தடவை வையாளி உத்சவத்தின்போது முழங்கால் மளுக்குன்னு புடிச்சுண்டுடுத்து. புத்தூர் வைத்தியன்கிட்ட காட்டினதிலே பாதிஇருந்த சட்பையை முழுக்கவே திருப்பிட்டான். இங்கிலீஷ் வைத்தியத்துக்குப் போனா 'இப்ப வந்தியா'ன்னு திட்டினான். என்ன ஆச்சு? கால்லே நிரந்தரமா வலி. பெருமாளை ஏளப் பண்ண முடியலை.வேலை போச்சு. தெற்கு வாசலிலே யாராவது வரமாட்டாளான்னு உக்காந்துட்டேன்.

என் தகப்பனார் பன்னெண்டு வயசிலே என் படிப்பை நிறுத்திட்டார். அவர் சீமான் தாங்கியா இருந்தார். என்னையும் இழுத்து விட்டுட்டார். சின்ன வயசிலேருந்து இந்த கோவிலைச் சுத்தித்தான் நான் வளர்ந்திருக்கேன். எட்டு வயசிலே பங்குனி ரதத்துக்கு டமாரம் அடிக்க ஆரம்பிச்சேன். பாடசாலையிலே சேந்து நாலாயிர திவ்யப் பிரபந்தம் முழுக்க அடி வரவோட பாடமாச்சு. இந்தப் புகையிலைப் பழக்கம் வந்ததும் நாக்கு புரளமாட்டேங்கிறது. கோஷ்டி சொல்லிண்டு இருநதேன். எல்லாம் நின்னுப் போச்சு...

பதினெட்டு வயசிலே எனக்குக் கல்யாணம் பண்ணி வெச்சார் அப்பா. கல்யாணம்னா என்னன்னு பிரமிப்பு தீர்றதுக்குள்ளே இரண்டு குழந்தைகள் ஆயிடுத்து ரெண்டும் பொண்ணு. அப்புறம் விரதம் இருந்து காப்புக் கட்டி ஒரு புள்ளை! என் ஆஸ்திக்கு...! போறுண்டான்னு சொல்றதுக்குள்ளேயே இன்னொரு பொண்ணு ஆனா இப்பகூட என் ஆம்படையாளைப் பார்த்தா நாலுபுள்ளை பெத்தவள்னு சொல்ல முடியாது. சேப்பா ஒடிசலாத் தான் இருப்பா. பொண்ணு ரெண்டும் வெடவெடன்னு வளர்ந்துடுத்து! மாத்தி மாத்தி உக்காந்துருவா... கல்யாணம் பண்ணனும். எதிர் ஜாமீனை நெனைச்சா பகீர்ங்கிறது ரவிக்கைக் கிழிசலை எத்தனை தடவை தெச்சாச்சு அதுகளுக்கு ஒரு சீட்டித் துணி வாங்கிக் கொடுக்கறதுக்குக் காசில்லை. நான் ஓர் ஏழைப் பிராமணன் சுவாமி.

புள்ளையாவது ஒழுங்கா இருந்தால் சமாளிக்கலாம். ஈஸிசேருக்குப் போடற மாதிரி துணியிலே ஒரு சட்டை வெச்சுண்டிருக்கான். போட்டோ ஸ்டூடியோவிலே போய்ப் பின்பக்கமா ஒளிஞ்சுண்டு சீட்டாடறான். இங்கே வாடான்னு கூப்பிட்டா எதிர்ப்பக்கம் போய்ப் புகையிலை யைத் துப்பிட்டுத்தான் வருவான். ஆத்திலே காசு திருடறான். அதட்டிக் கேட்டால் ஓடிப்போய்டுவேன்னு பயங்காட்டறான். எங்கே போவான்? இன்னிக்குப் போனா நாளன்னிக்குத் திரும்பி வந்துடுவான்...சிரம ஜீவனம்?

இதையெல்லாம் மனசுக்குள்ளேயே நினைச்சுண்டு வருத்தப்பட்டுண்டே உக்காந்திருந்தேன் ரெண்டு நாளா ஒத்தைக் காசு பேறலை. கடன் கேக்கறவாளையெல்லாம் கேட்டாச்சு. 'பெரிய பெருமாளே! ரங்கநாதா! நீர்தான் எனக்கு இன்னிக்குக் காசு தரணும்'னு நினைச்சுண்டு 'இருளிரியச் சுடர்மணி'களைச் சொல்லிப் பார்த்துண் டேன்...என்னைப் பகவான் கேட்டுட்டார் போல அந்தக் கார் வந்து சேர்ந்தது.

பெரிய கார்,வையாளிக் குதிரை மாதிரி ஜிலுஜிலுன்னு சத்தமே இல்லாமல் வந்து நின்னுது. உள்ளே ரெண்டு பேர் உட்கார்ந்திருக்கா. நான் ஓடிப்போய்க் காதுலேருந்து காதுவரை இளிச்சுண்டு, ''வாங்கோ! வாங்கோ! செருப்பை இங்கேயே வெச்சுடலாம். அர்ச்சனைக்குத் தேங்காய் பழம் வாங்கிண்டுடலாம்''னு எட்டு வருஷமா சொல்லிண்டு இருக்கிற பல்லவியை ஆரம்பிச்சேன்.

இரண்டு பேரும் கதவைச்சாத்திட்டு வெளியே இறங்கி வேஷ்டியைச் சரியாக் கட்டிண்டா. ரெண்டு பேருக்கும் கிட்டத்தட்ட ஒரே வயசுதான் இருக்கும். தரையிலே புரளப் புரள வேஷ்டி. கையகலத்துக்கு ஜரிகை. கழுத்திலே சங்கிலி. கையகல மோதிரம் குல்கந்து வாசனை பிஸினஸ் காராளா இருக்கலாம். சினிமாக்காராளாவும் இருக்கலாம்.

காரை விட்டு வெளியே வந்தவா நான் ஒருத்தன் பக்கத்திலே நின்னுண்டிருக்கிறதையே கவனிக்காம சுத்திவர மிரள மிரளப் பார்க்கறா.

''செருப்பைக் கழற்றி வெச்சுடுங்கோ. சிகரெட்டை அணைச்சுடுங்கோ. இப்படி வாங்கோ''ன்னேன்.

இப்பத்தான் என்னை ஒருத்தன் பார்த்தான். ஆற அமரப் பார்த்தான்.

''என்ன ஐயரே! வரவேற்பு பலமா இருக்கே''ன்னான். நான் சிரிச்சு. ''தேங்காய் பழம் வாங்கிண்டு வரலாமே அர்ச்சனைக்கு''ன்னேன்

''தேங்காயும் வேண்டாம். மாங்காயும் வேண்டாம். நாங்க சும்மா சாமி பார்க்க வந்திருக்கோம். நாங்களே பாத்துக்கறோம்''னு கிளம்பிட்டாங்க. நான் விடலை.

''எல்லா இடத்தையும் சுத்திக் காட்டறேன். இப்ப தர்ம சேவை நடக்கிறது. க்யூ பெரிசா இருக்கும். நான் அழைச்சுண்டு போய்ச் சௌகரியமா சீக்கிரமா சேவை பண்ணி வைக்கறேன். நீங்க இஷ்டப்பட்டதைக் குடுங்கோ.''

''வேண்டாம், அய்யரே! நாங்களே பார்த்துக்கறோம்''

எனக்கு பீதி அதிகமாயிடுத்து. வேண்டாங்கறாளே?

''மியூஸியம் காமிக்கறேன், தங்க விமானம் காண்பிக்கறேன், சில்பங்கள் சிலைகள் எல்லாம் காண்பிக்கறேன்...'' அவா கூடவே ஓடினேன்.

நின்னுட்டா. ''சிலைகளா?''

''ஆமாம்''

''எல்லாச் சிலைகளும் எங்கே இருக்குன்னு தெரியுமா உனக்கு?''

''பேஷா!''

''சரி, வா!''

''கொஞ்சம் இருங்கோ. தேங்கா பழம்...''

''வேண்டாம். சும்மா வாய்யா!''

''சரி. கற்பூரார்த்தி எடுத்துட்டாப் போச்சு!''ன்னு அவாளை அழைச்சிண்டுவிடுவிடுன்னு நடக்கஆரம்பிச்சேன்

''முதல்லே பெருமாளைச் சேவிச்சுடலாம், அப்புறம் திரை போட்டுடுவா.''

''அது யாரு பெருமாளு?''

''அதான் ஸ்ரீரங்கநாதர்!''

''சாமி பேரா? அய்யரே, உம்ம பேர் என்ன?''

''சீனிவாச அய்யங்கார்.''

''ஓ! நீ அய்யங்காரா? அய்யருக்கும் அய்யங்காருக்கும் என்னய்யா வித்தியாசம்?''

''அவா அத்வைதிகள்! நாங்க விசிஷ்டாத்வைதிகள்.''

''தமாஷா இருக்குய்யா! என்ன பாலு புரிஞ்சுதா!''

அவன் உதட்டைப் பிதுக்கினான். ''இவம் மாதிரிதானே குடுமி ஒருத்தன் நம்ம குமாரசுவாமி கல்யாணத்துக்குச் சமைக்க வந்தான். ரொம்ப நல்லாசெஞ்சான். நீதானோ?''

''இல்லை; நான் தளிகைக்குப்போறதில்லை''ன்னேன். ரங்க விலாசம், கருட மண்டபம், துவஜஸ்தம்பம் எல்லாம் காட்டிட்டு உள்ளே அழைச்சுண்டு போய் ஒரு கற்பூராரத்தி டிக்கெட் வாங்கிண்டு க்யூவிலே நிக்காம சொகுசா இந்தப் பக்கமா தள்ளிண்டுபோய்-கோவிந்தன் கத்தறான்-சன்னதிக்குக் கூட்டிண்டு போயிட்டேன்.

''சேவிங்கோ, நன்னாச் சேவிங்கோ. கற்பூரார்த்தி ஆகிறது உற்சவர் ஸ்ரீ ரங்கநாதர் ஸ்ரீ தேவி பூதேவி, மூலவர் கிடந்த கோலமாக இருக்கார். திருமுகம்தான் சேவை ஆகும். எண்ணெய் காப்புக்காக திருமேனியை உறை போட்டு மறைச்சிருக்கா.''

அவாளுக்குப் பெருமாள் சேவிக்கிறதிலே கவனமே இல்லை. வந்த பொம்மனாட்டிகளையே கவனிச்சுண்டு இருந்தா ''வைரத்தைப் பார்றா ஜொலிக்கிறது'ங்கறான். ஒருத்தனுக் கொருத்தன் தாழ்வாப் பேசிண்டு சிரிச்சுண்டான்.

''இப்படியே பிரதட்சிணமா வந்துடுங்கோ. தங்க விமானத்தைப் பார்த்துட்டுத் தாயார் சன்னதிக்குப் போய் விட்டு வந்து விடலாம்''னேன் வெளியே வந்ததும்.

''அதெல்லாம் வேண்டாம். சிலையெல்லாம் இருக்குன்னியே காட்டு.''

''பேஷாக் காட்டறேனே. சேஷராயர் மண்டபத்திலே நிறைய இருக்கு.''

''என்ன சிலை?''

''குதிரை மேலே சண்டைக்குப் போறவாளைப் புலி வந்து ஆக்ரோஷமாத் தாக்கறாப்பலேயும் அவா புலிகளை ஈட்டியாலே குத்தறாப்பலேயும் அருமையான சிலைகள். இப்ப நன்னா சுத்தம் பண்ணி வைச்சிருக்கா. வெள்ளைக்காரா வந்து எப்படிச் சுத்தம் பண்றதுன்னு சொல்லிக் கொடுத்தா.''

''குதிரைச் சிலையா?''

'ஆமாம்.''

''வேண்டாம்...வேறே மாதிரி சிலை இருக்கா?''

''வேறே மாதிரின்னா...ஓஹோ அப்படியா? கிருஷ்ணன் கோவிலிலே இருக்கும். வாங்கோ அழைச்சுண்டு போறேன்.''

''உனக்குப் புத்தி கூர்மை, ஐயா' என்றான் கருப்புக் கண்ணாடிக்காரன்.

கிருஷ்ணன் கோவிலைச் சுத்திக் கோபிகாஸ்திரீகளோட சிலை முழுவதும் காமிச்சேன். ஒவ்வொருத்திக்கும் ஒத்தக் கையாலே புடிச்சுடற மாதிரி இடுப்பு, குடம் மாதிரி ஸ்தன்யங்கள், நெத்திக்கு இட்டுக்கறாப்பலேயும், கண்ணாடி பார்த்துக்கறாப்பலேயும். சித்த தூரத்திலே யிருந்து பார்த்தால் உயிரோட இருக்கறாப்பலேஇருக்கும்.

''டேய், இங்கே பார்றா''ன்னான்.

மூலையிலே அந்தச் சிலை—ஒரு சின்னப்பொண்ணு—கிருஷ்ணர் வஸ்திராபஹரணம் பண்ணிட்டார். உடம்பிலே ஒண்ணுமே இல்லை. வெட்கப்பட்டுண்டு கன்னத்திலே கை விரலை வைச்சுண்டு மத்த கையாலே மறைக்கப் பார்த்துண்டு 'கிருஷ்ணா! என் புடவையைக் கொடுடா'ன்னு சொல்றாப்பலே...

' வெள்ளைக்காரா நிறைய வருவாள் இங்கே நிறைய போட்டோ எடுத்தா. படுத்துண்டும் நின்னுண்டும் உக்கார்ந்துண்டும் சுளீர்சுளீர்னு விளக்குப்போட்டு எடுத்தா... ஹொய்சாலி காலத்துச் சிற்பங்கள்!''

''என்னது, ஒய்.·.பா?''

''ஒய்.·.பில்லே. ஹொய்சாலி காலம். அந்தச் சிற்பங்கள் இந்தக் கோவிலேயே ரொம்பப் புராதீன மானது.''

''பரவாயில்லே, ரொம்பத் தெரிஞ்சு வைச்சிருக்கீங்க!

''ஸ்வாமி' எனக்கு ஹிந்தி, தெலுங்கு, கன்னடம், மராட்டி எல்லாம் கொஞ்சம் தெரியும். என் பொழைப்புக்கு எல்லாம் தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு...சேஷராயர் மண்டபத்துக்குப் போவோமா...?''

''குதிரைச் சிலையா?''

''ஆமாம்.''

''குதிரை வேண்டாம். நாங்க நிறையக் குதிரை பார்த்திருக்கோம். இந்த மாதிரி சிலை வேறே எங்கேயாவது இருக்குமா?''

''இந்த மாதிரி... தேரிலே கொஞ்சம் மரத்தாலே செஞ்சது இருக்கு. அதெல்லாம் இப்ப மூடி இருக்கும்... தாயார் சன்னதிக்குப் போகலாமா?''

' அய்யரே! நீ இவ்வளவு தெரிஞ்சு வெச்சுண்டிருக்கே ஒண்ணு கேக்கணும் உன்னை.''

''கேளுங்கோ.''

''இந்த ஊரிலே தேவ தாசிங்கள்ளாம் இருக்காங்களாமே?''

''இருந்தா. இப்ப இல்லே.''

''அட இருக்காங்களாம்யா?''

''இல்லை, முன்னாலே இருந்தார்கள். காங்கிரஸ்காரா வந்ததும் அது எல்லாத்தையும் நிறுத்திப்பிட்டா.''

''அவங்கள்ளாம் நடனம் ஆடுவாங்களா?''

''ஆமாம். 'மார்கழி மாச உற்சவத்திலே சதிர்க் கச்சேரி. ஏன் பள்ளி கொண்டீர் அய்யா?'ன்னு அபிநயம் பிடிப்பா.''

''பேஷ்? மேலே சொல்லு. ரொம்பச் சுவாரசியமா இருக்கு.''

''அப்புறம் பங்குனி உத்சவத்திலே ரதத்தின் மேலே நின்னுண்டு வடம் புடிக்கிறவாளுக்கு உற்சாகம் பண்ணுவா. அப்புறம் சேத்திம்போது தாயார் சன்னதியிலே ஜிலு ஜிலுன்னு வைர நகையெல்லாம் போட்டுண்டு வரிசையா நிப்பா...இருபத்தி அஞ்சு வருஷங்களுக்கு முன்னாலே.''

''இப்ப அவங்கள்ளாம் என்ன ஆனாங்க?''

''எல்லோரும் கிழவியாப் போயிட்டா.''

ரெண்டு பேரும் சிரிச்சா ''அதைச் சொல்லலை. அவா சந்ததி...அவங்க பேரப் புள்ளைங்க அவங்கள்ளாம்?''

''அவங்கள்ளாம் படிச்சுட்டுக்கல்லூரிக்குப் போயிட்டு கல்யாணம் பண்ணிண்டு... அந்த சம்பிரதாயமெல்லாம் மறைஞ்சு போச்சு எல்லாரும் செயலா இருக்கா...தவில் வாசிச்சவன் புள்ளே கலெக்டரா இருக்கான்...எல்லாம் மறைஞ்சு போச்சு!''

''இல்லை! இன்னும் இருக்குன்னு கேள்விப்பட்டேன். உங்களுக்குத் தெரியாமல் இருக்குமா?''

''உங்களுக்கு யாரோ தப்பாச் சொல்லியிருக்கா!''

''இல்லை...ஐயா'' என்று இழுத்தான்.

பெருமாள் சேவிக்க வந்தவன் புத்தி போறதைப் பாரு. நான் யோசிச்சேன். தேவி டாக்கீஸுக்குப் போறப்போ ஒரு தடவை சந்திலே சுவத்திலே 'இந்த இடத்துக்கு விபசார எண்ணத்துடன் வருபவர்களைக் கண்டிப்பாய்ப் போலீசார் வசம் பிடித்துக் கொடுக்கப்படும்'னு எழுதி இருந்தது ஞாபகம் வந்தது. ஏதோ இருக்கு போலிருக்கு. கேட்டுண்டு தான் வந்திருக்கா.

''சுவாமி! எனக்கு அதெல்லாம்பத்தி ஒண்ணும் தெரியாது.''

அவா ரெண்டு பேரும் இங்கிலீஷிலே பேசிண்டா. பொட்டை இங்கிலீஷ், எனக்குப் புரியாதா என்ன

அவனுக்குத் தெரியும்; சொல்லமாட்டேங்கறான்''னு பேசிண்டா.

நான் பேசாமல் வந்தேன். கோவில் வாசலுக்கு வந்துட்டோம். அவன் விடமாட்டேங்கறான். துருவித் துருவிக் கேக்கறான்...''உங்க கோவிலைவிட அந்த ஒய்சாள சிற்பங்களைவிடப் புராதனமானதய்யா அந்தத் தொழில்.. அவ்வளவு சீக்கிரம் அழிஞ்சு போயிடுமா?''ங்கறான்.

''இருக்கலாம். எனக்குத் தெரியாது''ன்னேன்.

''உங்க பக்கத்திலேகூட இதெல்லாம் உண்டுன்னு கேள்விப்பட்டிருக்கேன்''னான்.

''நீங்க கேள்விப்பட்டதெல்லாம் இந்த மாதிரி விஷயங்களாவே கேள்விப்பட்டிருக்கீங்களே''ன்னேன்.

சிரிச்சுட்டு, ''தாமாஷாப் பேசறே அய்யரே! சோடா சாப்பிடறயா?''ன்னான்.

''வேண்டாம். சோடா எனக்கு ஒத்துக்காது...''

''கலர்''ன்னான். நான் கவனிக்கலை. என் மூத்தவ அலமேலு நின்னுண்டிருந்தா. ''என்னடி?''ன்னேன்.

''இல்லேப்பா...அம்மா அனுப்பிச்சா...''

''எதுக்கு?''

''கோவாபரேட்டிவ் ஸ்டோரிலே நல்ல கோதுமையும் பச்சரிசியும் வந்திருக்காம்...கார்டு கொடுத்தனுப்பிச்சிருக்கா...உங்கிட்ட காசு வாங்கிண்டு போகச் சொன்னா...''

''காசுமில்லே ஒண்ணுமில்லே போ. நேரே ஆத்துக்குப் போ. நான் வரேன். வந்து பார்த்துக்கறேன்.''

''ரெண்டு ரூபா இருந்தாக்கூடப் போறும். அரிசியை மட்டும் எப்படியாவது வாங்கிண்டு வந்துடுன்னு...''

''நீ போடி ஆத்துக்கு நான் வரேன்...சொன்னாக் கேப்பியா நின்னுண்டு தர்க்கம் பண்ணிண்டிருக்கா...'' எதுக்கோ அலமேலு மேலே கோவிச்சுண்டேன். வேறே யார் மேலே கோவிச்சுக்க முடியும்?

''உன் டாட்டராய்யா அது?''

''ஆமாம்.''

''எத்தனாவது படிக்கிறது?''

''படிக்கலை''ன்னேன்.

''சேச்சே! என்னய்யா பொண்ணுக்குக் கிழிசல் சட்டையைப் போட்டிருக்கியே!''

அவா ரெண்டு பேரும் காரிலே ஏறிண்டா, ''உனக்குத் தெரியும்! சொல்ல மாட்டே?''

நான் வெறுமனே நின்னுண்டிருந்தேன்... அவன் பர்ஸைத் திறந்தான் மெதுவாக, கத்தை கத்தையா நோட்டு. புது நோட்டு. ஒண்ணை அதிலேயிருந்து அலட்சியமா உருவி, ''இந்தா வெச்சுக்கோ! இது போதுமா? மேலே ஏதாவது வேணுமா?''ன்னான்.

''வேண்டாம் ஸ்வாமி! இதுவே அதிகம்!''

''சொல்லமாட்டே! நாங்களே கண்டுபிடிச்சுக்கறோம்.

கார் கிளம்பி ஆடி அசைஞ்சுண்டு போய்டுத்து...

என் கையிலே பத்து ரூபா நோட்டு. அதையே பார்த்துண்டு உட்கார்ந்துட்டேன். 'என்னடா சீமாச்சு, இன்னிக்கு நரி முகத்திலே விழிச்சியோ, முழுசாப் பத்து ரூபா நோட்டு!...'

என் தகப்பனாரை நினைச்சுண்டேன். பாழும் பிராமணா, என்னை எல்லோரையும் போல படிக்க வைச்சிருக்கக் கூடாதோ! ஒரு எஸ். எஸ். எல். ஸி. யோ, பி. ஏ. யோ படிச்சிருப்பேனே! படிச்சுப் பொன்மலையிலே கிளார்க்கு உத்தியோகம் கிடைச்சிருக்குமே! தினம் மதிப்பா

பையைத் தூக்கிண்டு குடுமியை உலர்த்திண்டு ஒன்பது மணி வண்டியிலே பாஸ் எடுத்துண்டு ஆபீசுக்குப் போய்ட்டுத் திரும்பி வந்திண்டிருக்கலாமே! என்ன ஓய் எனக்குச் செஞ்சீர் நீர்! பாடசாலையிலே சேர்த்தீர். நாலாயிரம் குரு பரம்பரை, மார்க்கட் நியாயம் இதெல்லாம் வெச்சுண்டு கோவாபரேட்டிவ் ஸ்டோரிலே கடன் சொல்ல முடியுமா?

'பொண்ணுக்கு ரவிக்கை கிழிஞ்சிருக்கேடா'ங்கறான்! விசிறி மடிப்பு மாதிரி நோட்டை வேணுன்னுட்டே எங்கிட்ட காட்டறான். 'இது போதுமா? இன்னும் வேணுமா'ங்கறான். தாசி வீட்டுக்கு விலாசம் கேட்கறான்! என்னைப் படிக்க வைச்சிருந்தா இந்த மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிண்டு சிரிச்சுண்டு அவா பின்னாலே நாய் மாதிரி அலைஞ்சுண்டு இருக்க வேண்டாமே?

எனக்கு ஸ்ரீ ரங்கநாதரை ஞாபகம் வந்தது. ஸ்வாமி எனக்குப் பத்து ரூபாய் சம்பாதிச்சுக் கொடுத்துட்டீர்! உங்களை வேண்டிண்டேன்...எனக்குக் காசு கிடைச்சுடுத்து!...

''ஓய்! உம்ம காசு எனக்கு வேண்டாம். நீரே வெச்சுக்கும்!'' அந்தப் பத்துப் ரூபாயை உண்டியலிலே சேர்த்துட்டுப் பேசாம ஆத்தைப் பாக்கப் பாடிண்டே கிளம்பிட்டேன்.

ஊரிலேன் காணியில்லை
  உறவு மற்றொருவ ரில்லை
பாரில் நின் பாத மூலம்
  பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளி வண்ணனே ஓ!
  கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா
  அரங்கமா நகருளானே!

●●

# 15

# ஜன்னல்

அவன் நுழைந்தபோது அந்த இடத்தில் ஐந்தாறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நடுவே ஒரு பழைய வீக்லி கந்தலாக இருந்தது. அலமாரிக்குள் நிறைய மருந்துகள் அடுக்கி இருந்தன. பாதி கண்ணாடியும் பாதி மரமுமாக இருந்த தடுப்பின் கண்ணாடிப் பகுதியில் கன்ஸல்டிங் நேரம் மாலை ஆறிலிருந்து எட்டரை வரை என்றது; தடுப்புக்கு அந்தப்பக்கம் டாக்டர் '' 'ஆ' சொல்லு'' என்று சொல்வது கேட்டது. ஒரு மின்விசிறி மிக மெதுவாகச் சுழன்று கொண்டிருந்தது. அதன் நிழல் சுவரில், பெஞ்சின் மேல், அந்தப் பெண்ணின் மார்பின் மேல், புத்தகங்களின் மேல் என்று மடக்கியும் நிமிர்ந்தும் நெளிந்தும் சுழன்று கொண்டிருந்தது.

புதிதாக வந்தவன் பெஞ்சில் இருந்த வெற்றிடத்தை உடனே அடைத்து உட்கார்ந்தான். எதிரே இருப்பவரைப் பார்த்துப் புன்னகைத்தான். அவர் மஃப்ளரின் நிழலில் பதில் புன்னகை செய்யவில்லை. அவர் அருகில் இருந்த பெண் தன் புடவையை இன்னும் சரிசெய்து மறைத்துக் கொண்டு இன்னும் நெற்றியைச் சுருக்கிக் கொண்டாள்.

புதிதாக வந்து உட்கார்ந்தவனுக்கு நாற்பது வயதிருக்கலாம். அல்லது அது நிஜ நாற்பதாக இல்லாமல் முப்பது வயது முதிர்ந்த நாற்பதாக இருக்கலாம். அவன் சிரிக்க

முயன்றதில் பொதுவாக ஒரு சிநேகிதம் விரும்பும் தன்மை இருந்தது பக்கத்தில் இருப்பவரிடம் கேட்டான்.

"ரொம்ப நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறீர்களா?"

"ம்?" என்றார் அவர்.

அவன் கேள்வியை மறுபடி கேட்க "பதினைந்து நிமிஷம்" என்றார்.

அந்த அம்மாள் அவனைப் பார்த்த நேரத்தைப் பயன் படுத்திக் கொண்டு "குழந்தைக்கு மீஸில்ஸா?" என்று கேட்டான்.

குறிப்பிட்ட குழந்தை ஜுர வேகத்தில் தூங்கிக் கொண்டிருக்க அதன் தாய் பதில் சொல்லவில்லை. அந்தப் பெண் இன்னும் அவனை வெறுத்தாள்.

அந்த அறைக் கதவு திறந்து உள்ளே 'ஆ' என்று சொல்லக் கேட்டதற்கு 'ஆ' என்று சொன்னவர், கையில் ஒரு புதிய, வெளுத்த காகிதத்துடன் வெளியே வந்தார். டாக்டர் தெரிந்தார். 'குட் ஈவினிங் டாக்டர்' என்றான்

டாக்டர் ஈவினிங் என்று பதில் சொன்னார். அவனைப் பார்க்கவில்லை. 'நீங்க வாங்க அம்மா' என்றார். அந்தப் பெண் உள்ளே சென்றாள். உடனே எல்லோரும் மௌனமாக, சிரத்தையாக கண்ணாடிக்குப் பின் கேட்கப் போகும் வார்த்தைகளில் கவனமாக இருந்தார்கள்.

அவள் பேசுவது தெளிவாகக் கேட்கவில்லை தாழ்வாக இருந்தது அவள்—டாக்டர் சம்பாஷணை.

புதிதாக வந்து உட்கார்ந்து சிநேகிதம் தேடின ஆசாமி பக்கத்தில் இருப்பவரை "உங்களுக்கு என்ன" என்று கேட்டான். "கையிலே கட்டி" என்று கையைக் காட்டினார். "பென்ஸிலின் நாலு இன்ஜெக்ஷன் போட்டு நேற்று தான் உடைஞ்சுது" "அப்படியா!" சற்றுத் தாழ்ந்த

''அப்புறம் பங்குனி உத்சவத்திலே ரதத்தின் மேலே நின்னுண்டு வடம் புடிக்கிறவாளுக்கு உற்சாகம் பண்ணுவா. அப்புறம் சேத்திம்போது தாயார் சன்னதியிலே ஜிலு ஜிலுன்னு வைர நகையெல்லாம் போட்டுண்டு வரிசையா நிப்பா...இருபத்தி அஞ்சு வருஷங்களுக்கு முன்னாலே.''

''இப்ப அவங்கள்ளாம் என்ன ஆனாங்க?''

''எல்லோரும் கிழவியாப் போயிட்டா.''

ரெண்டு பேரும் சிரிச்சா ''அதைச் சொல்லலை. அவா சந்ததி...அவங்க பேரப் புள்ளைங்க அவங்கள்ளாம்?''

''அவங்கள்ளாம் படிச்சுட்டுக்கல்லூரிக்குப் போயிட்டு கல்யாணம் பண்ணிண்டு... அந்த சம்பிரதாயமெல்லாம் மறைஞ்சு போச்சு எல்லாரும் செயலா இருக்கா...தவில் வாசிச்சவன் புள்ளே கலெக்டரா இருக்கான்...எல்லாம் மறைஞ்சு போச்சு!''

''இல்லை! இன்னும் இருக்குன்னு கேள்விப்பட்டேன். உங்களுக்குத் தெரியாமல் இருக்குமா?''

''உங்களுக்கு யாரோ தப்பாச் சொல்லியிருக்கா!''

''இல்லை...ஐயா'' என்று இழுத்தான்.

பெருமாள் சேவிக்க வந்தவன் புத்தி போறதைப் பாரு. நான் யோசிச்சேன். தேவி டாக்கீஸுக்குப் போறப்போ ஒரு தடவை சந்திலே சுவத்திலே 'இந்த இடத்துக்கு விபசார எண்ணத்துடன் வருபவர்களைக் கண்டிப்பாய்ப் போலீசார் வசம் பிடித்துக் கொடுக்கப்படும்'னு எழுதி இருந்தது ஞாபகம் வந்தது. ஏதோ இருக்கு போலிருக்கு. கேட்டுண்டு தான் வந்திருக்கா.

''சுவாமி! எனக்கு அதெல்லாம்பத்தி ஒண்ணும் தெரியாது.''

அவா ரெண்டு பேரும் இங்கிலீஷிலே பேசிண்டா. பொட்டை இங்கிலீஷ், எனக்குப் புரியாதா என்ன

அவனுக்குத் தெரியும்; சொல்லமாட்டேங்கறான்''னு பேசிண்டா.

நான் பேசாமல் வந்தேன். கோவில் வாசலுக்கு வந்துட்டோம். அவன் விடமாட்டேங்கறான். துருவித் துருவிக் கேக்கறான்...''உங்க கோவிலைவிட. அந்த ஒய்சாள சிற்பங்களைவிடப் புராதனமானதய்யா அந்தத் தொழில்.. அவ்வளவு சீக்கிரம் அழிஞ்சு போயிடுமா?''ங்கறான்.

''இருக்கலாம். எனக்குத் தெரியாது''ன்னேன்.

''உங்க பக்கத்திலேகூட இதெல்லாம் உண்டுன்னு கேள்விப்பட்டிருக்கேன்''னான்.

''நீங்க கேள்விப்பட்டதெல்லாம் இந்த மாதிரி விஷயங்களாவே கேள்விப்பட்டிருக்கீங்களே''ன்னேன்.

சிரிச்சுட்டு, ''தாமாஷாப் பேசறே அய்யரே! சோடா சாப்பிடறயா?''ன்னான்.

''வேண்டாம். சோடா எனக்கு ஒத்துக்காது...''

''கலர்''ன்னான். நான் கவனிக்கலை. என் மூத்தவ அலமேலு நின்னுண்டிருந்தா. ''என்னடி?''ன்னேன்.

''இல்லேப்பா...அம்மா அனுப்பிச்சா...''

''எதுக்கு?''

''கோவாபரேட்டிவ் ஸ்டோரிலே நல்ல கோதுமையும் பச்சரிசியும் வந்திருக்காம்...கார்டு கொடுத்தனுப்பிச்சிருக்கா...உங்கிட்ட காசு வாங்கிண்டு போகச் சொன்னா...''

''காசுமில்லே ஒண்ணுமில்லே போ. நேரே ஆத்துக்குப் போ. நான் வரேன். வந்து பார்த்துக்கறேன்.''

''ரெண்டு ருபா இருந்தாக்கூடப் போறும். அரிசியை மட்டும் எப்படியாவது வாங்கிண்டு வந்துடுன்னு...''

''நீ போடி ஆத்துக்கு நான் வரேன்...சொன்னாக் கேப்பியா நின்னுண்டு தர்க்கம் பண்ணிண்டிருக்கா...'' எதுக்கோ அலமேலு மேலே கோவிச்சுண்டேன். வேறே யார் மேலே கோவிச்சுக்க முடியும்?

''உன் டாட்டராய்யா அது?''
''ஆமாம்.''
''எத்தனாவது படிக்கிறது?''
''படிக்கலை''ன்னேன்.
''சேச்சே! என்னய்யா பொண்ணுக்குக் கிழிசல் சட்டையைப் போட்டிருக்கியே!''

அவா ரெண்டு பேரும் காரிலே ஏறிண்டா, ''உனக்குத் தெரியும்! சொல்ல மாட்டே?''

நான் வெறுமனே நின்னுண்டிருந்தேன்... அவன் பர்ஸைத் திறந்தான் மெதுவாக, கத்தை கத்தையா நோட்டு. புது நோட்டு. ஒண்ணை அதிலேயிருந்து அலட்சியமா உருவி, ''இந்தா வெச்சுக்கோ! இது போதுமா? மேலே ஏதாவது வேணுமா?''ன்னான்.
''வேண்டாம் ஸ்வாமி! இதுவே அதிகம்!''
''சொல்லமாட்டே! நாங்களே கண்டுபிடிச்சுக்கறோம்.

கார் கிளம்பி ஆடி அசைஞ்சுண்டு போய்டுத்து...
என் கையிலே பத்து ரூபா நோட்டு. அதையே பார்த்துண்டு உட்கார்ந்துட்டேன். 'என்னடா சீமாச்சு, இன்னிக்கு நரி முகத்திலே விழிச்சியோ, முழுசாப் பத்து ரூபா நோட்டு!...'

என் தகப்பனாரை நினைச்சுண்டேன். பாழும் பிராமணா, என்னை எல்லோரையும் போல படிக்க வைச்சிருக்கக் கூடாதோ! ஒரு எஸ். எஸ். எல். ஸி. யோ, பி. ஏ. யோ படிச்சிருப்பேனே! படிச்சுப் பொன்மலையிலே கிளார்க்கு உத்தியோகம் கிடைச்சிருக்குமே! தினம் மதிப்பா

பையைத் தூக்கிண்டு குடுமியை உலர்த்திண்டு ஒன்பது மணி வண்டியிலே பாஸ் எடுத்துண்டு ஆபீசுக்குப் போய்ட்டுத் திரும்பி வந்திண்டிருக்கலாமே! என்ன ஓய் எனக்குச் செஞ்சீர் நீர்! பாடசாலையிலே சேர்த்தீர். நாலாயிரம் குரு பரம்பரை, மார்க்கட் நியாயம் இதெல்லாம் வெச்சுண்டு கோவாபரேட்டிவ் ஸ்டோரிலே கடன் சொல்ல முடியுமா?

'பொண்ணுக்கு ரவிக்கை கிழிஞ்சிருக்கேடா'ங்கறான்! விசிறி மடிப்பு மாதிரி நோட்டை வேணுன்னுட்டே எங்கிட்ட காட்டறான். 'இது போதுமா? இன்னும் வேணுமா'ங்கறான். தாசி வீட்டுக்கு விலாசம் கேட்கறான்! என்னைப் படிக்க வைச்சிருந்தா இந்த மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிண்டு சிரிச்சுண்டு அவா பின்னாலே நாய் மாதிரி அலைஞ்சுண்டு இருக்க வேண்டாமே?

எனக்கு ஸ்ரீ ரங்கநாதரை ஞாபகம் வந்தது. ஸ்வாமி எனக்குப் பத்து ரூபாய் சம்பாதிச்சுக் கொடுத்துட்டீர்! உங்களை வேண்டிண்டேன்...எனக்குக் காசு கிடைச்சுடுத்து!...

''ஓய்! உம்ம காசு எனக்கு வேண்டாம். நீரே வெச்சுக்கும்!'' அந்தப் பத்துப் ரூபாயை உண்டியலிலே சேர்த்துட்டுப் பேசாம ஆத்தைப் பாக்கப் பாடிண்டே கிளம்பிட்டேன்.

ஊரிலேன் காணியில்லை
    உறவு மற்றொருவ ரில்லை
பாரில் நின் பாத மூலம்
    பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளி வண்ணனே ஓ!
    கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா
    அரங்கமா நகருளானே!

●●

# 15

# ஜன்னல்

அவன் நுழைந்தபோது அந்த இடத்தில் ஐந்தாறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நடுவே ஒரு பழைய வீக்லி கந்தலாக இருந்தது. அலமாரிக்குள் நிறைய மருந்துகள் அடுக்கி இருந்தன. பாதி கண்ணாடியும் பாதி மரமுமாக இருந்த தடுப்பின் கண்ணாடிப் பகுதியில் கன்ஸல்டிங் நேரம் மாலை ஆறிலிருந்து எட்டரை வரை என்றது; தடுப்புக்கு அந்தப்பக்கம் டாக்டர் '' 'ஆ' சொல்லு'' என்று சொல்வது கேட்டது. ஒரு மின்விசிறி மிக மெதுவாகச் சுழன்று கொண்டிருந்தது. அதன் நிழல் சுவரில், பெஞ்சின் மேல், அந்தப் பெண்ணின் மார்பின் மேல், புத்தகங்களின் மேல் என்று மடக்கியும் நிமிர்ந்தும் நெளிந்தும் சுழன்று கொண்டிருந்தது.

புதிதாக வந்தவன் பெஞ்சில் இருந்த வெற்றிடத்தை உடனே அடைத்து உட்கார்ந்தான். எதிரே இருப்பவரைப் பார்த்துப் புன்னகைத்தான். அவர் மஃப்ளரின் நிழலில் பதில் புன்னகை செய்யவில்லை. அவர் அருகில் இருந்த பெண் தன் புடவையை இன்னும் சரிசெய்து மறைத்துக் கொண்டு இன்னும் நெற்றியைச் சுருக்கிக் கொண்டாள்.

புதிதாக வந்து உட்கார்ந்தவனுக்கு நாற்பது வயதிருக்க லாம். அல்லது அது நிஜ நாற்பதாக இல்லாமல் முப்பது வயது முதிர்ந்த நாற்பதாக இருக்கலாம். அவன் சிரிக்க

முயன்றதில் பொதுவாக ஒரு சிநேகிதம் விரும்பும் தன்மை இருந்தது பக்கத்தில் இருப்பவரிடம் கேட்டான்.

''ரொம்ப நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறீர்களா?''

''ம்?'' என்றார் அவர்.

அவன் கேள்வியை மறுபடி கேட்க ''பதினைந்து நிமிஷம்'' என்றார்.

அந்த அம்மாள் அவனைப் பார்த்த நேரத்தைப் பயன் படுத்திக் கொண்டு ''குழந்தைக்கு மீஸில்ஸா?'' என்று கேட்டான்.

குறிப்பிட்ட குழந்தை ஜுர வேகத்தில் தூங்கிக் கொண்டிருக்க அதன் தாய் பதில் சொல்லவில்லை. அந்தப் பெண் இன்னும் அவனை வெறுத்தாள்.

அந்த அறைக் கதவு திறந்து உள்ளே 'ஆ' என்று சொல்லக் கேட்டதற்கு 'ஆ' என்று சொன்னவர், கையில் ஒரு புதிய, வெளுத்த காகிதத்துடன் வெளியே வந்தார். டாக்டர் தெரிந்தார். 'குட் ஈவினிங் டாக்டர்' என்றான்

டாக்டர் ஈவினிங் என்று பதில் சொன்னார். அவனைப் பார்க்கவில்லை. 'நீங்க வாங்க அம்மா' என்றார். அந்தப் பெண் உள்ளே சென்றாள். உடனே எல்லோரும் மௌனமாக, சிரத்தையாக கண்ணாடிக்குப் பின் கேட்கப் போகும் வார்த்தைகளில் கவனமாக இருந்தார்கள்.

அவள் பேசுவது தெளிவாகக் கேட்கவில்லை தாழ்வாக இருந்தது அவள்—டாக்டர் சம்பாஷணை.

புதிதாக வந்து உட்கார்ந்து சிநேகிதம் தேடின ஆசாமி பக்கத்தில் இருப்பவரை ''உங்களுக்கு என்ன'' என்று கேட்டான். ''கையிலே கட்டி'' என்று கையைக் காட்டினார். ''பென்ஸிலின் நாலு இன்ஜெக்ஷன் போட்டு நேற்று தான் உடைஞ்சுது'' ''அப்படியா!'' சற்றுத் தாழ்ந்த

குரலில் ''இவர் நல்ல டாக்டர் ஸார். கைகாரர் ஸார் நல்ல காசு'' என்றார் அவரும் தாழ்ந்த குரலில். ''நான் இவரிடம் இப்பொழுதுதான் முதல் தடவை வருகிறேன். இவரிடம் வந்ததே சரியா என்று எனக்குத் தெரியவில்லை. எனக்கு உடம்பு சரியா இல்லையா என்பதுகூட எனக்குச் சொல்ல முடியாது எனக்கு இவர் வைத்தியம் சொல்ல முடியுமா என்பது கூட எனக்குச் சரியாச் சொல்ல முடியாது...''

உனக்கு என்ன என்று அவர் கேட்கவில்லையே என்று வருத்தப்பட்டான். 'அப்படியா' என்று மட்டும் சொல்லி யிருந்தார்.

அடுத்த தடவை டாக்டர் கதவைத் திறந்தபோது 'டாக்டர் ஒரு நிமிஷம்' என்று சற்று உரக்கவே சொன் னான். எல்லோரும் அவனையே பார்த்தார்கள்.

''டாக்டர் எனக்குக் கொஞ்சம் அவசரம். என்னைக் கொஞ்சம் சீக்கிரம் அனுப்பிவிட முடியுமா?''

''என்ன உங்களுக்கு ஜுரமா?'' என்று கேட்டார் டாக்டர்.

''இல்லை!''

''பின் என்ன?''

''உள்ளே வந்து சொல்கிறேனே'' என்று அசந்தர்ப்ப மாகச் சிரித்தான்.

டாக்டர் ''சற்று இருங்கள். இந்த பேஷண்டைப் பார்த்து விட்டுக் கூப்பிடுகிறேன். ராமநாதன் வாங்க'' என்றார்.

ராமநாதன் (கையில் கட்டி) உள்ளே சென்றார்.

மற்றவர்கள் அவனை, க்யூவை மீறப்போகும் அவனைப் புதிய வெறுப்புடன் பார்த்தார்கள். அவர்கள் மறுக்க மாட்டார்கள் எனத் தோன்றியது. டாக்டர் கோபக்

காரராக இருக்கலாம். டாக்டர் பொதுவாகவே தீவிர மாக வரிசை முறையைப் பாதுகாத்தவராக இருக்கலாம். அவன் சிநேகிதம் தேடும் முயற்சியை விட்டு விட்டான். அந்த வீக்லியை அவன் எடுத்துப் பிரித்தான். அதைக்கவன மில்லாமல் திருப்பினான். மற்றொரு பெண் நுழைந்தாள். அவளுடன் ஒரு நான்கு வயதுப் பையன் வந்தான், வந்த உடன் உட்கார்ந்திருந்தவர்களை எல்லாம் பார்தான். வீக்லியைப் புரட்டிக் கொண்டிருந்தவன் சற்று ஒதுங்கி அவனுக்கு இடம் தர, சின்னப் பையன் சுதந்திரமாக உட்கார்ந்து கொண்டு அதில் ஏரோப்ளேன் படம் இருக்கா என்று கேட்டான் அவன் வீக்லியைத் தீவிரமாக ஆராய்ந்து ஏரோப்ளேன் படம் தேடினான். பையன் பக்கங்கள் புரட்டப்பட அது என்ன இது என்ன என்று கேட்டான்.

''நீங்க வாங்க ஸார்'' என்று கதவு திறந்ததும் டாக்டர் கூப்பிட்டார். உள்ளே இருந்தவர் மெதுவாகப் பேசிக் கொண்டே வந்தார். வீக்லியைப் பையனிடம் கொடுத்து விட்டு அவர் கட்டிஸ்யப்பற்றி விசாரித்து விட்டு அவன் உள்ளே சென்றான். அவன் உள்ளே வந்ததும் டாக்டர் கதவைச் சாத்தினார்.

டாக்டர் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு எதிரில் சிறிய மேஜை இருந்தது. அதில் எனாமல் தட்டில் இருந்த பஞ்சில் இருந்த ரத்தம் அவனைக் கவர்ந்தது. அதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''உட்காருங்கள்'' என்றார் டாக்டர்.

அவன் டாக்டர் அருகில் இருந்த ஸ்டூலில் உட்கார்ந்தான். டெலிபோன் இருந்தது. அந்த மின் விசிறியின் நிழல் கண்ணாடித் தடுப்பையும் அடிக்கடி வருடிக் கொண்டிருந்தது

''என்ன உங்களுக்கு?''

டாக்டர் நான் உங்களுடன் பேசவேண்டும். என் பெயர் சீனிவாசன். சாதாரணப் பெயர்! எனக்கு ஏதும் ஜுரமில்லை ஜலதோஷமில்லை. நான்பக்கத்துபில்டிங்கில் இருக்கிற பாங்கில் வேலை செய்கிறேன். அங்கே நான் ஒரு காம்ப்ட்டா மீட்டர் ஆப்பரேட்டர். எனக்கு ஒருவிதமான பயம் இருக்கிறது."

டாக்டர் அவனையே பார்த்துக்கொண்டு அவன் மேலே பேசக் காத்திருந்தார்.

காம்ப்ட்டா மீட்டர் என்கிறது கூட்டல் யந்திரம் மிஷின். சென்ற ஒன்பது வருஷங்களாக நான் அந்த யந்திரத்திலே கூட்டல் செய்திருக்கிறேன் அதுதான் என் வேலை. எண்கள் எண்கள் எண்கள் அனுமார் வால்போல அன்றன்றைக்கு ட்ரான்ஸாக்ஷன்களை எல்லாம் அதில் டைப் அடித்துக் கூட்டிக் கொண்டே இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம்,ஒரு வாரம் ஒரு மாதம், ஒரு வருஷம் ஒன்பது வருஷம் எத்தனை எண்கள்!

டாக்டர் எனக்கு எப்படி இதைச் செய்வது என்று தெரியவில்லை. எனக்குக் கல்யாணம் ஆகி பத்து வருஷமாகிறது. எனக்குக் குழந்தை கிடையாது. என் மனைவி என் வீடு என் ஆபீஸ் என் காம்ப்ட்டா மீட்டர். தினம்மனைவியிலிருந்து விடுபட்டு ரயிலேறி எண்களாக எட்டு மணி நேரம் எண்ணிவிட்டு மனைவிக்குத்திரும்பி மனைவியுடன் பேசி விட்டு சாப்பிட்டுவிட்டு உறங்கிவிட்டு மறுபடி விடுபட்டு மறுபடி எண்களைத் துரத்தி மறுபடி...

டாக்டர் நான் உங்களிடம் வந்ததே சரியா என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்கு எப்படிப்பட்ட உதவி தேவை என்பதும் தெரியவில்லை. எந்த விதத்தில் உங்களைப் போன்ற ஜெனரல் ப்ராக்டிஷனர் எனக்கு உதவி செய்யக்கூடும் என்பதும் தெரியவில்லை. இருந்தும் என்னிடம் ஏதோ தப்பு ஏற்பட்டிருக்கிறது, டாக்டர்.

இன்று காலை 9-06 ட்ரெய்னில் நல்ல கூட்டம் வாயிற் பக்கம் கம்பியை இரண்டு கையாலும் தொத்திப்பிடித்துக் கொண்டு மற்றவர்களுடன் என் காம்ப்ட்டா மீட்டர் நோக்கி விரைந்து கொண்டிருந்தபோது விர் விர் என்று எலக்ட்ரிக் கம்பங்கள் அருகே அருகே கடக்கும்போது எனக்கு திடீர் என்று அந்த ஆசை-மிக்க கவர்ச்சிகரமான ஆசை ஏற்பட்டது! கை எதற்காக பிடித்துக்கொண்டு எதற்காக இப்படித் தொத்திக் கொண்டு எங்கே போகிறேன்? ஏன், நான் கையை விட்டுவிட்டால் என்ன? அவ்வளவு தீவிரமாக அந்த ஆசைஏற்பட்டது. அப்படியே கையை விட்டுவிட்டு அந்த வேகமான வண்டியிலிருந்து விலகி விழுந்து விடுவதற்கு ஒரு கணம் அந்த ஆசையின் தீவிரம் என்னை ஆட்கொண்டு என் கைகள் சக்தியில்லாமல் போக திடீரென்று சுதாரித்துக் கொண்டேன் ஒரே ஒரு கணம்தான் அந்த ஆசை இருந்தது. உடனே போய் விட்டது.

டாக்டர்! நான் உங்கள் நேரத்தை அதிகம் விரயம் பண்ணவில்லை என்று நம்புகிறேன். அந்த ஆசை மறுபடி. சாயங்காலம் சற்றுமுன் எனக்கு ஏற்பட்டது ஓவர் டைமில் என் ஆபீஸில் தனியாக இருந்தேன். மூன்றாவது மாடியில் இருக்கிறது அந்த அறை நானும் என் காம்ப்ட்டா மீட்டரும் தரையில் புரண்டு புரண்டு சுருண்டிருந்த காகிதத் தொடரில் என் விரல்கள் பதிப்பித்த எண்களும்...

நிமிர்ந்து பார்த்தேன். பெரிய ஜன்னல் தெரிந்தது. வானம் தெரிந்தது ஜன்னல்திறந்திருக்கு காற்றில் ஆடின ஜன்னல் திரை என்னை வா வா என்று அழைத்தது. அந்த அழைப்பை என்னால் எதிர்க்க முடியவில்லை நடந்து சென்று ஜன்னல் விளிம்பில் ஏறி நின்றுகொண்டு கீழே தங்கசாலையில் ஊர்ந்து கொண்டிருந்த வாகனங்களின் மத்தியில் சொத் என்று காக்கை எச்சம் போல் விழ எவ்வளவு ஆசையாக இருந்தது தெரியுமா? இப்பொழுதும் ஒரு கணம்தான். அதற்குள் கை நடுங்கி வியர்த்துகண்ணாடிக் கதவைப் பிடித்துக்கொண்டு சமாளித்து விட்டேன். உடனே நான் தீர்மானித்து விட்டேன் என்னில் ஏதோ

தப்பு இருக்கிறது. உடனே நான் டாக்டரைப் பார்க்க வேண்டும் என்று தோன்றிவிட்டது. ஆபீசுக்கு மிக அருகில் இருக்கும் உங்களைத் தேடி வந்துவிட்டேன்!

டாக்டர் உங்களிடம் எவ்வளவோ சொல்ல வேண்டும் என்று நினைத்து வந்தேன். பாதிகூடச் சொல்லவில்லை. அந்த பயம் ரொம்ப உண்மையான பயம். அப்படியே ஒரு புயல்காற்றுபோல ஒரு போர்வைபோல என்னைச்சுற்றிக் கொள்கிறது. இன்று நிச்சயம் அந்த ஜன்னலிலிருந்து குதித்திருப்பேன், சமாளித்துக் கொண்டுவிட்டேன்... எப்படிச் சொல்வது...எப்படி...

அவன் கை நடுங்கியது. சிரித்தான். டாக்டர் 'புரிகிறது' என்றார். அவன் சட்டைப் பித்தானை அவிழ்க்கச் சொன்னார். ஸ்டெதாஸ்கோப்பை வைத்து அவன் இருதயத்தைக் கேட்டார். அவன் இரத்த அழுத்தத்தை எடுத்தார். இரவில் சரியாகத் தூங்குகிறாயா என்று கேட்டார் அவன் 'தூங்குகிறேன்' என்றான். காலை ஒழுங்காக மோஷன் ஆகிறதா என்றார். அவன் யோசித்து ஆமாம் என்றான். அவன் கவனம் அந்த ரத்தப் பஞ்சில் நின்றது. டாக்டர் சொன்னார்: ' உன் ரத்த அழுத்தம் சரியாகத்தான் இருக்கிறது. எல்லோருக்கும் இந்த ஃபெபடீக் வரும். இப்பொழுது என் கேஸையே எடுத்துக் கொள் நான் மாலை நேரம்கூட சுதந்திரமாக வெளியில் சென்றதில்லை. இந்த இடத்தில் 6-லிருந்து 8-30வரை. வீட்டில் போனால் கேஷண்ட்கள். அதற்கு முன் பேஷண்ட்கள் காலை மாலை. உனக்கு காம்ப்டா மீட்டர் எனக்கு பேஷண்ட்கள். எனக்கும ஒரு நாள் எல்லாவற்றையும் உதறி எறிந்து கிராமத்துக்குப் போய் விடலாமா என்று தோன்றும். எனக்கு முடியாது. பிழைப்புப் போய்விடும். உனக்கு முடியும். நாளைக்கு ஆபீசுக்கு போகாதே. அவசியம லீவ் எடுத்துக்கொள். ஒரு மாதம். இல்லை இரண்டு மாதம். சர்டிபிகேட் வேண்டுமானால் தருகிறேன். உனக்கு வேண்டியது மாறுதல் டெலிபோன் மணி அடித்தது. எடுத்துக் கேட்டார். ம் ம் ம் என்றுதான் திரும்பத் திரும்பச் சொன்னார் கடைசியில் மட்டும் சரி என்று சொல்லி விட்டு வைத்தார். அது என் மனைவி

என்றார். டெலிபோனில் பேசிக் கொண்டிருக்கும் போதே காகிதத்தில் எழுதி முடித்து விட்டார். சரக் என்று கிழித்தார். ''இந்த டானிக்கை சாப்பாட்டுக்குப் பின் இரண்டு டீஸ்பூன் சாப்பிடு ஒரு பாட்டில் சாப்பிட்டு விட்டு என்னை மறுபடி வந்து பார்'' என்று அவனிடம் அந்தக் காகிதத்தைத் தந்தார்

அவன் அந்தக் காகிதத்தை பிரமிப்புடன் பார்த்துப் படிக்க முயன்றான்.

டாக்டர் அவன் எழுந்து செல்லக் காத்திருந்தார் ''டாக்டக் நான் உங்களுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும்?''

' ஐந்து ரூபாய்'' என்றார்.

அவன் தன் பையில் தடவி சில ரூபாய் நோட்டுக்கள் சில எட்டணா நாலணா பத்து பைசா நாணயங்கள் என்று சேர்த்துக் கூட்டிப் பார்த்து ''என்னிடம் நாலு ரூபாய் 30 பைசாதான் இருக்கிறது'' என்று மன்னிப்புக் கலந்த குரலில் பயத்துடன் சிரித்துக் கொண்டே சொல்லி விட்டு மேஜை மேல் அவ்வளவு பணத்தையும் வைத்தான். டாக்டர் சரிஎன்றார்.

அவன் அந்தக் கதவைத் திறந்துக் கொண்டு வெளியே சென்றான்... உடனே உள்ளே வந்த அந்தப் பெண் தன் கையில் போர்த்தி அணைத்திருந்த குழந்தையை ஜாக்கிரதையாகத் திறந்து, ''காலையிலிருத்து விட்டு விட்டு ஜுரம் அடிக்கிறது டாக்டர். ஒரு தடவை வாயிலெடுத்து விட்டான் கண்ணைத் திறக்காமல் ஜுரம்.'' அப்பொழுது டாக்டர் மறுபடிஸ்டெதாஸ்கோப் அணிந்து கொண்டார் அந்தக் குழந்தையைப் பரிசோதித்தார். அதன் வயிற்றை அழுத்திப் பார்த்தார்.

''இருமல் இருக்கா.

''இல்லை டாக்டர்! '

''பேர் என்ன?''

''சுரேஷ்... சுரேஷ் டேய், டாக்டர் மாமாடா!''

''வயசு?''

''நாலு.''

டாக்டர் எழுதிக் கொண்டிருக்கையில் வெளியே சாலையில் அபஸ்வரமாக அந்த சப்தம், மிக அவசரமாக ப்ரேக்போடுவதால் டயர் தேயும் சப்தம் கேட்டது.

# 16

# நியாயங்கள்

ஊர், மனைவி, வேலை எல்லாம் புதிசு; என் மணிக் கட்டில் கட்டியிருந்த திருமணக்கயிறு கூட. பத்து நாட்கள் கரைந்து ஹனிமூன் நாட்கள் முடிந்துவிட்டன ஆரம்பத்தில் இருந்த சாக்லட் கனவுகள்கரைந்து. பெங்களூரில் வீடு தேட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. மனைவியை விட்டுத் தற்காலிகப் பிரிவு. அவளுக்கு பொழுது போகவில்லை தினமும் ஒரு கடுதாசு எழுதுகிறாள்; 'வீடு கிடைத்ததா, வீடு கிடைத்ததா?' என்று. "அதிக நாள் தள்ளிப்போட்டால் ஊன மாசம் வந்துவிடும், அப்புறம் நாம் இருவரும் சேர்ந்து இருக்க முடியாமல் போய்விடும். இந்த அபலையின்..." இத்யாதி.

அபலையா? காஞ்சிபுரத்தில் இரண்டு வேளையும் சம்பிரமமாக உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு, வருகிற தமிழ்ச் சினிமாவையெல்லாம் பார்த்துக் கொண்டு, டி வி. பார்த்துக் கொண்டு உல்லாசமாக இருக்கிறாள்- இவள் அபலையாம்! 'உனக்கென்ன கேடு? நான் வீட்டுத்தரகர்களின் பின்னால் அலைந்து கொண்டிருக்கிறேன்' என்று பதில் எழுநுவதற்குப் பதில், 'என் காதலிக்கு' என்று தொடங்கிப் பக்கம் பக்கமாக எழுதிக் கொண்டிருக்கிறேன். அந்தக் கடிதங்களை எல்லாம் என் மனைவி பத்திரமாக வைத்திருப்பாள்.

நான் என்னவோ. கிருஷ்ணப்பா என்று வீட்டுத்தரகர் பின்னால்சுற்றிக் கொண்டே இருக்கிறேன். அழுக்கடைந்த

சூல்லாய், லாண்டரியே காணாத அழுக்கு கோட்டு, பை நிறையக்காகிதங்கள், மைசூர் மகாராஜாவின் போட்டோ, தட்டுச் சுற்று வேஷ்டி, எனக்கும் அவனுக்கும் மொழிப் பிரச்சனை வேறு அவன் கன்னடத்தில் பேச, நான் தமிழில் பேசுவேன். இருந்தும் அவன் என் தோளில் கை போட்டுப் பெங்களூரில் உள்ள அத்தனை வீடுகளும் செங்கல் செங்கல்லாக எனக்காகத்தான் கட்டப்பட்டிருப்பது போல், 'நீவு பன்னி, ஸ்வாமி! நானு தோர்ஸ்தினி' (நீங்க வாங்க, நான் காட்டுகிறேன்) என்று என்னை ராஜாஜி நகர், ஹொசஹள்ளி என்று அலையவிட்டான்.

இரண்டு மூன்று வாரம் அவனுடன் சுற்றிய பிற்பாடு பெங்களூரில் வீட்டுச் சொந்தகாரர்கள் எல்லாருமே விலக்கில்லாமல் பகற்கொள்ளைக்காரர்கள் 'என்கிற முடிவுக்கு வந்தேன். கிருஷ்ணப்பா சளைக்காமல் வீடுகளை காட்டிக் கொண்டிருந்தான். என் மனைவி தினப்படி இரண்டு கடிதம் எழுதி அழ ஆரம்பித்துவிட்டாள். நான் 'தனிமை' என்ற தலைப்பில் கவிதை எழுத ஆரம்பித்தேன். வீடு என்னவோ புகைக்குள் புதைந்த கனவு போலத்தான் தென்பட்டது. சிக்கவில்லை, என் வாடகைக்கும், என் அட்வான்சுக்கும்

கடைசியில் ஒரு நாள், ராத்திரி எட்டரை மணிக்குக் கிருஷ்ணப்பா என்னைத் தேடிக்கொண்டு விடுதிக்கு வந்தான். ''பன்னி ஸ்வாமி பேகு!'' (விரைவில் வாருங்கள்) என்றான்.

''எங்கே?''

''இன்னூறு ரூபாய் வாடிகே. அட்வான்ஸ் ஜாஸ்தி பேடா ஆல் எலக்டிரிக். மூணு ரூமு.''

''எல்லி?'' என்றேன்.

''ராஜாஜி நகர்.''

என்னால் நம்ப முடியவில்லை. ஏதோ சூட்சுமம் இருக்கிறது. ராத்திரி வேளையில் காட்டுகிறான். உன்னிப்

பாகக் கவனிக்க வேண்டும். எதற்கும் போய்ப் பார்ப்பதில் என்ன நஷ்டம்?

வீட்டுக்காரர் சீமான் போல் பெரிதாகச் சிரித்து வரவேற்றார். இரண்டு அறை வீடு. முப்பதுக்கு நாற் பதுக்குக் கச்சிதமாகக் கட்டப்பட்ட வீடு. அவ்வளவு புதிசு இல்லை. உள்ளே ஓர் அறையில் மொஸாய்க் போட் டிருந்தது. அலமாரிகள் இருந்தன. ஜன்னலைத் திறந்தால் அதோ போஸ்டாபீஸ். இன்னும் கொஞ்சம் போனால் காலேஜ். கூப்பிடு தூரத்தில் கடை, கல்யாண மண்டபம் வேறு என்ன வேண்டும்?

குழாயைத் திறந்து பார்த்தேன். காவேரி. இரண்டு அறையிலும் அண்ணாந்து பார்த்தேன். மின் விசிறிகள் இருந்தன சமையல் அறையில் எட்டிப் பார்த்தேன். மின் இணைப்புகள் காணப்பட்டன. வீட்டை ஒட்டிக் கொஞ் சம் தோட்டம். வாழை, துள்சி.

''வாடகை எவ்வளவு?''

''இருநூறு!''

''அட்வான்ஸ்?''

''உங்கள் இஷ்டம்!''

என்னால் நம்ப முடியவில்லை. ''உங்களை அப் பட்டமா ஒரு கேள்வி கேட்கட்டுமா?'' என்றேன்.

''ஏன் இவ்வளவு பெரிய வீட்டைக் குறைந்த வாட கைக்குக் கொடுக்கிறேன்? அது தானே?''

''ஆம்.'' சிரித்தேன்.

''எனக்கு பைசா முக்கியம் அல்ல. மனுஷா தாம் முக்கியம். உங்களைப் பார்த்த உடன் பிடித்துவிட்டது. எத்தனையோ ஈரானியர்கள் எழுநூறு வரை தருவதாகக் கேட்டார்கள். நான் மறுத்து விட்டேன். பணமோ? பெரிசு? பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார்'' என்று கூறி,

சமஸ்கிருதச் சுலோகத்தைச் சொல்லி அர்த்தத்தைச் சொன்னார்.

நான் செக் புத்தகத்தைப் பிரித்தேன். "இன்றைக்கு" பணம் வேண்டாம். இருட்டின பிறகு பணம் வாங்கக் கூடாது. நீங்கள் உங்கள் மனைவியையும் கொண்டு வந்து காட்டுங்கள். எனக்கு அவசரம் இல்லை."

"எனக்கு அவசரம் வந்த வாய்ப்பை விட்டுவிடக் கூடாது" என்றேன்.

"நான் வாக்குத் தவறமாட்டேன்வீடு உம்முடையது" என்றார் அவர்.

வெளியே வந்ததும், "கிருஷ்ணப்பா தாங்கள்..." என்றேன்.

"தும்ப ஒள்ளே யவரு! (ரொம்ப நல்லவர்) என்ன கமிஷன்?" என்றார்.

புதுசாகக் கல்யாணம் பண்ணிக்கொண்டு குடித்தனம் துவங்குவதில் இவ்வளவு சிரமங்களா? ரேஷன் கார்டு காஸ் சிலிண்டர் என்று அலைந்தேன். ஒரு ஸ்கூட்டர் வாங்க முன் பணம் கட்டினேன். பால் கார்டுக்கு விசாரித்தேன்.

ஆனால் என் மனைவி பன்னிரண்டு பெட்டிகளுடன் வந்து இறங்கியபோது பொறுப்பாக எல்லாக் காரியங்களையும் செய்து முடித்துவிட்டதில் பெருமையாக இருந்தது. இனிமேல் நானும் என் மனைவியும் ஒரு சந்தோஷ வானவில்லின்கீழ்ச் சதா சிரிப்புடன் இன்பத்தில் திளைக்க வேண்டியதுதான்பாக்கி. ஆனால் அது அவ்வளவு சுலபம் அல்ல! மனைவி வந்து சேர்ந்து ஒரு வழியாக எல்லாம் சரி ஆகி மூன்றாவது அல்லது நாலாவது நாள் மேற்படி வானவில் கரைந்து போயிற்று சாயங்காலம் ஆபிசிலிருந்து திரும்புகையில் வாசலில் கன்னத்தில் கை வைத்துக்கொண்டு மனைவி உட்கார்ந்திருந்தாள்.

''என்ன?''

''சரியான வீடு பார்த்து வைத்திருக்கிறீர்கள்!'

''ஏன்?''

''உங்களுக்கு என்ன? ஒரு வீடு கிடைச்சா விசாரிச்சு பார்க்க வேண்டாமா?''

''என்ன ஆச்சு? சொல்லேன்.''

''சொல்ல வேண்டாம். அப்படியே நின்னு நீங்களே கேளுங்க.''

''யாரை கேக்கணும்?''

''ஒருத்தரையும் இல்லை. சும்மா நின்னு கேளுங்க '' கேட்டேன். ஏதாவது அழுகிற சத்தமா? எருமை மாடா? அல்லது பக்கத்து வீட்டில் ஆர்மோனியப்பெட்டி அலறலா
''ம் ஹூம். ஒன்றும் இல்லை.''

''கொஞ்சம் பொறுங்க.''

அடுத்த நிமிஷம் அந்தச் சப்தம் என்னைத் தாக்கியது! ''ஐயோ! ஐயையோ! என்னை விட்டுடுங்க! ஐயோ போச்சு. முழங்கால் போச்சு! கை போச்சு! மண்டைல மட்டும் அடிக்காதீங்க, எசமான்!'' ஒரே அலறல்! குரலில் அத்தனை வலியும் தென்பட்டது. அச்சம், துன்பம் எல்லா வற்றுக்கும் எல்லையாகப் பெரிய குரலில் அலறல்.

''காலையிலேருந்து அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு தடவை இந்த அலறல்!'' என்றாள் மனைவி.

''யாரோ யாரையோ அடிக்கிறாங்க ''

''அப்பா! கண்டுபிடிச்சுட்டீங்களே! பின் பக்கத்திலே போலீஸ் ஸ்டேஷன், அங்கே நடக்கிறது இந்தப் பூசை, வருஷம் பூரா இந்த அலறல் கேட்குமாம். இதனாலதான்

இதுக்கு முன்னால இருந்தவங்க காலி செஞ்சுட்டுப் பேரய்ட்டாங்களாம்.''

''ஐயோ! முட்டி! முட்டி போச்சு விட்டுடுங்க முதலாளி''

''ஆனா இதுநாள் வரைக்கும் அந்தச் சப்தம் கேட்கலையே! பின்னால் போலீஸ் ஸ்டேஷன் இருந்தா என்ன?''

'வசுந்தரா, இங்கே வா'' என்று வாசல் கேட்டில், நாங்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கூப்பிட்டாள் என் மனைவி.

''வசுந்தரா, தினம் இந்தச் சத்தம் கேட்கறதா?''

''வீரபத்ரையா டியூட்டியில் இருந்தால்தான் கேட்கும் அவர்தான் அப்படி அடிப்பார்.''

''வீரபத்திரையா யாரு!''

''இன்ஸ்பெக்டர். அவர் தான் கைதிகளைப் போட்டு அடிப்பார். கொலை பண்ணிடுவார்.''

''அட பாவி!''

''வீரபத்திர ஐயாவோ, சூரபத்திர ஐயாவோ, எனக்கு தாங்கலே, முட்டியில் படுகிறதா. ரன்னிங் காமெண்டிரி மாதிரி அடி மண்டையில் படுகிறதா என்று சொல்லிச் சொல்லி அலறுகிறான், ராத்தூக்கம் வராது. இந்த மாதிரி சத்தம் எனக்கு உதவாது. எனக்குத் தாங்காது. மூணே நாளில் பைத்தியம் பிடிச்சுடும்'' என்றாள்.

சற்று நேரம் மௌனமாக இருந்தேன்.

''வீடு பார்க்கிறபோது இதெல்லாம் விசாரிக்க வேண்டாமோ?''

''என்ன செய்யச் சொல்றே?'' என்றேன் எரிச்சலுடன்

''வேற வீடு பார்க்கச் சொல்றேன்.''

''வேற வீடா? எண்ணிப் பதினைந்து நாள் ஆகலே! மறுபடியும் கிருஷ்ணப்பாவா?''

''ஐயோ. ஐயோ!''

ஐயோ, ஐயோ என்றது தான் அல்ல. பின் பக்கம்.

''என்னடா' 200 ரூபாய்க்கு இவ்வளவு பெரிய வீடு குடுக்கிறானேன்னு யோசிக்க வேண்டாம்?''

''போச்சு, உயிர் போச்சு. என்னைய்யா இங்க போய் அடிக்கறீங்க? எம்மாடி! ஆத்தாடி! வேண்டாங்க, பெல்ட் வேண்டாங்க.''

''நம்ம வீட்டிலதான் நன்னாக் கேக்குமாம்''

வீரபத்திரையா! பெயரிலேயே மீசை இருந்தது; தாட்டியாக, ஆஜானுபாகுவாக இருப்பார்போல. இரத்தத்தைக் கண்டு பயப்படாதவர்போல இருக்கிறது.

சாதாரணமாக அண்டை வீட்டுக் கலகம், சண்டை என்றால் என்ன செய்வார்கள்? போலீஸ் நிலையத்தில் புகார் செய்வார்கள். போலீஸ் நிலையத்திலிருந்தே சத்தம் வருகிறது. யாரிடம் புகார் செய்வது? யோசிக்க வேண்டிய விஷயம்.

காபி டிபன் சாப்பிட்டுவிட்டுப் பின்புறம் சென்றேன். அடுத்த தெருவில் இருந்த போலீஸ் நிலையத்தின் பின்புறம் எங்கள் வீட்டுப் பின்புறத்துடன் ஒட்டிக் கொண்டிருந்தது. சுவர் உயரமாக இருந்தது, துணி துவைக்கிற கல்லில் ஏறி நின்று எட்டிப் பார்த்துவிட்டு உடனே இறங்கி விட்டேன்.

''ஏன்? என்ன அங்கே?'' என்றாள்.

''ஓர் ஆளுக்கு மூக்கெல்லாம் இரத்தம்.''

அடுத்த தெருவுக்கு நடந்து சென்றேன். அந்தப் போலீஸ் நிலையத்தின் முகப்புத் தெரிந்தது. ஆர்ச் வளையத்தில், 'சி—3. போலீஸ் ஸ்டேஷன்' என்று எழுதியிருந்தது. ரோஜா வர்ணக் குரோமஸாம் சிவப்புப்

பெயிண்ட்டு அடித்திருந்தது. சில கான்ஸ்டபிள்கள் இருந்தார்கள். ஜீப் நின்று கொண்டிருந்தது.

வீரபத்திரையா உள்ளேதான் இருக்க வேண்டும். தோளில் சவுக்கத்தைப் போட்டுக் கொண்டு சிலர் நின்று கொண்டிருக்க, ஒரு கான்ஸ்டபிள் என்னைப் பார்த்து ''என்னையா பார்க்கறே?'' என்று கேட்டார்.

''ஏய்யா உங்களுக்கே நல்லாயிருக்கா? மாட்டை அடிக்கறாப்பல அடிக்கறீங்களே! அவன் மனுஷன் இல்லையா? உங்களுக்கெல்லாம் குழந்தை குட்டிகள் கிடையாதா?'' என்று கேட்கத் தைரியம் இல்லாமல், ''ஒண்ணுமில்லே'' என்று கூறி வீடு திரும்பினேன்.

நான் என் வாழ்நாளில் அதுவரைக்கும் போலீஸ் ஸ்டேஷனில் நுழைந்தது கிடையாது. ஸ்ரீரங்கத்தில் என் நண்பனின் சைக்கிளில் விளக்கு இல்லாமல் போனதற்காக ஒரு தடவை ஒரு போலீஸ்காரர் காற்றைப் பிடுங்கி விட்டதுடன் சரி. சட்டத்துக்கும் எனக்கும் எந்தவிதத் தொடர்பும் ஏற்படவில்லை. இப்போது போலீஸுக்கு எதிராகப் புகார் செய்யத் திராணியில்லை, எனக்கு.

இருந்தும் என் மனைவி சொன்னபடி அந்தச் சத்தம் சகிக்க முடியவில்லை. பல நாட்கள் இராத்திரி இரண்டு மணிக்கு திடீரென்று அலறல் கேட்கும்.

இந்த வீரபத்திரையாவுக்கு ஒரு கால அட்டவணை கிடையாதோ? எந்த வேளையில் நிமிர்த்திக் கட்டுவது என்று ஒரு விவஸ்தை வேண்டாமா? ''இன்னிக்கு வியாழக்கிழமை. இந்த வீரபத்திரையா யாரையும் அடிக்க மாட்டார். நிம்மதியாகத் தூங்கலாம்'' என்று சொல்ல முடியாது. எப்போது வேண்டுமானாலும் அலறல் கேட்கும்.

வீரபத்திரையாவைப் பார்க்காமலேயே அவர் மேல் வெறுப்பு அதிகமாயிற்று. என்ன மனுஷன்? இப்படியா

அடிப்பது? மனிதாபிமானம், மனிதத் தன்மை இதெல்லாம் கூட வேண்டாம்; ஆனால் கருணை?

''யாவரும் இந்த வீட்டில் மூணு மாசத்துக்கு மேல் இருந்ததில்லையாம். மூணு மாசம் அவா எப்படி இருந் தான்னு ஆச்சரியமா இருக்கு.''

''இரு சாவித்திரி, அதற்கு ஒரு வழி பண்றேன்.''

''ஒரே வழி, வீட்டைக் காலி பண்றது. போலீசுடன் நம்மால் மன்றாடிக் கொண்டிருக்க முடியாது''

''பார்க்கலாம்'' என்றேன்.

யாராவது கழுத்தில் மணி கட்ட வேண்டாமா? எல்லாரும் காலி பண்ணிக் கொண்டிருந்தால் எப்படி? இந்த அராஜகத்தை எப்படி நிறுத்துவது? எனக்கென் னவோ போலீசுக்கு அப்படி அடிக்க உரிமை கிடையாது என்று தோன்றியது. அப்படி அடிப்பது சட்ட விரோத மானது, குரூரமானது, சட்டக் காவலர்களே சட்டத்தை மீறினால்?

என் நண்பன் வக்கீல் சாரதியிடம் கேட்டேன். கேஸ் போட முடியாது. போலீஸ் சூப்ரெண்டுக்குப் புகார் லெட்டர் எழுதலாம்'' என்றான்.

''சரி, போட்டுடலாம், சாரதி.''

''ஆனா, அதில் ஒரு அபாயம் இருக்கு. அந்த இன்ஸ் பெக்டர் கறுக்கட்டிண்டு ஒருநாள் உன்னையும் அதுமாதிரி உதைச்சாத் தாங்குமா, உனக்கு? இந்த ஆளை மாத்திட லாம். ஆனால் இன்னொரு கஞ்சப்பா வருவார். அவங் களுக்குள்ளே ஒத்துமை ஜாஸ்தி. டின் கட்டி விடுவான் உன்னை!''

''சத்தியமாகத் தாங்காது, வேண்டாம்.'

''ஒண்ணு செய்யேன். வேற பேரில் எக்ஸ்பிரஸ் பத்திரிகை ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதிப் போடு.

அவங்க பிரசுரிச்சா இதை விசாரிப்பாங்க. கொஞ்சம் சலசலப்பு ஏற்படும்.''

''என்ன செய்வாங்க?''

''அடிக்கிறதை நிறுத்த மாட்டாங்க. ஆனா, போலீஸ் ஸ்டேஷனை ரெஸிடென்ஷியல் ஏரியாவிலிருந்து தள்ளி வேற இடத்துக்கு மாத்தலாம்.''

என் பிரசித்தி பெற்ற கடிதம் செப்டம்பர் 18-ஆம் தேதி பிரசுரமாகியது

'அன்புள்ள ஐயா,

பெங்களூர் போலீசுக்குக் குற்றவாளிகளிடமிருந்து உண்மையை வரவழைக்க எவ்வளவோ முறைகள் இருக்கலாம். ஆனால் ராஜாஜி நகர் ஸி-3 போலீஸ் நிலையத்தின் முறை எல்லாவற்றுக்கும் சிகரம் நிலையத்துக்குள் செல்பவர்கள் அடிபட்டு அலறும் அலறலில் திடுக்கிட்டு விழித்து எழுந்த அக்கம் பக்கத்தினர்கள் ஏராளம். போலீஸ் தன் முறைகளை மாற்றிக்கொள்ளும் என்று தோன்றவில்லை. இடத்தையாவது மாற்றிக்கொள்ளக் கூடாதா? இப்படிக்குத் தங்கள் தூக்கம் இல்லாத ஜே. வி. வர்மா.'

ஜே. வி. வர்மா என்பவன் என்னுடன் எஸ் எஸ் எல்.சி. படித்தவன். இப்போது அமெரிக்காவில் இருக்கிறான்.

கடிதம் பிரசுரமான மூன்றாவது நாள் மாலை, என் வீட்டு வாசலில் போலீஸ்காரர் ஒருவர் வந்து நின்றார். எனக்கு வயிற்றுக்குள் புளி கரைத்தது என் மனைவி வெலவெலத்துப் போனாள்.

''வேண்டாம், வேண்டாம்னு சொன்னேன். பேசாமல் வீட்டைக் காலி பண்ணிட்டுப் போயிருக்கலாம்.''

''இரு, நான்தான் எழுதினேன் என்று யாராலும் நிருபிக்க முடியாது.''

''சீக்கிரம் வாங்க'' என்று கான்ஸ்டபிள் அதட்டினான். எதற்கும் சாரதிக்குப் போன் பண்ணி விடலாமே என்று தோன்றியது

என் வாழ்க்கையில் முதல் முறையாகப் போலீஸ் நிலையத்துக்குள் நுழைந்தேன். வாசல்புறம் சைக்கிள் இருந்தது மரமேஜை இருந்தது. ஆயுதங்கள் சுவரோரம் சாய்த்து வைத்திருந்தன. ஈட்டி ஈட்டியாகக் கம்பி தெரிந்தது இடது பக்கத்து அறைக்கு இழுத்துச் சென்றார்கள். அங்கே இளவயசாக ஒரு போலீஸ்அதிகாரி உட்கார்ந்திருந்தார். மேஜைமேல் ஜே. வீரபத்திரையா என்று எழுதிய சிறிய பிளாஸ்டிக் போர்டு இருந்தது. இவரா?

இன்ஸ்பெக்டருக்கு இருபத்தாறு வயசுதான் இருக்கும். நறுக்கின மீசை. நன்றாக வெட்டி விடப்பட்ட கிராப். கண்களில் மென்மையும் நளினமும் தெரிந்தன. துல்லியமாக உடை அணிந்திருந்தார்! என்னைப் பார்த்துச் சிரித்த பற்கள் ஒழுங்காக இருந்தன.

''வாங்க, உட்காருங்க!'' என்று எதிர்நாற்காலியைக் காட்டினார். அவர் கைத்தடி பளபளவெனஇருந்தது. அதை உருட்டிக் கொண்டிருந்தார். என்னையே கூர்மையாகப் பார்த்தார். மேஜைமேல்எக்ஸ்பிரஸ்விரித்திருந்தது. அதை எடுத்து, ''போலீஸ் தன் முறைகளை மாற்றிக் கொள்ளும் என்று தோன்றவில்லை. இடத்தையாவது மாற்றிக்கொள்ளக்கூடாதா? என்று வாசித்து, ''சரியா உட்காருங்க, மிஸ்டர் வர்மா'' என்றார்.

''என் பெயர் பிரகாஷ்'' என்றேன்

''ஆனா, ஜே.வி வர்மாங்கற பேர்ல லெட்டர் எழுதுவீங்க இல்லையா?''

''இது நான் எழுதியதில்லை.''

''இது நீங்க எழுதினதுதான்.''

''என்ன ஆதாரத்தின் பேரில் சொல்றீங்க?''

''போலீஸை நீங்க தப்பா எடை போடறீங்க. மிஸ்டர் பிரகாஷ்! இந்த ஸ்டேஷன்லே அடி வாங்கறவங்க கூச்சல் போடறது உங்கள் வீட்டில மட்டுந்தான் அதிகமாகக் கேக்கும். மற்ற வீடுகள் எல்லாம் தள்ளியே இருக்கின்றன. எதிர்த்தாப்பல ஸ்டேஷன். பின் பக்கம் உங்க வீடு. அதனால் இந்த லெட்டர் எழுதினதுக்கு முதல் ஸஸ்பெக்ட் நீங்க தான்.''

''நான் எழுதலே.''

''உங்க கை நடுங்குகறதிலிருந்தே தெரிஞ்சு போச்சு நீங்கதான்னு. என்னால அதை ஊர்ஜிதம் செய்ய முடியும். உங்க கையெழுத்தை வச்சுக்கிட்டு... ரொம்பச் சுலபம்.'' எனக்கு வேர்த்துவிட்டது! கடிதத்தை டைப் அடித்து இருக்க வேண்டும்.

''பரவாயில்லை. நீங்க லெட்டர் எழுதின்து குத்தம் இல்லை. அதுக்காக உங்களை நாங்க ஒண்ணும் செய்திட முடியாது. கருத்துச் சுதந்தரம் இருக்கு எல்லோருக்கும். லெட்டர் எழுதினதுக்காக உங்களைக் கண்டிக்கக் கூப்பிடல்லே.''

''பின்னே?''

''மிஸ்டர் பிரகாஷ், உங்க வீட்டிலே நிதம் கூச்சல் கேட்குதா?''

''ஆமாம். பெரிய தொந்தரவு. ஒரு மனுஷன் அந்த அளவுக்கா அடிக்கிறது? மனிதத் தன்மையற்ற செயல்.''

''ஒத்துக்கறேன், மிஸ்டர்!''

''உங்களுக்கு அவ்வளவு அடிக்கறதுக்குச் சட்டம் உரிமை தரதான்னு எனக்குச் சந்தேகமா இருக்கு.''

''சட்டப்படி எனக்கு அடிக்க உரிமை கிடையாது. ஒப்புக்கறேன்.''

"அதை மீறி அடிக்கிறீர்களே!"

"ஆமா."

"பின்னால வருத்தப்பட மாட்டீங்களா அதுக்கு?"

"இல்லை மிஸ்டர் பிரகாஷ். அப்படி இல்லை. நான் எல்லா கைதிகளையும் அடிக்கறதில்லே. ஒரு சிலரை மட்டும்தான்."

"ஒருத்தரையும் அடிக்கவே கூடாது. தண்டிக்கறத்துக்குச் சட்டம் இருக்கிறபோது..."

"அப்படியா? சட்டத்தில் உள்ள தண்டனை போதவில்லை என்றால்?"

"அப்படிக் கூட கேஸ் இருக்கா, என்ன?"

"இருக்கு மிஸ்டர் பிரகாஷ். உங்களுக்குத்தெரியாது. ஆனா உங்க வீட்டுல இந்தக் கைதிகள் சத்தம் போடறது கேட்டுத் தொந்தரவு ஏற்படறதுக்கு வருத்தப்படறேன். ஒரு சுவர் கட்டுவதற்கு அநுமதி கேட்டிருக்கேன். இன்னும் ரெண்டு மாசமானா, இவ்வளவுசத்தம் கேட்காது. ஒண்ணு ரெண்டு பெரிய அலறல் கேட்கும் அது உங்களுக்குப்பழகி விடும், எனக்குப் பழகி விட்டாற்போல."

நான் இன்ஸ்பெக்டரை முறைத்தேன். 'என்ன மாதிரி மூர்க்கன் இவன்?' எழுந்தேன்.

"மிஸ்டர் பிரகாஷ், போவதற்கு முன் இதைக் கேளுங்கள்.. நான் எல்லாக் கைதிகளையும் அடிப்பதில்லை. ஒரு சிலரைத்தான் அடிக்கிறேன். ஏன் அடிக்கிறேன் என்று சொல்கிறேன்... த்ரி, எய்ட், ஸெவன். அந்த ரத்தினத்தைக் கொண்டு வா."

பின் பக்கத் தாற்காலிகச் சிறையிலிருந்து கதவைத் திறந்து ஒரு முறைப்பான கறுப்பான ஆசாமியைக் கான்ஸ்டபிள் அழைத்து வந்தார். அவன் முகம் அடிபட்டு வீங்கி இருந்தது.

"மிஸ்டர் பிரகாஷ். இவனைத்தான் நேற்று ராத்திரி அடித்தேன். நன்றாகவே அடித்தேன்."

''கேட்டது'' என்றேன். அவன் அலறிய அலறல்கள் இன்றும் என் காதுகளில் ரீங்கரிக்கின்றன.

''என்ன செய்தான், சொல்லட்டுமா? பஸ் ஸ்டாண்டில் திருடினான், அவ்வளவுதான். என்ன திருடினான்? ஒரு நகையை, அவ்வளவுதான். நகை எங்கே இருந்தது? ஒரு பெண்ணின் காதில், அவள் தோடு. எப்படித் திருடினான்? ஒரு கத்தியால் அவள் காதை அறுத்தான்.

''ஐயோ! அப்படியா?''

''திருடி ஓடிப் போய்த் தடுக்கி விழுந்து பிடிபட்டிருக்கிறான், மிஸ்டர் பிரகாஷ் அவனை ராத்திரி கொண்டு வந்தார்கள். அந்தப் பெண் காது பூரா ரத்தம். அவள் காது தனியாக நகையுடன் அப்படியே துண்டாக இருக்கிறது. பார்க்கிறீர்களா?''

சரக்கென்று மேஜை டிராயரைத் திறந்து எடுத்துக் காட்டினார். அப்படியே உப்பி வீங்கிப் போய் ஒரு கருநீல ரத்தக் குதறலின் நடுவில் ஒரு மினுமினுப்பு. பார்க்கவே கண்ணராவியாய் இருந்தது.

''வேண்டாம்! வேண்டாம்! உள்ளே வைத்து விடுங்கள்.''

''நிஜ வைரங்கூட இல்லை, அந்தத் தோடு! அதன் மொத்த மதிப்பு எட்டு ரூபாய்தான்! சொல்லுங்க, இந்தக் குத்தத்துக்கு நீதிபதி அளிக்கும் தண்டனை என்னவா இருக்கும்? சிறை. வேளாவேளைக்குச் சாப்பாடு! சோப்புக் கட்டி! இப்படி வசதி போதுமா? அந்தப் பெண் கதறித் துடிச்சாளே? எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள்! எதுக்காக? பஸ்ஸுக்குக் காத்திருந்ததற்காகவா? இல்லை, எட்டு ரூபாய்க்குப் பளபளப்பான நகை போட்டுக் கொண்டிருந்தாளே, அதுக்கா? எதுக்காக அவளுக்கு அந்த தண்டனை? அவள் கூக்குரலை யார் கேட்பது? அவளுக்கு அத்தனை வேதனை கொடுத்த இவனுக்கு வலி என்றால் என்னன்னு தெரிய வேண்டாமா? எப்படி வலிக்கும்னு இவன் அநுபவிக்க வேண்டாமா? சொல்லுங்க! இவனை அடிச்சு நொறுக்காமல் விட்டுடறதா? சொல்லுங்க, மிஸ்டர் பிரகாஷ்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

பதில் தெரியவில்லை. 

# 17

# ஒரு லட்சம் புத்தகங்கள்

**சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்**

—*மகாகவி*

WELCOME TO DELEGATES OF
BHARATHI INTERNATIONAL

*நீல வண்ணத்தில் எழுத்துக்கள் வெள்ளைத் துணியில் ஐந்து நட்சத்திர ஓட்டலின் வாயிலில் ஆடின. தலைப் பாகைக்காரரின் படம் கீழே துடித்துக் கொண்டிருந்தது. அருகே பல வர்ணக்கொடிகள் சஞ்சலித்துக் கொண்டிருந் தன. டாக்டர் நல்லுசாமி கண்ணாடிக் கதவைத் திறப்ப தற்கு முன் சேவகன் திறந்து புன்னகைத்தான். உள்ளே குளிர் பதனம் செய்யப்பட்ட அரங்கில் கம்பளத்தில் தமிழறிஞர்கள் நிறைந்திருந்தார்கள் புதுக்கவிஞர் 'கேக்' கடித்துக் கொண்டிருந்தார் சாகித்திய அகாதமி சிகரெட் பற்றவைத்துக் கொண்டிருந்தார் பரிபாடல் சோபாவில் உட்கார்ந்து கொண்டு தொடைமேல் காகிதம் வைத்து எழுதிக்கொண்டிருந்தார். உரையாடலில் தமிழ் உலவி யது.*

*''தமிழ்நாட்டிலே சாஸ்திரங்களில்லை உண்மையான சாஸ்திரங்களை வளர்க்காமல், இருப்பனவற்றையும்*

மறந்துவிட்டு, தமிழ்நாட்டுப் பார்ப்பனர் பொய்க் கதைகளை மூடரிடம் காட்டி வயிறுபிழைத்து வருகிறார்கள்..!'

''இதைச் சொன்னது யாரு, சொல்லுங்க பார்க்கலாம்?''

''பேரறிஞர் அண்ணாங்களா?''

''இல்லைங்க. பார்ப்பனரான சுப்பிரமணிய பாரதி. 'காற்று'ன்னு வசன கவிதை படிச்சுப் பாருங்க.''

''அவரு எல்லாவிதத்திலும் புரட்சியாளருங்க ஆயிரத்துத் தொளாயிரத்துப் பத்து இருபதுகளில் ஒரு பார்ப்பனர் இந்த மாதிரி சொல்றதுக்கு எத்தனை தைரியம் வேணும்!''

டாக்டர் நல்லுசாமி அவர்களை அணுக, ''வாங்க வாங்க வாழ்த்துகள்!''

''எதுக்கு?'' என்றார் டாக்டர்.

''அ! தெரியாத மாதிரி கேக்கறிங்க.''

''உண்மையிலேயே தெரியாதுங்க.'' தெரியும்.

''பாரதி பல்கலைக் கழகத்துக்கு உங்களைத்தான் துணைவேந்தராப் போடப் போறாங்களாம்.''

''ஓ அதுவா? எத்தனையோ பேர்களில் என் பேரும் இருக்குது ''

''இல்ல நீங்கதான்னு சொல்றாங்க. அமைச்சர் உங்களை கவனிக்கத்தான் இன்னிக்கு உங்க கூட்டத்துக்கே வராருன்னு சொல்றாங்க.''

''சேச்சே! அமைச்சருக்கு பாரதி மேல அப்படி ஒரு ஈடுபாடுங்க.''

''உங்களை விட்டா பொருத்தமா வேற யாருங்க...?''

''ஏதோ பார்க்கலாம். அதெல்லாம் அவ்வளவு சுலபமில்லைங்க. அரசியல் வேற கலக்குது...'' டாக்டர்

நல்லுசாமி அவர்களை விட்டு விலக "வள்ளுவர் சொல்லி யிருக்காரு:

'மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்'னு.

இப்ப யாருங்க பார்ப்பான்? யாரும் கிடையாதுங்க. அந்த அர்த்தத்தில்தான் பாரதி சொல்லியிருக்காரு..." ரிஸப்ஷனில் அவர் தன் அறைச் சாவியை வாங்கிக் கொள்ளும்போது அந்தப் பெண், "ஸார் யூ ஹேவ் எ மெஸேஜ்" என்று புறாக் கூட்டிலிருந்து ஒரு குறிப்பை எடுத்துக் கொடுத்தாள். "செல்வரத்னம் மூன்று முறை உங்களுக்காக போன் செய்தார்." நல்லுசாமிக்குச் சற்றுக் குழப்பமாக இருந்தது. 'யார் இந்த செல்வரத்னம்? புரியவில்லை.' "தாங்ஸ்" என்று அவளைப் பார்த்தபோது "யூ ஆர் வெல்கம்" என்று புன்னகைத்தபோது அவள் உடுத்தியிருந்த லின்ன ஸாரி டாக்டர் அவர்களைப் படுத்தியது. தன் வாழ்நாளிலேயே முதன் முதலாக மனைவி (டாக்டர் மணிமேகலை)யை விட்டு வந்திருக்கிறார். இந்தப் புன்னகையில் நிச்சயம் வரவேற்பிருந்தது.

'கூடிப் பிரியாமலே ஓரிராவெல்லாம்
கொஞ்சிக் குலவியங்கே
ஆடி விளையாடியே உன்றேன் மேனியை
ஆயிரங்கோடி முறை

நாடித் தழுவி...'

"டாக்டர், வணக்கம்!"

"ஓ, பெருமாள்! வாங்க. எங்க இருக்கிங்க இப்ப?"

"உத்கல்ல! புதுசா டமில் செக்ஷன் ஆரம்பிச்சிருக் காங்க..."

"உத்கல் எங்க இருக்குது?"

பக்கத்தில் பச்சைக் கண்களுடன் ஒரு பெண் பிள்ளை இவர்களைப் பார்த்துச் சிரித்து 'ஹலோ' என்று சொல்ல, டாக்டர் பெருமாள் அறிமுகப்படுத்தி வைத்தார்.

''இது வந்து கத்தரினா. ரஷ்யாவில இருந்து பாரதி ஆராய்ச்சி பண்ண வந்திருக்காங்க. திஸ் இஸ் டாக்டர் நல்லுசாமி!''

''ஆ ஐஸ்ஸீ!'' என்று பெண்மணி அவர் கையைப் பற்றிக் குலுக்கினாள், சற்று வலித்தது. டிராக்டர் ஓட்டும் பெண்பிள்ளைபோல் ஏராளமாக இருந்தாள். வல்லி இடையில்லை, ஓங்கி முன்னிற்கும் மார்பையும் சரியாக மூடாமல் ததும்பினாள்.

''யூர் ரீடிங் பேப்பர், ஆர்ன்ட்யூ?''

''நோ... ஐம் பிரிஸைடிங் !மத்தியானம்... ஆ.ஃப்டர் நூன். யூ நோ டாமில்?''

''எஸ்! காண்ட் ஸ்பீக்!''

''இந்தம்மா பாரதியை வறுமைல ஏன் வாடவிட்டாங்க தமிழுங்கன்னு கேக்குது.''

''அவர் காலத்து தமிழுங்க அவர் பெருமையை உணரலை...''

''டாக்டர்! உங்களுக்குத் துணைவேந்தர் ஆயிருச் சாமே?''

''சேச்சே! இன்னும் எதும் தீர்மானிக்கலைப்பா''

''ஆயிட்டுதுன்னுதான் சொல்றாங்க. உங்களைத்தான் நம்பியிருக்கேன், என்னை உத்கல்ல இருந்து எப்படியாவது ரீடரா கொண்டு வந்துருங்க. சப்பாத்திச் சாப்பாடு. சூடு அதிகமா...? என்னுடைய பைல்ஸுக்கு ஒத்துக்கிடலை!''

''பாக்கலாங்க, முதல்ல ஆகட்டும்'' செல்வரத்னம். எங்கேயோ கேட்ட மாதிரி பேராக இருக்கிறதே. ரஷ்யியைப்

பார்த்து மறுபடி புன்னகைத்து விட்டு டாக்டர் மெத் தென்ற மாடிப்படிகளில் ஏறும்போது உற்சாகமாகத்தான் சென்றார். மணிமேகலைக்குச் செய்தி சொல்ல வேண்டும். அவளுக்குத்தான் சந்தோஷமாக இருக்கும்! சே! அதற்குள் எத்தனை கோட்டைகள்!

மெஸ்ஸனைன்னைத் தாண்டியதும் இங்கிருந்தே மாநாட்டு முதல் ஹால் தெரிந்தது. அதன் வாசல் ஏர்கண் டிஷனுக்கு அடைத்திருந்ததால் உள்ளே பேச்சு கேட்க வில்லை. அவ்வப்போது உள்ளேயிருந்து டெலிகேட் ஒருவர் டாய்லெட் போகவோ அல்லது முந்திரிப்பருப்பு கேக்குடன் தயாராக இருந்த காபி சாப்பிடவோ கதவைத் திறந்தபோது, "அவன் சர்வதேசக் கவிஞன்! பிஜி மக்களுக்காக இங்கிருந்து கண்ணீர் வடித்தான் 'மாகாளி பராசக்தி உருசிய நாட்டினிற் கடைக்கண் வைத்தாள்' என்று ரஷ்யப் புரட்சியைப் பற்றிப் பாடினான் அவனன்றோ..." என்று மாநாடு கசிந்தது. பல பேர் டாக்டரை வணங்கினார்கள். பரிச்சயமில்லா முகங்கள். எல்லோருக்கும் தெரிந்திருக்கும். துணைவேந்தர் என்றால் சும்மாவா? அமைச்சர் அதற்குத் தான் பிற்பகல் கூட்டத் துக்கு வருகிறார். என்னைக் கணிக்கத்தான்; நல்லுசாமிக்கு உள்ளுக்குள் புல்லரித்தது. திறமைப்படி கொடுக்க வேண்டு மானால் அவருக்குத்தான் கொடுக்க வேண்டும் தமிழ் நாட்டில் அவரைக் காட்டிலும் பாரதி கவிதைகளில் பரிச் சயமுள்ளவர் யாரும் கிடையாது. 'பாரதி கவிதைகளில் சமத்துவம்' என்று டாக்டர் பட்டத்துக்கு அவர் எழுதிய ஆராய்ச்சித் கட்டுரை இன்னும் ஒரு மைல் கல்! மத்தியானக் கூட்டம் தொடங்க இன்னும் இரண்டு மணி நேரம் இருந்தது. ஆனால் திறமை மட்டும் போதாதே. அறைக்குச் சென்று சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு வரலாம். முடிந்தால் மணிமேகலைக்குத் தொலைபேசி மூலம் விவரம் தெரிவித்துவிடலாம்

டாக்டர் லேசர்க,

**'காதல் செய்தும் பெறும்பல இன்பம்,**
**கள்ளில் இன்பம், கலைகளில் இன்பம்,**
**பூத லத்தினை ஆள்வதில் இன்பம்...'**

என்று பாடிக் கொண்டே அறைக் கதவில் சாவியைப் பொருத்தும்போது அறை வாசலில் நின்று கொண்டிருந் தவனைக் கவனித்தார்.

''வணக்கம் ஐயா!''

''வணக்கம்! நீங்க...?''

இருபத்தைந்து சொல்லலாம். ஒல்லியாக இருந்தான். உக்கிரமான கண்களுக்குக் கீழ் அவன் வயசுக்குச் சற்று அவசரமான நிழல்கள். தோளில் பை மாட்டியிருந்தான். அதில் விழாவின் சிறப்பு மலர் எட்டிப் பார்த்துக் கொண் டிருந்தது.

''கண்டு கன காலம்'' என்றான். டாக்டர் அவனைத் தன் ஞாபக செல்களில் தேடினார்.

எங்கோ பார்த்திருக்கிறோம் மையமாக. ''வாங்க! எப்ப வந்தீங்க?''

''இஞ்சாலையா?''

இப்போது ஞாபகம் வந்துவிட்டது. சிலோன்! இவனைச் சிங்களத்தில் பார்த்திருக்கிறோம்.

''நீங்கதானா, செல்வரத்னம்?''

''ஐயாவுக்கு நினைப்பு உண்டு. யாழ்ப்பாணத்தில் சந்திச்சிருக்கோம்'' இப்போது முழுவதும் ஞாபகம் வந்து விட்டது. இவன் வீட்டில் யாழ்ப்பாண உலகத் தமிழ் மகாநாட்டின்போது டாக்டர் இரண்டு நாள் தங்கியிருக் கிறார். ''எங்க வந்தீங்க?''

''சும்மாதானாக்கும். இடை சுகம் விசாரிச்சுக் கொண்டு போவமெண்டு வந்தனாக்கும்!'' மனசுக்குள்

மொழி பெயர்த்துக்கொள்ள வேண்டியிருந்த அவன் தமிழ் சற்று நிரடியது. இருந்தும், "வாங்க! உள்ள வாங்க!" என்றார்.

அறைக்குள் ஆஷ்-டிரே தேடினான். அவனை நாற்காலி காட்ட அதில் விழுந்தான்.

"விழாவில எண்ட பேச்சும் உண்டு" என்றான்.

"அப்படியா! சந்தோஷம். விழாவில கலந்துக்கறதுக் காக வந்திங்களா சிலோன்ல இருந்து?"

"ஆமாம்."

"ரொம்பப் பொருத்தம். சிங்களத் தீவினுக்கோர் பாலமமைப்போம்னு மகாகவி சொன்னதுக்கு ஏற்ப..."

இப்போது அவனை முழுவதும் ஞாபகம் வந்து விட்டது. யாழ்ப்பாணம் மாநாட்டில் இவன் குடும்பமே தமிழில் ஈடுபாடு கொண்டு அவர்கள் வீட்டில் இவருக்கு விருந்து வைத்ததும், இவன் தங்கை இனிமையான குரலில் 'நெஞ்சில் உரமுமின்றி' பாடியதும் நினைவுக்கு வந்தது. அந்தப் பெண் பெயர் என்ன... "உக்காருங்க... ஊர்ல எல்லாரும் சௌக்கியமுங்களா?"

"ஊர்ல யாரும் இல்லிங்க."

"அப்படியா? அவங்களும் வந்திருக்காங்களா? உங்க தங்கச்சி வந்திருக்குதோ?"

"தங்கச்சி இல்லைங்க" என்றான். அவன் கண்களில் பளபளப்பு ஏற்பட்டது.

"என்ன சொல்றிங்க?"

"எண்ட தங்கச்சி, அப்பா, அம்மா எல்லோரும் இறந்துட்டாங்க."

"அடப் பாவமே! எப்ப? எப்படி?"

"ஆகஸ்ட் கலகத்திலதாங்க!"

"ஐயையோ! எப்படி இறந்து போனாங்க?"

"தெருவில் வெச்சு... வேண்டாங்க! விவரம் வேண்டாங்க. நான் ஒருத்தன்தான் தப்பிச்சேன். அதுவும் தற்செயல்."

டாக்டர் மௌனமாக இருந்தார். எப்படி ஆறுதல் சொல்வது? அவன் சிரமப்பட்டுக் கண்ணீரைக் கட்டுப் படுத்திக் கொண்டிருக்கும்போது எது சொன்னாலும் பிரவாகம் துவங்கி விடும் என்று தோன்றியது. இருந்தும் ஏதோ பேச வேண்டிய அவசியத்தில்,

"ஏதாவது சாப்பிடறிங்களா?"

"கோப்பி" என்றான்.

"இத்தனை நடந்திருக்குன்னு நினைக்கவே இல்லை! அதும் நமக்குத் தெரிஞ்சவங்க, நாம பழகினவங்க இதில் பலியா இருக்காங்கன்னா ரத்தம் கொதிக்குது..."

"அதைப் பத்தி இப்பப் பேச வேண்டாங்க நான் வந்தது வேற விசயத்துக்காக."

"சொல்லுங்க. உங்களுக்கு எந்த விதத்தில என்ன உதவி தேவையா இருக்குது?"

"நிகழ்ந்ததெல்லாம் தமிழ்நாட்டில முழுவதும் தெரியாதுண்டுதான் தோணுது. யாழ்ப்பாணம் பொது நுலகத்தில இருந்த ஒரு லட்சம் தமிழ்ப் புத்தகங்களை போலீஸ்காரங்களே எரிச்சாங்க. அது தெரியுமோ உங்களுக்கு?"

"அப்படியா?"

"அருமையான புத்தகங்கள்! பாரதியாரே சொந்தச் செலவில் பதிப்பித்த 'ஸ்வதேச கீதங்கள்' 1908-லேயோ என்னவோ வெளியிட்டது. இதன் விலை ரெண்டணா'ண்டு போட்டு இருந்தது. ஆறுமுக நாவலருடைய முதல் எடிஷன்கள் எல்லாம் இருந்தது. 1899-ல் வெளியிட்ட

சிங்காரவேலு முதலியாருடைய அபிதான சிந்தாமணி முதல் பிரதி! லட்சம் புத்தகங்கள்ளானா எத்தனை தமிழ் வார்த்தைகள்! எண்ணிப் பாருங்க. அத்தனையும் தெருவில எரிச்சாங்க.''

''அடடா!''

''அதை நான் சொல்ல விரும்பறேன். அப்புறம் நான் இந்தியாவுக்கு வந்து பதினைஞ்சு நாளா தமிழ் நாட்டில் பார்த்த சில விஷயங்களையும் சொல்ல விரும்பறேன்''

''எங்க சொல்ல விரும்பறீங்க?''

''இன்றைய கூட்டத்திலதான்!''

''இன்றைய கூட்டம் பாரதி பற்றியதாச்சே!''

''பாரதி பெல்ஜியம் நாட்டுக்காவும் பிஜி தீவினருக்கும் அனுதாபப்பட்ட சர்வதேசக் கவிஞன், ருஷ்யப் புரட்சியை வாழ்த்தினவன்! இன்றைக்கு இருந்திருந்தா சிங்களத் தமிழர்களுக்காக உருகியிருக்க மாட்டானா?''

''கட்டாயம். கட்டாயம்...:''

''அதைத்தாங்க சொல்லப் போறேன்!''

''அதுக்கு இந்த மேடை சரியில்லைங்களே...!''

''இந்த மேடைதான் மிகச் சரியானது. தமிழ் பயிலும் எல்லா நாட்டவர்களும் வந்திருக்காங்க. தமிழக அமைச்சர் வரார். சர்வதேச ஆராய்ச்சியாளர்கள். அனைத்திந்திய தமிழறிஞர்கள் எல்லாரும் வர இந்த மேடையில் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கத்தான் துக்கத்தையும் மறந்து வந்திருக்கறேன்!''

டாக்டர் சற்றே கவலையுடன், ''குறிப்பா என்ன சொல்லப் போறிங்க?'' என்றார்.

''சிங்களத் தமிழர்களை தமிழகம் நடத்தற விதத்தையும் பார்த்தேன். அதையும் சொல்லப் போறேன்.''

''புரியலிங்க.''

''ஐயா! நான் வந்து பதினைந்து தினம் ஆச்சு.முதல்ல மண்டபம் டிரான்ஸிற் காம்ப்புக்குப் போனேன். இலங்கையைத்துறந்து இங்கவந்த தமிழர்கள் என்ன செய்யறாங்க. அவங்களை எப்படி 'டிரீட்' (Treat) பண்ணறாங்கன்னு பாக்கிறதுக்கு...ராமேஸ்வரம் வந்து சேர்ந்த உடனே அவங்களைத் தமிழகம் எப்படி வரவேற்குது தெரியுமோ? டிரான்ஸிற்றர் வெச்சிருக்கியா?டேப் ரிக்கார்டர் கொண்டு வந்திருக்கியா?

''தங்க தமிழ்நாட்டுக்குத் திரும்பி வந்துட்டோ மீண்டு கண்ணில கனவுகளை வெச்சுக்கிட்டு வந்தவங்களுக்கு எல்லாம் ரெண்டேமணிநேரத்திலகலைஞ்சு போயிருதுங்க. அந்த காம்ப்பைப் பார்த்ததும். சிறைக் கைதிங்க பரவாயில்லை! சன்னல் இல்லாத ஓட்டு வீடு பிரிட்டிஷ் காலத்தில க்வாரண்டைன் காம்ப்பா இருந்ததை இன்னும் மாற்றாம வெச்சிருக்காங்க. இரண்டு ரூமுக்குப் பத்து பேற்றை அடைச்சு வெச்சிருக்காங்க அவங்களுக்குஆளுக்கு இரண்டு வாரத்துக்கு எட்டு ரூபா உபகாரப் பணம்! ஆறாயிரம் ரூபா சர்க்கார் கடன் கொடுக்குதுன்னு பேரு. எல்லாம் அப்பிளிகேசனாத்தான் இருக்குது. ஆறு மாதம் காத்திருந்தாலும் லஞ்சமில்லாம வாராது. இவங்க உடமைகளை, கொண்டு வந்த அற்பப் பணத்தை ஏமாற்றிப் பறிக்க எண்ணூறு பேர்! சிலோன் ரூபாய்க்கு எழுபத்து மூணு பைசா கொடுக்கணும். கிடைக்கிறது நாப்பத்தஞ்சுதான் எல்லாரும் திரும்பிப் போயிரலாம், அந்த நரகமே மேல்னு சொல்றாங்க. திரும்ப சேர்த்துக்க மாட்டாங்க! போக முடியாது.

''1964 வரைக்கும் இலங்கையைத்தான் தாயகம்னு நினைச்சுக்கிட்டு இருந்தாங்க திடீர்னு இது உன் தாயகம் இல்லை. தமிழ்நாட்டுக்குப் போ'ன்னு, அழையாத விருந்தாளிங்களா பேப்பரை மாற்றிக் கொடுத்துட்டுக் கப்பலில் அனுப்பிச்சிட்டாங்க. எதுங்க இலங்க தாயகம்?

அங்க பொறந்து வளர்ந்து ஆளாகி ஒரே நாளில் எல்லாம் கலரப்பட்டு இங்கயும் இல்லாம அங்கயும் இல்லாம இவங்களைப் பந்தாடிக்கிட்டு இருக்காங்க. இது ஒரு சர்வ தேசப் பிரச்னை இல்லையா?''

''எல்லாம் சரிதாங்க இதை நீங்க சொல்ல வேண்டிய மேடையைப் பத்தித்தான் எனக்கு...''

''வேற எங்கங்க சொல்ல முடியும்? அரசியல்வாதிங்க கிட்டயா? ஏ.டி.எம்.கே-காரங்க, 'இதுக்குத் தான் நாங்க தமிழகம் பூரா கதவடைப்பு செஞ்சமே'ங்கறாங்க! டி.எம்.கே 'இதுக்குத்தான் நாங்களும் தமிழகம் பூரா கதவடைப்பு செஞ்சமே'ங்கறாங்க!''

''இல்லை இதைத் தமிழ்ப் பத்திரிகைகளில் ஒரு கட்டுரை மாதிரி எழுதலாமே நீங்க.''

''சொல்றேங்க! எல்லாப் பத்திரிகையையும் போய் பார்த்தேன். விகடன்ல சொன்னாங்க; நாங்க அட்டைப் படமே கண்ணீர்த்துளியா ஒரு இஷ்யூலே போட்டாச் சேன்னாங்க, குமுதம் ஆளுங்களைச் சந்திக்கவே முடியலை. குங்குமத்தில விகடன்லே வந்துருச்சேன்னாங்க. ராணியில இதைப் பத்திதான் கட்டுரைத் தொடர்ல நாங்களே எழுதிக்கிட்டிருக்கமேன்னாங்க...''

''நீங்க என்ன எழுதறதா சொன்னீங்க?''

''அந்தப் புத்தகங்களை எரிச்சதைப் பற்றித்தாங்க! ஒரு லட்சம் புத்தகங்க! அத்தனை வார்த்தைகளும் எரிஞ்சு போய் ராத்திரி பூரா வெளிச்சமா இருந்ததை! ஒருத்தர் மட்டும் சொன்னாரு எழுதுங்கன்னு...ஆனா அப்படியே உங்க தங்கச்சி ரேப்பையும் எழுதுங்க. அவங்க கலர் ட்ரான்ஸ்பரன்ஸி இருந்தா கொடுங்க,அட்டையிலேபோடு வோம்-கொஞ்சம் ஹ்யூமன் இன்டரஸ்ட் இருக்கும்னாருங்க! அவர் பேர் சொல்ல விரும்பலை. எனக்கு என் சொந்த சோகத்தை எழுத விருப்பமில்லை. அவளை என் கண் எதிரிலேயே துகிலுரிச்சாங்க! முதல்ல பக்கத்து வீட்டில்

சிங்களக்குடும்பத்திலதாங்க அடைக்கலம் கொடுத்தாங்க... நாள்பூரா கக்கூஸ்ல ஒளிஞ்சிக்கிட்டு இருந்தது! அவங்க உயிருக்கே ஆபத்து வந்திரும்போல நிலையில பின் பக்கமா ஓடிப் போயிருச்சுங்க. சந்துல வெச்சுப் பிடிச்சுத் தெருவில நடுத் தெருவில...என் கண் முன்னாலயே!'' அவன் இப்போது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாமல் அழுதான்.

''ரொம்பப் பரிதாபங்க.''

கொஞ்சநேரம் அழுதுவிட்டு ''எனக்கு இதைச் சொல்லி அனுதாபம் தேடிக்க விருப்பமில்லைங்க. இந்த மாதிரி வன்முறைங்க உங்க ஊர்லேயும் நிறைய நடக்குது. இங்கேயும் றேப்புக்குப் பஞ்சமில்லை. ஆனா அந்தப் புத்தகங்களை எரிச்சது, அது என்னவோ ஒரு சரித்திர சம்பவமாத்தான் எனக்குத்தெரியுது. அந்த நெருப்பிலே இருந்த வெறுப்பு நிச்சயம் சர்வதேச கவனத்துக்குக் கொண்டு வர வேண்டியதுங்க...'' சட்டையில் முழங்கைம் பகுதியில் தன் முகத்தைச் சரியாகத் துடைத்துக்கொண்டு, ''எனக்கு ஒரு நாட்டு 'குடிமகன்'கிறது யாருங்கறதைப் பற்றி ஆதாரமா சந்தேகங்கள்வருதுங்க. சிங்களவர்கள் தமிழர்கள் இரண்டு பேரும் இந்தியாவில் இருந்துவந்தவங்க அவங்க வங்காளம் ஒரிஸ்ஸாவில இருந்துவந்த ஆரியர்களாம் நாங்க ஒண்ட வந்த கள்ளத் தோணிங்களாம், சக்கிலியங்களாம்! இதையெல்லாம் சொல்ல வேண்டாம்? ஆறு லட்சம் பேர் எங்க போவோங்க? என்ன செய்வோங்க? இதெல்லாம் சொல்ல வேண்டாமா?''

டாக்டர் மூக்கைச் சொறிந்து கொண்டார்:''இவ்வளவு விவரமா சொல்ல வேண்டாங்க. ஏன்னா இது இலக்கியக் கூட்டம். இதில அரசியலை நுழைக்கிறது நல்லால்லை. ஒண்ணு செய்யுங்க...''

''அரசியல் இல்லைங்க, மனித உரிமைப் பிரச்னை இல்லையா?''

'சொந்தச் சகோதரர்கள்
துன்பத்திற் சாதல் கண்டும்
சிந்தை இரங்காரடீ—கிளியே!
செம்மை மறந்தாரடீ!'ன்னு

பாரதி பாடலையா? இலங்கைத் தமிழர்களைச் சகோதரர் கள்னுதானே நீங்க எல்லாரும் சொல்றீங்க?''

''அதும் ஒரு விதத்தல வாஸ்தவம்தான். இருந் தாலும்...''

''எனக்கு இதை விட்டா வேற வாய்ப்புக் கிடையா துங்க. ரத்தினாபுரத்தில் நடந்ததைச் சொன்னா கண்ணில ரத்தம்வரும். அதெல்லாம் நான் சொல்லப் போறதில்லை. ஒரு லட்சம் புத்தகங்களை எரிச்சாங்க. அதுக்குப் பதில் ஒரே ஒரு புத்தகத்தை மேடையில எரிக்கப்போறேன்!''

''என்ன புத்தகம்?'' என்றார் கவலையோடு.

''இந்த மாநாட்டு மலரை!''

' எதுக்குங்க அதெல்லாம்...?''

''பாரதி சொன்னதை எதும் செய்யாம ஏர்கண்டிசன் ஓட்டல்லே சாக்லேட் கேக் சாப்ட்டுக்கிட்டு மாநாடுபோட றது எனக்கு என்னவோ பேத்தலாப்படுது. அதனோட சிகரம்தான் இந்த வெளியீடு. இதை மேடையிலே எரிச் சுட்டு, பாரதி சொன்னதை நடைமுறையில செய்து காண் பிங்கன்னு சொல்லப் போறேன். 'சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்'னு அவன் சொன்னது கான்க்ரீட் பாலமில்லை! முதல்ல மனப்பாலம் அமைங்க! அப்பதான் பளிச்சுன்னு எல்லார் மனசிலயும் பதியும் நேரமாயிடுச் சுங்க. ரெண்டு மணிக்கு இல்ல கூட்டம்?'' அவன் எழுந்து வணங்கி விட்டுச் சென்றான் செல்வரத்தினம்!...

டாக்டர் அவன் போன திக்கைத் திகைப்பில் பார்த்துக் கொண்டிருந்தார். சற்று நேரம் யோசித்தார். நிகழ்ச்சி நிரலைப் பார்த்தார். இரண்டவதாகப் பேசுவது

'செல்வரத்தினம், ஸ்ரீலங்கா' என்றிருந்தது. யோசித்தார். நாய்க்குட்டி போலிருந்த டெலிபோனை எடுத்தார். மதுரைக்கு டிரங்க்கால் போட்டார். பிப்பிகால், டாக்டர் மணிமேகலை...''

பத்து நிமிஷத்தில் கால் வந்தது.

''மணி! நாந்தான்.''

''என்ன, விசாரிச்சிங்களா? கிடைச்சிருச்சா?''

''ஏறக்குறைய கிடைச்ச மாதிரிதான். செக்ரட்டேரியட்டிலயே விசாரிச்சுட்டேன். அமைச்சர் கையெழுத்து ஒண்ணுதான் பாக்கியாம்.''

''அப்ப இனிப்பு செய்துர வேண்டியதுதான். இந்தக் கணத்தில உங்ககூட இருக்க...''

''மணி! ஒரு சின்ன சிக்கல்...''

''என்னது? அருணாசலம் மறுபடி பாயறாரா?''

''அதில்லை மணி! இன்னைக்குக் கூட்டத்தில அமைச்சர் வாராரு. எனக்கு முன்னால ஒரு சிலோன்காரன் பேசறதா இருக்கு. நாம யாழ்ப்பாணத்தில உலகத் தமிழ் மாநாட்டில சந்திச்சிருக்கோம். அவன் பேசறான்.''

''பேசட்டுமே, உங்களுக்கென்ன?''

''அதில்லை மணிமேகலை. அவன் சமீபத்தில கலகத்தில ரொம்ப இழந்து போய் ஒரு வெறுப்பில இருக்கான். ஏறக் குறைய தீவிரவாதியா கிறுக்குப்புடிச்ச பயலா இருக்கான்.''

''என்ன செய்யப் போறான்?''

''யாழ்ப்பாணத்தில லட்சம் புத்தகங்களை எரிச்சாங்களாம். அதுக்குப் பதிலா மேடையில விழா மலரை எரிச்சுக்காட்டப் போறேங்கறான். கேக்கறதுக்கே விரசமா இருக்குது. எனக்கு என்னடான்னா கூட்டத்தில கலாட்டா ஆகி எங்கயாவது எனக்கு சந்தர்ப்பம் வரதுக்குள் கலைஞ்சு போச்சுன்னா அமைச்சர் வந்து...''

''த்ரீ மினிட்ஸ் ப்ளீஸ்!''

''எக்ஸ்டென்ஷன் பண்ணுங்க.''

''என்ன, கேக்குதா?''

''கேக்குது கேக்குது. இத பாருங்க. உங்க பேச்சை இன்னைக்கு அமைச்சர் கேக்க வேண்டியது ரொம்ப முக்கியம். நீங்க முன்னாடி பேசிடுங்களேன்.''

''எப்படி? நிகழ்ச்சி நிரல்ல மாறுதல் செய்யணுமே! தலைமை தாங்கறதால, இறுதியுரைன்னா நானு?''

கொஞ்ச நேரம் மதுரை யோசித்தது

''என்ன செய்யச் சொல்றீங்க?''

''எப்படியாவது உங்க அண்ணன் கிட்ட அவசரமா போன் பண்ணிச் சொல்லிடு...''

''அதைத்தான் நானும் யோசிச்சுக்கிட்டு இருந்தேன்.. வெச்சுருங்க.''

''எப்படியாவது···!''

''வெச்சிருங்கன்னு சொன்னனில்லையா? அதிக நேரம் இல்லை. ஒரு டிமாண்ட் கால் போட்டுர்றேன்.''

''சரி மணிமேகலை!''

''கவலைப்படாதீங்க. பேச்சு நல்லா பேசுங்க. கிடைச்சா மாதிரித்தான்னு அண்ணனும் சொல்லியிருக் காரு. அமைச்சர் உங்க பேச்சைக் கேட்டுட்டா போதும் னாரு...''

டெலிபோனை வைத்துவிட்டு டாக்டர் சற்று திருப்தி யுடன் எழுந்தார் மணிமேகலை செய்து காட்டிவிடுவாள். இவ்வளவு செய்யக்கூடியவள் இது என்ன...? இப்போதே அவள் விரல்கள் தொலைபேசியில் செயல்பட்டுக் கொண் டிருக்கும் அவள் சக்தி!

**வாழ்வு பெருக்கும் மதியே சக்தி**
**மாநிலம் காக்கும் மதியே சக்தி**
**தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி**
**சஞ்சலம் நீக்கும் தவமே சக்தி.**

இரண்டு மணிக்குக் கூட்டம் துவங்கியது. எதிரே ஹால் நிரம்பியிருந்தது. வெள்ளைக்கார முகங்கள் முதல் வரிசையில் பளிச்சென்று தெரிந்தன பட்டுப்புடவை உடுத்திய நங்கை மைக்கைத் தொட்டுப் பார்த்துவிட்டு ''எண்ணிய முடிதல் வேண்டும்; நல்லதே எண்ணல் வேண்டும்...'' என்று இனிமையாகப் பாடினாள். மேடையில் பேச இருப்பவர்கள் வரிசையில் ஓரத்தில் செல்வ ரத்தினம் உட்கார்ந்திருந்தான். டாக்டரைப் பார்த்துப் புத்தகத்தை உயர்த்திக் காட்டினான். கவலையாக இருந்தது. என்ன! ஒன்றுமே செய்ய முடியவில்லையா? இரு இரு பார்க்கலாம். அமைச்சர் இன்னும் வரவில்லை. எல்லோரும் வாயிலையே பார்த்துக் கொண்டிருக்க, வரவேற்புரைஞர், ''தலைவர் அவர்களே! உலகெங்கிலுமிருந்து வந்திருக்கும் தங்கத் தமிழர்களே...!'' என்று துவங்க, சலசலப்பு தொடர, அமைச்சர் அங்குமிங்கும் வணங்கிக்கொண்டு நடுவில் நடந்து வந்தார். டாக்டரைப் பார்த்துப் புன்னகைத்து விட்டுத் தன் இருக்கையில் உட்கார்ந்து கொண்டு உடனே தன் முழுக்கைச் சட்டையை உருவி கடிகாரம் பார்த்தார். டாக்டர் அருகில்தான் உட்கார்ந்திருந்தார்.

இப்போது கேட்கலாமா? இது சந்தர்ப்பமா? இல்லை இல்லை. அவர் கேட்கும்வரை காத்திருப்போம்.

பின்னால் பார்த்தார். இன்னும் இருந்தான். கவலை சற்று அதிகமாகியது.

''முதற்கண் பிஜித் தீவிலிருந்து வந்திருக்கும் ஜார்ஜ் மார்த்தாண்டம் அவர்கள் பேசுவார்'' என்று அறிவித்து விட்டு உட்கார்ந்தார்.

''ரெஸ்பெக்டட் அண்ட் ஹானரபிள் மினிஸ்டர் அண்ட் ஃபெலோ டெலிகேட்ஸ்! ஐ'ம் எ தர்ட் ஜெனரேஷன் டமிலியன் அண்ட் ஐ'ம் ஸாரி ஐ'ம் நாட் ஏபிள் டு ஸ்பீக் இன் டமில். பட் தி கிரேட் ஸுப்ரமண்யபாரதி.''

டாக்டர் தன்னை அறியாமல் பின்னால் பார்க்க, போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒரு காகிதத்தைப் பின் வரிசையில் ஓரத்தில் இருந்தவரிடம் காட்டி, ஏதோ கேட்க, அவர் செல்வரத்தினத்தைக் காட்ட, இன்ஸ்பெக்டர் செல்வரத்தினத்தின் பின் நழுவி வந்து தாழ்ந்த குரலில் ஏதோ சொல்ல, செல்வரத்தினம் கலவரத்துடன் உடனே எழுந்து அவருடன் செல்வதைப் பார்த்தார்.

பெரிதாக மூச்சுவிட்டுக் கொண்டார். மணிமேகலை மணிமேகலைதான்! ஒரு மணி நேரத்தில் சாதித்து விட்டாள். அவருக்குள் புன்னகை ஒன்று மலர்ந்தது.

''அடுத்து பேசவிருந்த ஸ்ரீலங்காவைச் சேர்ந்த திரு செல்வரத்தினம் அவர்களை மேடையில் காணாததால் சோவியத் நாட்டைச் சேர்ந்த சுத்தரீனா ஐவனோவாவை அழைக்கிறேன்...''

தினமணி நாளிதழில் மறுதினம் செய்தி வந்திருந்தது.

''டாக்டர் இரா நல்லுசாமி தன் தலைமையுரையின் போது, 'சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்' என்று பாரதி சொன்னது கான்க்ரீட் பாலத்தை அல்ல மனப் பாலத்தை...'' என்றார். அமைச்சர் தன் உரையில் அரசு புதிதாகத் துவக்கப் போகும் பாரதி பல்கலைக் கழகத்துக்கு டாக்டர் நல்லுசாமி துணைவேந்தராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற செய்தியை அறிவித்தார்.

செல்வரத்தினத்தின் விசா ரத்து செய்யப்பட்டு இருபத்துநான்கு மணி நேரத்திற்குள் தாய்நாடு திரும்பிச் செல்லும்படி கட்டளையிடப்பட்ட செய்தி நாளிதழ்கள் எதிலும் வரவில்லை.



# 18

# யாகம்

சிகாகோவின் ஓ-ஹேரா விமான நிலையத்தில் ப்ளேனைத் தவறவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தபோது அருகில் குடுமி சாஸ்திரியை முதலில் கவனிக்கவில்லை காசு போட்டுவிட்டு நாற்காலிக் கைப்பிடியிலே இருந்த குட்டி டெலிவிஷனில் நியூஸ் பார்த்தேன். எப்படி இன்னும் ஐந்து மணி நேரத்தைப் போக்குவது என்று கொட்டாவி விட்டு விட்டுச் சுற்றிலும் மூக்கைத் திருப்பியபோது, சந்தன வாசனை கற்பூர வாசனை அடித்தது. பக்கத்தில் பார்த்தால் சாஸ்திரிகள். அமெரிக்கன்தான் இருந்தாலும் வைதீக சாஸ்திரி போலக் குடுமி. அதை- புதன்கிழமை-புதன்கிழமை சவரம் போலும்- பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு, முரட்டு வேஷ்டி கையால் செய்ததாக இருக்கலாம். கோடிக்கரை துண்டைப் போட்டு, கொண்டு, மாராப்பை மூடிக்கொண்டு மன்னார்குடி ராஜகோபால் சுவாமி கோவிலில் இருந்தால் நம்பக்கூடிய ஆசாமி. சிகாகோவில் என்னைப் பார்த்துச் சிரித்தான். கொஞ்சம் பழுப்பேறிய புத்தகத்தில் சம்ஸ்கிருதத்தில் படித்துக் கொண்டிருந்தான். என்னை மணி என்ன என்று கேட்டான். சொன்னேன்.

''நீங்கள் பாரத தேசமா?'' என்றான். ஆங்கிலத்தில் தான். இண்டியா' என்ற பதம் உபயோகிக்கவில்லை.

''ஆம்.''

''பெயர்.

பதி—15

சொன்னேன். "நீங்கள்?"

"என் பெயர் மிட்சல். அது பூர்வ ஜென்மத்துப்பெயர் இப்போது பார்த்துவாஜன்,"

"இஸ்கான் இயக்கமா?"

"சேச்சே. அவர்கள் யாவரும் போலிகள்," (ஃபோனி என்ற வார்த்தையை உபயோகித்தான்) "நாங்கள் தீவிர நோக்கங்கள் உள்ளவர்கள் 'பேக்டுதி வேதாஸ்.வேதங்கள் என்னும் சொத்தைப் பற்றிப் பாரத தேசத்தவரான உங்களுக்குத் தெரிந்திருக்கும் ரிக், தைத்திரியம், சாம. அதர்வ வேதம்.'

"தைத்திரியம் இல்லை. யஜுர்" என்றேன்.

"தைத்திரியம் என்பது யஜுர் வேதத்துக்குவேறொரு பெயர்' என்றார் எனக்குக் கொஞ்சம் வெட்கமாக இருந்தது. "எனக்கு சம்ஸ்க்ருதம் தெரியாது. நான் ஒரு கம்ப்யூட்டர் இன்ஜினியர். உங்கள் நாட்டில் பயிற்சிக்காக வந்திருக்கிறேன்.'

அவன் சிரித்து. "நான் உங்கள் நாட்டுப் புத்தகங் களைப் படித்துக் கொண்டிருக்கிறேன்."

"ஆச்சரியம் இதை ஒரு முழு வட்டம் என்றுதான் சொல்ல வேண்டும், எங்களுக்கு வேதமும் உபநிஷத்தும் உபயோகமில்லாமல் போய் விட்டது. அவைகள் நீங்கள் பிடித்துக் கொண்டு விட்டீர்கள்."

அவன் புன்னகையுடன் என்னைப் பார்த்தான். 'நீங்கள் தான் இழந்து விட்டீர்கள்" என்றான்.

' இல்லை, அவையெல்லாம் இன்றைய நடைமுறைக்கு ஒவ்வாதவை. படிக்கலாம். அவ்வளவுதான்.',

"யார் சொன்னார்கள்? எங்கள் 'பேக் டு வேதாஸ்' இயக்கத்தில் நடைமுறையிலும்வேதங்களின்படி எல்லாமே செய்து கொண்டிருக்கிறோம்."

''இயலாதது!''

''நீங்கள் வேதங்களைப் படிக்காமல் எப்படிச்சொல்ல முடியும்?''

படித்தவரையே சொல்லலாம்! இம்பாஸிபிள். வேதம் முழுவதும் யாகம் யக்ஞங்கள்தாம்.

'வேதம் முழுவதும் என்று சொல்வது தப்பு வேதம் என்றால் அறிவு. ரிக் வேதம் பல தெய்வங்களுக்குரிய பிரார்த்தனைப் பாடல்களைச் சொல்வது. ஸாமவேதம் இசைப் பொருளை உணர்த்துவது, யஜுர் வேதம்தான் நீங்கள் சொல்கிற மாதிரியாக விதிகளை உணர்த்துவது. இதிலும் கிருஷ்ண யஜுர், சுக்ல யஜுர் என்று இருவகை உண்டு அதர்வண வேதம் மாந்திரீக வசியக் கிரியைகளைக் கூறுகிறது. அதன்பின், ரிக் வேதத்தில் எத்தனை மண்டலம் எத்தனை சூக்தங்கள்'' என்று அவன் தீவிரமாக எனக்குச் சொல்லத் துவங்கியபோது எனக்குச் சிரிப்பு வந்தது. என்ன ஒரு வினோதமான அபத்தம்! கம்ப்யூட்டர் படிக்க வந்த இந்திய அந்தணனுக்கு அமெரிக்கக் குடுமி சாஸ்திரி வேதங்களைப் பற்றி ஓஹேர் விமான நிலையத்தில் அத்தனை நவீனங்களுக்கு மத்தியில் ஃபைபர் நாற்காலியில் காசு போட்டு டெலிவிஷன் யுகத்தில்!

''யாகங்களை நடைமுறையில் நடத்துவது முடியாது என்று சொல்வதும் தப்பு. நாங்கள் எங்கள் வேதபுரியில் வாஜஸநேயி ஸம்ஹிதையில் உள்ள நாற்பது பகுதிகளிலும் உள்ள அத்தனை யாகங்களையும் நடத்திக் கொண்டிருக்கிறோம். அக்கினி ஹோத்திரம், சாதுர் மாஸ்யம் எல்லாம் செய்கிறோம்.''

''வேதபுரியா?''

''ஆம், இங்கிருந்து நாற்பது மைல் தூரத்தில் உள்ளது அதுதான் எங்கள் தலைமைச் செயலகம்.'' அவன் மறுபடி என்னை மணி கேட்டான். மணிக்கட்டைத் திருப்பி மணி

பார்த்து, "இன்னும் நாலரை மணி உள்ளது. உங்களுக்கு இஷ்டமிருந்தால் நான் அழைத்துப் போகிறேன் உங்களுக்கு இஷ்டமிருந்தால் தான்!"

நான் சற்று நேரம் யோசித்துப் பார்த்தேன். போய்த் தான் பார்க்கலாமே. இந்தக் கண்ணாடிக் கூண்டுக்குள் அடைபட்டிருப்பதைவிட இது பரவாயில்லை என்னதான் செய்கிறார்கள் பார்க்கலாம்.

"என்ன சிரிக்கிறீங்கள்."

"நான் ஒரு பிராமணன். என்னைப் போன்ற பேர் இந்தியக்காடுகளில் செய்ய வேண்டிய காரியங்களை ஜெட் வேக நாட்டில் அமெரிக்கரான நீங்கள் செய்கிறீர்கள்."

"தப்பு சிரௌத யாகங்களில் நான்கு வகையான புரோகிதர்கள் பங்கெடுக்க வந்தனர். ஹோதர், உக்காதர், அத்வரியு, பிராமணர் என்று."

அவனுடைய அமெரிக்க சமஸ்க்ருதம் வேடிக்கையாக இருந்தாலும் இவன் என்னைவிட அதிகம், மிக அதிகம் வேதம் படித்தவன் என்பது சுலபமாகத் தெரிந்தது. ஆர்வமான கண்கள். எதை எடுத்துக் கொண்டாலும் அதைத் தீரக் கற்றுக் கொண்டுவிடும் அமெரிக்க ஆர்வம். இவனிடம் வார்த்தை விடக் கூடாது என்று தீர்மானித்து விட்டேன் இருந்தும் என்னதான் செய்கிறார்கள் என்று பார்த்து விடலாம் என்று தோன்றியது. "வருகிறேன்" என்றேன்.

"எங்கள் புருஷமேதத்தில் கலந்து கொள்ள உங்களுக்கு இச்சைதானே?"

"ஆம்" என்றேன்.

அவன் உற்சாகமாக, "வாருங்கள்" என்றான்.

ஏர்போர்ட்டைவிட்டு வெளியே வந்தோம் மூடுபனி விலகியதால் நிமிஷத்துக்குப் பத்து பதினைந்து பிளேன் ரன்வேயில் அசௌகரியமாக இறங்கிக் கொண்டிருந்தன.

எக்ஸ்பிரஸ் வேயில் கார்ச் சங்கிலி தொடுவானம்வரை தெரிந்தது.

இதிலிருந்தெல்லாம் விலகத்தான் வேதபுரி என்றான். அவன் கார் ஏர்போட்டிலிருந்து அரை மைல் தூரத்தில் எட்டாவது அடுக்கில் பார்க் பண்ணியிருந்தது காவிக் கலரில் பிடிவி என்றும், ஓம் என்றும் எழுதியிருக்க சீட்கவர்கள் கூடக் காவி வண்ணத்தில் இருந்தது. கொஞ்ச நேரம் ஊர்ந்து எக்ஸ்பிரஸ் பாட்டையைவிட்டு விலகிவிட்டோம். குறுகிய மவுனமான பாதையில் அமெரிக்காவில்கூட இம் மாதிரி பாதைகள் உள்ளனவா என்று ஆச்சரியப்படும் படியாக இருந்தது. குலுங்கிக் குலுங்கிப் பாதையில் ஆரண்யத்தில் புகுவது போலத் தோன்றியது. ''அவன் பேசிக் கொண்டே ஓட்டினான். உணவு நடைமுறைகள் அத்தனையும் வேதகாலம்தான். வேதங்களில் உள்ள கருத்துக்கள் மனித நாகரிகத்தின் மகோன்னதமான கருத்துக்கள். இப்போது போன்று அவர்கள் சொல்லும்பிக் பாங்க் (Big Bang) தத்துவத்தை ரிக்வேதம் சொல்லியிருக்கிறது. இருளை மூடி இருள் இருந்தது என்றும் மகாப் பிரளயம் ஏற்பட்டு தவம் மூலமாக ஒரு ஏகவஸ்து என்ன...?''

''இந்த மாதிரி கவைக்கு உதவாத புத்தகங்களால்தான் எங்கள் நாடு சீரழிந்து பிற்போக்காக இருக்கிறது. அதையெல்லாம் கொளுத்திப் போட்டிருந்தால் நாங்கள் உருப்பட்டிருப்போம். எங்களுக்கு உங்களிடமிருந்து வேண்டியது வேதமில்லை, டாலர்'' என்றேன்.

அவன் மனம் புண்பட்டுவிட்டதுபோலும். அதன் பின் அவன் மவுனமாகவே வந்தான்

சற்று நேரத்தில் 'வெல்கம் டு வேதபுரி' என்றும் 'ஸுஸ்வாகதம்' என்றும் ஆங்கிலத்திலும், சமஸ்கிருதத்திலும் போர்டு போட்டு உறுதியாகக் கம்பி வேலி கட்டி, அடர்த்தியான காட்டுப்பிரதேசம் தெரிந்தது. பாதை இன்னும் குறுக, சிற்சில மான்கள் துள்ளியோடின. தூரத்

தில் குடிசைகள் தெரிந்தன. எங்கிருந்து இவர்களுக்கு ஓலை கிடைத்தது என்று ஆச்சரியமாக இருந்தது. நாங்கள் இறங்கி நடக்க, கொஞ்சம் சதுரமானபர்ணசாலைபோன்ற இடத்தில் புகைந்து கொண்டிருந்த செங்கற்களால் சிறகு விரிந்த பறவை வடிவத்தில் ஒரு இடம் அமைந்திருக்க, அதைச் சுற்றிலும் அக்னி சதா எரிந்து கொண்டிருக்க அதில் நெய்—ஆம்; நெய் ஊற்றிக்கொண்டு சிற்சில வெள்ளைக்கார, செம்பட்டைத் தாடி முனிவர்கள் 'ஓம்ஓம்' என்று மந்திர உச்சாடனம் செய்துகொண்டு இருந்தார் கள்.

''அக்னி சயனக்கிரியை'' என்றான் என்னுடைய அமெரிக்க பாரத்வாஜன்! சற்று மேற்புறம் நோக்கியதில் வெளிர் மஞ்சளில் புடவை அணிந்த வெள்ளைக்கார ஸ்திரீகள் நின்றுகொண்டிருக்க அவர்களுக்கு மிக அருகே ஐந்து பசுக்களின் தலைகள் வரிசையாக வைக்கப் பட்டிருந்தன அவைகளின் நெற்றியில் குங்குமம் இட்டி ருக்க வேதகோஷம் உச்சஸ்தாயியில் இருந்தது. ''அசுவினி இந்திர தேவர்களுக்குப் பலி'' என்றான். அந்த இடத் தைக் கடந்து சென்று ஆசிரம நிழலில் மரத்தடியில் இருந் தவரிடம் சென்று, ''மஹாப்பிரபு! அழைத்து வந்திருக் கிறேன்'' என்றான்.

'நல்லது. என்ன பெயர்?'' என்றார் அந்த ரிஷி. பூனைக்கண், செம்பட்டைத்தாடி, டெக்ஸாஸ் வகை ரிஷி! கமண்டலம். ருத்திராட்சம், சடாமுடி நீலல், எனக்கு எந்த யுகத்தில் எந்தத் தேசத்தில் இருக்கிறோம் என்கிற குழப்பம் ஏற்பட்டுவிட்டது.

''சங்கர நாராயணன்'' என்றேன்

''அந்தண குலமா?''

''ஆம்.''

''மிக நல்லது! பிங்கலை! இவனை அழைத்துப் போ'' என்க. அந்தப் பெண்களில் ஒருத்தி புன்னகையுடன் என்

அருகில் வந்து, "வாருங்கள்" என்றாள். ப்ரா அணியாத தால் முலை குலுங்குவது வேதகாலமோ கம்ப்யூட்டர் காலமோ? இதமாகத்தான் இருந்தது. பிங்கலை என்னை மற்றொரு நாலாபுறமும் திறந்த இடத்துக்கு அழைத்துச் சென்று சிவப்பாகத் துண்டும் வேட்டியும் கொடுத்து, "அணிந்து கொள்ளுங்கள்" என்றாள்.

"எதற்கு?"

"உங்கள் நவீன உடை யாகத்துக்குப் பொருந்தாது" என்றாள்.

"அணிந்து விடுவீர்களா?" என்றேன்.

"ஓ, அதற்கென்ன!" என்று என்னருகில் வந்து என் மேல் பட்டு என் சட்டையை நீக்கினாள். கழுத்தில் மஞ்சள் பூக்களால் மாலையிட்டு நெற்றியில் திலகமிட்டாள்.

"என்ன யாகம்?" என்றேன்.

"பாரத்வாஜன் சொல்லவில்லை? பசிக்கிறதாயிருந் தால் பழங்கள் உண்ணலாம்."

"சொல்லவில்லை. என்ன யாகம்?"

"புருஷமேதம்."

"அப்படியென்றால்?"

அவள் என்னை நிமிர்ந்து பார்த்து, "ப்ராஜாபதி சொல்லவில்லை?" என்றாள்.

"இல்லையே. ஏன்?"

"புருஷமேதத்தில் நூற்றி எண்பத்திநான்கு வகை உண்டு! யஜுர் வேதத்தில் முப்பதாவது பகுதியில் உள்ளது இன்றைக்கு. நீங்கள் பாடகரா?"

"இல்லை. ஏன்?"

''பிராமணரா?''

''ஆம்.''

''புரிகிறது. புரோகிதருள் சிறந்தவனாக ஆகப் பலி யிடப் போகிறார்கள்!''

''வெய்ட் எ மினிட்! என்ன சொன்னாய்? பலியா?',

''ஆமாம். உன்னைப் பலியிடப் போகிறார்கள். புருஷ மேதம் என்பது அதே. அரசர்களுக்கு வீரனை, துறவிகளுக்கு சூத்திரனை, இருளுக்குக் கள்வனை, காமத் திற்கு விபசாரியை, சொர்க்கத்திற்கு வழுக்கைத் தலை யனை...இப்படி யஜுர் வேதத்தில் நியதிகள் இருக்கிறது.''

''யூ ம்ஸ்ட் பி ஜோக்கிங்'' என்றேன் சிரித்துக் கொண்டே.

' இல்லை'' என்றாள். என் கையைப் பின்பக்கத்தில் கட்டினாள். ''அழைத்துச் செல்லுங்கள்'' என்றாள்.

ஆறுபேர் என்னை நெருங்கினார்கள்.

ஃ ஃ ஃ